அறக்கள வேள்வி செய்யாது யாங்கணும்
மறக்கள வேள்வி செய்வோய் ஆயினை " (பக். 164—5)

என்று தொடங்கி, யாக்கை, செல்வம், இளமை முதலியவற்றின் நிலையாமை விளங்கக் கூறி,

"விண்ணோர் உருவின் எய்திய நல்லுயிர்
மண்ணோர் உருவின் மறிக்கினும் மறிக்கும்;
மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்
மிக்கோய்! விலங்கின் எய்தினும் எய்தும்;......
ஆடுங் கூத்தர்போல் ஆருயிர் ஒருவழிக்
கூடிய கோலத்து ஒருங்குநின் றியலாது;
செய்வினை வழித்தால் உயிர்செலும் என்பது
பொய்யில் காட்சியோர் பொருளுரை; ஆதலின்...

நீ பெரிய வேள்வி செய்தல் வேண்டும்;

நாளைச் செய்குவம் அறம்,எனின், இன்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும்;
இதுவென வரைந்து வாழுநாள் உணர்ந்தோர்
முதுநீ ருலகில் முழுவதும் இல்லை " (பக். 165 – 6)

என்று கூறி முடிக்கின்றான். செங்குட்டுவனும் வேள்வி செய்கின்றான்.

முடிவில், கண்ணகி கோயிற்கு வந்த தேவந்தி, செட்டி மகளிர் முதலியோரால் நிகழ்ந்தவற்றைக் கண்டு செங்குட்டுவன் பெரு வியப்பெய்த, மாடலன் அதுவே வாயிலாக, அவனுக்கு அறமுறைக்கக் கருதி, " கோவலன் தாயும், கண்ணகி தாயும் மாதரியும் நல்லறம் செய்யாமையின் செட்டியொருவனுக்குச் சிறுமகளாயினர்;

நற்றிறம் புரிந்தோர் பொற்படி எய்தலும்,
அற்புளம் சிறந்தோர் பற்றுவழிச் சேறலும்
அறப்பயன் விளைதலும் மறப்பயன் விளைதலும்
பிறந்தவர் இறத்தலும் இறந்தவர் பிறத்தலும்
புதுவ தன்றே; தொன்றியல் வாழ்க்கை," (பக்.178—9)

என்று தெளிவித்து, மறுவலும், அச் செங்குட்டுவனை நோக்கி, "அரசே,

ஆனேறு ஊர்ந்தோன் அருளின் தோன்றி,
மாநிலம் விளக்கிய மன்னவ னாதலின்,
செய்தவப் பயன்களும் சிறந்தோர் படிவமும்
கையகத் தனபோல் கண்டனை யன்றே" (பக். 179)

என்று சொல்லி, அவனை அறத்தாற்றில் நிற்கப் பண்ணுகின்றான்.

4. செங்குட்டுவன் :—இவன் வரலாறு இந்நூலாசிரியர் வரலாறு கூறுமிடத்தும், மாடலன் செய்தி கூறுமிடத்தும் ஓராற்றால் விளங்குகின்றன. இவன் மறம் மிக்க வேந்தன். இவன் தன் தம்பி இளங்கோவுடன் தந்தைபால் இருக்கும்போது, கணி யொருவன் போந்து, இளங்கோவுக்கும் அரசாளும் குறிப்புண்மை யறிந்து கூறக், கேட்டமாத்திரையே கண் சிவந்தது. காய் சினம் பொங்கிற்று. தன் உடன் பிறந்து உடன் வளர்ந்து உடனொழுகும் இளங்கோவின் உள்ளப்பான்மையை உணராது இவன் சினங்கொண்டான். இதனை, "அரசாளுரிமை இளையோற் குண்டெனஉளைவனன் கணி வெகுண்டு அழுக்காற் றொழுக்கத்து இழுக்கும் நெஞ்சினன், கண் எரி தவழ அண்ணலை நோக்கும்" என அடியார்க்கு நல்லார் அறிவிக்கின்றார்.

இதுவேயன்றி, தான் பற்றிக் கொணர்ந்த ஆரியமன்னரை ஏனைச் சோழ பாண்டிய வேந்தர்க்குக் காட்டி வருமாறு விடுப்ப, அவர்களைக் கொண்டு சென்றோர் அவ்வண்ணமே காட்டித் திரும்ப வந்து, சோழ மன்னனும் பாண்டிய வேந்தனும்

அமர்க்களம் அரசன தாகத் துறந்து
தவப்பெருங் கோலம் கொண்டோர் தம்மேல்
கொதியழல் சீற்றம் கொண்டோன் கொற்றம்
புதுவது" என்றனர் (பக். 164)

என்று கூறினர். அது கேட்டலும், "தாமரைச் செங்கண் தழல் நிறம் கொள்ள" அச் செங்குட்டுவன் கொண்டசினம் சொல்லும் தரத்ததன்று; அக்காலை மாடலன் ஆங்கிருந்து தகுவன கூறி அவன் கருத்தை மாற்றாதிருந்திருந்தால், இவ் வரலாறே வேறு வகையாகச் சென்றிருக்கும்

தமிழ் வேந்தரை ஆரிய மன்னர் இகழ்ந்து பேசினர் என மாதவர் சிலர் கூறக் கேட்டதும் செங்குட்டுவனுக்கு உண்டாகிய சினம், காலம் கருதி அமைந்து கிடந்து, கண்ணகிக்குக் கல் கொணர நேர்ந்தபோது எழுந்து நிற்கிறது. அப்போது அவன்,

"இமையத் தாபதர் எமக்கு ஈங்குணர்த்திய,
அமையா வாழ்க்கை அரைசர் வாய்மொழி
நம்பால் ஒழிகுவ தாயின் ஆங்கஃது
எம்போல் வேந்தர்க்கு இகழ்ச்சியும் தருஉம்" (பக். 145)

என்று கூறி, மறனிழுக்கா மானமுடைமையைப் புலப்படுக்கின்றான். அவன், அக்காலை கூறிய வஞ்சினம், நெஞ்சிற்கு மிக்க மருட்கையைப் பயக்கின்றது.

"வடதிசை மருங்கின் மன்னர் முடித்தலைக்
கடவுள் எழுத ஓர் கற்கொண் டல்லது
வறிது மீளும் என் வாய்வா ளாகின்,
செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப்
பகையரசு நடுக்காது பயங்கெழு வைப்பில்
குடிநடுக்குறூஉம் கோலேன் ஆகுக" (பக். 145)

என்பது அவ் வஞ்சின வாய்மொழியாகும். அவ்வஞ்சினமும் தப்பாமே செய்து முடித்தான் இச் செங்குட்டுவன்.

இவ்வஞ்சினம் மொழிந்தபோது மாடலன் ஆங்கில்லை. ஆசான் வேறொருவன் இருந்து பொருந்தாக் கூற்றொன்று புகலுகின்றான். "அவ் வடவாரிய மன்னர் இகழ்ந்து பேசியது நின்னையன்று; ஏனைச் சோழபாண்டியரையேயாகும்.

"அஞ்சினர்க் களிக்கும் அடுபோ ரண்ணல், நின்
வஞ்சினத் தெதிரும் மன்னரும் உளரோ?
இமைய வரம்ப! நின் இகழ்ந்தோ ரல்லர்;
அமைகநின் சினம்"

என்பது அவ்வாசானுடைய உரை. ஆனால், அவன் உரையை இச் செங்குட்டுவன் ஏற்றுக் கொள்ளவில்லை யென்பதை வரலாறு கூறுகின்றது.

இனி, இவன் பெற்றுள்ள ஏனை வெற்றிச் சிறப்புக்களை உரைக்கின் இம் முன்னுரை பேருரையாய் விரியும். அவை மிகப் பலவாகும்.

இவன் சிவனிடத்தில் மாறா அன்புடையவன். இவன் இமயம் நோக்கிப் புறப்பட்டபோது, திருமாலின் சேடம் கொணர்ந்து சிலர் கொடுப்ப, அதனைத் தன் மணிப்புயத்தே பெய்து கொண்டான். அதற்குக் காரணம் கூறப் புகுந்த இளங்கோவடிகள்,

"ஆடக மாடத் தறிதுயி லமர்ந்தோன்
சேடம் கொண்டு சிலர்நின் றேத்தத்
தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்,
ஆங்கது வாங்கி அணிமணிப் புயத்துத்
தாங்கின னாகித் தகைமையின்" (பக். 147)

சென்றான் என்று கூறுகின்றார். மாடலன் ஒருகால் இச்செங் குட்டுவனை நோக்கிக் கூறுமிடத்து, "ஆனேறு ஊர்ந்தோன் அருளினில் தோன்றி, மாநிலம் விளக்கிய மன்னவனாதலின்" என்று கூறுகின்றான்.

இவன் அறிஞருடன் சொல்லாடுங் காலத்து மிக்க கம்பீர மாகப் பேசும் பண்பு படைத்தவன். மாடலன், கண்ணகி வரலாற்றை மிக்க சுருக்கமாகக் கூறக் கேட்டதும்,

"பகைப்புலத் தரசர் பலர்ஈங் கறியா
நகைத்திறங் கூறினை, நான்மறை யாள!
யாது நீ கூறிய உரைப்பொருள் ஈங்கு"

என்கின்றான். இதன்கண், "நான் அறியாத நகையென்றது மன்னர் பலரும் அறியாத என்றான், இராசபாவத்தாலே" என்று உரைக்கின்றார் அரும்பத வுரைகாரர்.

செங்கோல் கோடிய பாண்டியன் செய்தி கேட்டதும், இச் செங்குட்டுவன் கூறும் கூற்று நம்மனோர்க்குப் பெரு மிதத்தைத் தருகின்றது. அது,

"எம்மோ ரன்ன வேந்தற்கு உற்ற
செம்மையின் இகந்தசொல் செவிப்புலம் படாமுன்
உறுபதிப் பெயர்த்தமை உறுக ஈங்கென
வல்வினை வளைத்த கோலை, மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது" (பக். 140)

என வருவதாகும். இம்மட்டில் நில்லாது, இன்னோரன்ன வழக்கிற்கு இடனாகி, அரசரை வருத்தும் அரசியலின் தன் மையைச் செங்குட்டுவன் நன்கு உணர்ந்திருக்கின்றான். சீத்தலைச் சாத்தனார் மதுரை நிகழ்ச்சியை விரியக் கூறக் கேட்டு மனம் வருந்திய இவன், பாண்டியன் உயிர் துறந் ததை நினைத்து மேலே காட்டியவாறு கூறி,

"மழைவளம் கரப்பின் வான்பே ரச்சம்,
பிழையுயி ரெய்தின் பெரும்பே ரச்சம்,
குடிபுர வுண்டும் கொடுங்கோ லஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதகவு இல்" (பக். 140)

என்று கூறுகின்றான்.

5. கண்ணகி*: கண்ணகியாரின் காற்சிலம்பே இப்பே ரிலக்கியத்துக்குப் பெயராவது. இவர் வடிவில் திருமகளையும், கற்பில் வடமீனையும் நிகர்ப்பர் என அவரை யொத்த மகளி

* கண்ணகி யென்னும் பெயர் பண்டைத் தமிழ் மகளிர்க்கு இடப் பெற்றுப் பயில வழங்கிய பெயர்களுள் ஒன்று. வையாவிக்கோப் பெரும் பேகன் என்னும் வள்ளலின் மனைவியார் பெயரும் கண்ணகி யென்பது புறநானூற்றால் தெரிகின்றது. ஒருகால், இக்கண்ணகியாரும் கணவனை பெரும்பேகனால் துறக்கப்பட்டுப் பின்பு அரிசில்கிழார், கபிலர், பரணர்

ரால் பாராட்டப்படுபவர். நற்குண நற்செய்கை மிக வுடைய வர். இவரது உருநலனும் மனை மாண்பும் கோவலனுக்கு மிக்க இன்பத்தைத் தருகின்றன. அவன் இவரை, "அரும் பெறற்பாவாய், ஆருயிர் மருந்தே, பெருங்குடிவாணிகன் பெரு மடமகளே" எனப் பாராட்டிப் பரவுகின்றான். இவர் கற்புக் கடம்பூண்ட பொற்புடைத் தமிழ்மகள் என்பதைப் பல விடங்களில் இவர் கூறும் சொற்களால் இனிது தெளியலாம்.

கணவனாகிய கோவலன், காதலொழுக்கத்துக் கண்ணிய நெறியால் வாராது, பெற்றோர் புணர்ப்பவந்த காதலனாயினும், அவன்பால் இவர் கொண்டொழுகிய காதலொழுக்கம் தமிழ் வழங்கும் காதலின்ப ஒழுக்கமாகவே திகழ்கின்றது. அவன் மாதவி வயப்பட்டு மயங்கித் தன்னைப் பிரிந்து ஒழுகிய காலத்து, கணவருவப்ப அணியும் அணிகலன்களை இவர் அணியவேயில்லை. இதனை, அடிகள்,

"அஞ்செஞ் சீறடி அணிசிலம் பொழிய,
மென்துகில் அல்குல் மேகலை நீங்க,
கொங்கை முன்றில் குங்குமம் எழுதாள்
மங்கல அணியின் பிறிதணி அணியாள்
கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்" (பக்.14)

என்று கூறுகின்றார்.

கோவலனது பிரிவாற்றாது வருந்தி மெலிந்த கண்ணகி யார் ஒருநாள் தீக்கனாக் கண்டு தன் தோழி தேவந்திக்குத் தெரிவிப்ப, அவள், "பிரிந்த கணவனைப் பெறக் கருதும் மக

முதலிய புலவர் பெருமக்களின் உதவியால் கணவன்பால் கூட்டப் பட்டனர்.

இனி, நம் கண்ணகியார் தம் மார்பொன்றைத் திருகியெறிந்த செய்தி போல்வதொரு செய்தி நற்றிணையில் ஆசிரியர் மதுரை மருதனிளநாகனாரால் குறிக்கப்பெறுகின்றது. "இதணத் தாங்கண், ஏதிலாளன் கவலை கவற்ற, ஒரு முலையறுத்த திருமா வுண்ணிக், கேட்டோ ரனைய ராயினும், வேட்டோ ரல்லது பிறர் இன்னாரே" (நற். 216) என்பது அக்குறிப்பு. இதன் உரை காரர் திருமாவுண்ணி யென்றது நம் கண்ணகியாரையே என்று உரைக் கின்றார். இஃது ஆராய்தற்குரியது.

ளிர், கானற்கண் உள்ள சோமகுண்டம் சூரியகுண்டமென்னும் துறைமூழ்கிக் காமவேள் கோட்டம் தொழுவர் ;

> 'காமவேள் கோட்டம் தொழுதார் கணவரொடு
> தாமின் புறுவர் உலகத்துத் தையலார்
> போகம்செய் பூமியினும் போய்ப்பிறப்பர்' (பக். 44)

யாம் ஒருநாள் ஆடுதும், வருக" என்கின்றாள். அவட்கு நம் கண்ணகியார், "கணவனையல்லது பிற தெய்வங்களைத் தொழுதல் கற்புடைய மகளிர்க்குத் தீது" என்ற கருத்தால், "அது பீடன்று" என்று மறுத்துவிடுகின்றார்.

அக்காலை, திரும்பப் போந்த கோவலன், தன் காதற் குறிப்புத் தோன்றும் மொழிகள் சிலவேனும் கூறலாம் ; கூறிற்றிலன். துவண்ட மேனியும் சோர்ந்த முகமும் கொண்டு அவர் எதிரில் நிற்பவன், கண்ணகியார் செய்யும் வழிபாட்டையும் நோக்கிற்றிலன் ; அவன் உள்ளம் கண்ணகியின் "வாடிய மேனி வருத்தங் கண்டு" பெருங்கலக்கம் எய்துகின்றது. உடனே, அவன் மனத்தே மிக்க நாணம் தோன்றி அலைக்கின்றது ;

> "சலம்புணர் கொள்கைச் சலதியோ டாடிக்
> குலந்தரு வான்பொருட் குன்றம் தொலைத்த
> இலம்பாடு நாணுத் தரும் எனக்கு" (பக். 45)

என்று சொல்கின்றான். காமக்களியாட்டில் மயங்கினார்க்கு வேறு நாணமேது ; நல்ல காதலேது. பொருளின்மையொன்றே அவரை வருத்தக்கூடியது. அவன் வருத்தத்தின் பெற்றியை யறிந்த கண்ணகியார்,

> "நலங்கேழ் முறுவல் நகைமுகம் காட்டிச்
> சிலம்புள கொள்ளும்"

என்று மொழிகின்றார். செவிவழி சென்று அவன் நெஞ்சு துளைத்து வருத்தும் சுடுசரம் இதனிற்காட்டில் அக்கோவலற்கு வேறு வேண்டாவே.

ஆனால், அவன், இச் சிலம்பையே முதலாகக் கொண்டு, மதுரைக்குச் சென்று பொருளீட்டக் கருதித் தன்னுடன் வருமாறு அழைக்கின்றான். இவ்வாறு தன் மனைவியையும் உடன் அழைத்தது இவன் வரலாற்றில்தான் புதுமையாய்க் காணப்படுகிறது. அக் கண்ணகியாரும் அவன் சொற்படியே புறப்பட்டுவிடுகின்றார்.

நெடிது நடந்தறியாப் பெருஞ் செல்வத் திருமகளாகிய கண்ணகியார் அவனுடன் ஒரு காவதம் சென்று, ஆங்கிருந்த கவுந்தியடிகளின் தவப்பள்ளியை யடைந்து கோவலனை அன்புகனிய நோக்கி, முள்ளெயிறு இலங்க முறுவலித்து,

"மதுரை மூதூர் யாது?" என வினவ,

கோவலன்,

> "ஆறைங் காதம் அகல்நாட் டும்பர்,
> நாறைங் கூந்தல், நணித்து" (பக். 47)

என்று விடையிறுக்கின்றான். அவனது நயமென் மொழியினைக்கேட்டு உவகை நகை செய்து, கவுந்தியடிகளை வணங்கி வழிபடுகின்றார். வழியில் கோவலன் கண்ணகியார்பால் காட்டிய காதல், சான்றோராகிய கவுந்தியடிகள் உணர்ந்து, "கயல்நெடுங் கண்ணி காதற் கேள்வ" எனப் பாராட்டப் பெறும் பேறு பெறுகின்றது.

உயிரினும் சிறந்த நாணும், அதனிற் சிறந்த கற்பும் உருக்கொண்டாற்போலும் உயர்மகளாதலின், கண்ணகியார், வம்பப்பரத்தையும் வறுமொழியாளனும் கவுந்தியடிகள்பால் தீமொழி பகரக்கேட்டதும், உடல் நடுங்கி மனங் கூசித் தன் செவி புதைத்து நிற்கின்றார். அது காணப்பொறாமையால் கவுந்தியடிகள் அத் தீயோர் இருவரையும், "முள்ளுடைக் காட்டில் முதுநரியாக" எனச் சபிக்கின்றார். மேலும், வேட்டுவர் கூட்டத்துட் சாலினி தெய்வமருள் கொண்டு, கண்ணகியாரைப் பார்த்து, "இவளோ ஒரு மாமணியாய் உலகிற்

கோங்கிய திருமாமணி" என்று சிறப்பித்துப் பாராட்டிக் கூறுகின்றாள். அதுகேட்டதும், கண்ணகியார், "பேதுறவு மொழிந்தனள் மூதறிவாட்டி" என்று கோவலற்குப்பின்னே சென்று ஒடுங்கி நிற்கும் தோற்றம் உள்ளக்காட்சியில் உவகை செய்கின்றது.

கண்ணகியார் மாதரியென்னும் ஆய்ச்சி வீட்டில் இருந்து, அவள் உதவிய காய், கனி, அரிசி முதலியவற்றால் இனிய உணவு சமைத்துக் கோவலற்கு இடும் திறம் மிக்க இன்பம் தருவதாகும். கோவலனைப் பனையோலைத் தடுக்கில் அமர்வித்து,

தண்ணீர் தெளித்துத் தன் கையால் தடவிக்
குமரிவாழையின் குருத்தகம் விரித்து ஈங்கு
அமுதம் உண்க, அடிகள்! ஈங்கு என

அவர் மொழியும் மொழிகள் இற்றை நாளை மகளிர்க்கு இனிய நல்லுரையாகும்.

உணவு கொண்டபின் கோவலன், கண்ணகியாரின் வழி நடை வருத்தத்திற்கு வருந்தியும் தன் பெற்றோரை நினைந்தும் சில கூறுகின்றான். அவற்றுக் கண்ணகியார் தம் பேரறிவுடைமை சிறக்க ஒரு நல்லுரை கூறுகின்றார்.

"அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை" (பக். 92)

நும் பெற்றோர், அன்பு சிறந்து அருள்மொழி வழங்கி இனிது பாராட்டி வந்தனர். என் பொய்ம்முறுவல் கண்டு, என் உள்ளூறு வருத்த முணர்ந்து வருந்தினர். அவர் அவ்வாறு வருந்தவும் நீவிர்,

போற்றா ஒழுக்கம் புரிந்தீர்; யாவதும்
மாற்றா உள்ள வாழ்க்கையே னாதலின்,
ஏற்றெழுந்தனன் யான்"

என்று கூறித் தெருட்டுகின்றார்.

இதுகாறும் காட்டியவற்றால் கண்ணகியாரின் கற்பும் நற்பாலொழுக்கமும், மெல்லியற் பொறையும் யாம் தெளியக் காண நிற்பது விளங்கும். கோவலனது பரத்தைமையும் பிரிவும் பெரிது ஆற்றியிருந்த இக்கண்ணகியார், கோவலன் கொலையுண்டது கேட்டதும், ஆற்றாமையின் வரம்பு கடந்து விடுகின்றார். அவரது ஆறிய கற்பு சீறிய கற்பாக மாறுகிறது; மெல்லியற் பொறை வல்லியற் பொறையாகின்றது; மென் மொழி வழங்கிய மலர்வாயில் வன்மொழி வருகிறது; அருள் கிடந்த உள்ளத்தே மருட்கை இடம் பெறுகிறது; அழுகை யும் அவலமும் அவரைக் கவர்ந்து கொள்கின்றன; பெண்மை யின் வரம்பாகிய பெருநாண் நெகிழ்ந்து நீங்குகின்றது.

> "பொங்கி எழுந்தாள், விழுந்தாள், பொழிகதிர்த்
> திங்கள் முகிலொடும் சேண் நிலம் கொண்டெனச்
> செங்கண் சிவப்ப அழுதாள், தன் கேள்வனை,
> எங்கணா என்றூ இனைந்தேங்கி மாழ்குவாள்"
>
> (பக். 108)

என அடிகள் அழகுறக் காட்டுகின்றார்.

கண்ணகியார்க்கு இவ்வுலகமே புல்லிதாகத் தோன்று கிறது; எதிர்காலம் புலனாகிறது; கணவனை இழந்த மகளிர் கைம்மை நோன்பு நோற்று வாழும் காட்சி தெரிகிறது; மன் னவன் ஆட்சியில் நேர்ந்த தவறும் இனிது விளங்குகின்றது. தன்னை நோக்குகின்றார், "அன்பனை இழந்தேன் யான்" என வாய்விட்டு அரற்றுகின்றார்; கைம்பெண் எனத் தான் ஆவது கண்டு அருவருக்கின்றார்; அவலம் மிக மிக அவருள் ளம் திண்ணிதாகின்றது. அறிவு சிறிது அவர் வசம் வரு கிறது. ஏனை மகளிர் காணத் தம் கணவனான கோவலன் கள்வனல்லன் என்பதனை, செங்கதிர்ச் செல்வனைக் கேட்டுத் தெளிகின்றார்; பிறரையும் தெளிவிக்கின்றார்.

மதுரை நகர்க்குட் கைபிற் சிலப்பேந்திப் புகுந்து,

தெருவில் தம்மைக் கண்டு வியந்து நிற்கும் நன்மகளிர் அறிய வன்மொழி சில கூறுகின்றார்.

> "முறையில் அரசன் தன் ஊரிருந்து வாழும்
> நிறையுடைப் பத்தினிப் பெண்டிர்காள்!......
> கள்வனோ அல்லன் கணவன், என் காற்சிலம்பு
> கொள்ளும் விலைப்பொருட்டால் கொன்றாரே,
> ஈதொன்று. (பக். 110)

என் கணவனைச் சென்று காண்பேன்; கண்டு அவன் வாயில் "தீதறு நல்லுரை கேட்பேன்" என்கின்றார். கேளாதொழி யின், அது நன்மகளிர் எள்ளி இகழ்தற்கு இடனாகுமன்றோ; அதனையுணர்ந்து,

> "தீதறு நல்லுரை கேளா தொழிவனேல்,
> நோதக்க செய்தாள் என்று எள்ளல்"

என்று இனைந்து கூறுகின்றார்.

பின்பு இவர் நேரே கொலைக்களம் சென்று கோவலன் உடல் கொலையுண்டு குருதி நிறைந்து பொடியாடிக் கிடப்பது கண்டு ஆறாத் துயரமுற்று அவலித் தழுகின்றார். பத்தினிப் பெண்டிர், சான்றோர், தெய்வம் என்ற இவற்றை நினைந்து நோகின்றார். கோவலன் உடலை எடுத்துத் தழீஇக்கொள் கின்றார். அவன் உயிர் பெற்று, கண்ணகியாரின் "நிறைமதி வாண்முகம் கன்றியது" என்று அவர் கண்ணீரைக் கையால் மாற்றுகின்றான். அவர் அவன் திருந்திய அடியைத் தன் வளைக்கையால் பற்றுகின்றார். உடனே, அவன், "இருக்க" என்று சொல்லிவிட்டு விண்ணுலகு சென்று விடுகின்றான். கண்ணகியார்க்குக் கலக்கம் பெரிதாகின்றது. கண்ணீர் ஆறாகச் சொரிகிறது. உள்ளம் கொதிக்கின்றது. உடல் நடுங்குகின்றது; சுற்று முற்றும் கண்களைப் பரக்க விழித் துப் பார்க்கிறார்; "போய் எங்கு நாடுகேன்" என்று புகல் கின்றார். கோவலன் கொலைக் காரணத்தை நினைக்கின்றார்.

அவர் முகம் சிவக்கின்றது ; வாயிதழ் துடிக்கின்றது ; கண்கள் சிவந்து காய் சினங் காட்டுகின்றன ; கணவன் நினைவும் இடையே நிகழ்கின்றது.

"காய்சினந் தணிந்தன்றிக் கணவனைக் கைகூடேன் ;
தீவேந்தன் றனைக்கண்டு இத் திறம்கேட்பல் யான்"
(பக். 113)

என்று சொல்லிக்கொண்டு அரசன்பால் வருகின்றார்.

இவரது காய்சினக் கோலத்தைக் கண்டு அச்சமும் வியப்பும் அடையக்கொண்ட, அரசனது வாயிற் காவலன் அரசன்பால், "கொற்றவையோ, பிடாரியோ, பத்திரகாளியோ என்று கூறற்குரியளல்லள், கணவனை யிழந்த ஒரு நங்கை" என்கின்றான். இக்குறிப்பறியாத, கல்லா நாடகமக்கள், எங்கள் பத்தினிக் கடவுளாகிய கண்ணகியாரை, உயிர்க் கொலை வேட்டுத் திரியும் கூளியாக்கி நடித்துத் திரிகின்றனர். இஃது அறிஞர்க்கு எத்துணை அருவருப்பையும் வருத்தத்தையும் தருகிறது, காண்மின்.

அரசன்பால் இவர் வழக்குரைக்கும் திறம் மிக்க நயமும் இலக்கிய நலமும் நிரம்பியதாகலின், அதனை ஈண்டுரைப்பிற் பெருகும்.

வழக்குரை முடிவில் அரசன் இறந்ததும், கோப்பெருந் தேவிக்கு உரியன கூற அவள் இறந்ததும் கண்டபின்னும் கண்ணகியார்க்குக் காய்சினம் தணிந்திலது ;

"மட்டார் குழலார் பிறந்த பதிப்பிறந்தேன்,
பட்டாங்கு யானுமோர் பத்தினியே யாமாகில்
ஒட்டேன், அரசோடு ஒழிப்பேன் மதுரையும்."
(பக். 119)

என்று மதுரை நகரைத் தீக்கிரையாக்குகின்றார். எரிக்கடவுள் போந்து, "என்னால் விலக்கற் குரியார் யாவர்?" என்று

இரந்து கேட்க, கண்ணகியார், அறத்தாறு நுவலும் பூட்கை குன்றாது,

"பார்ப்பார் அறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்,
மூத்தோர் குழவி எனுமிவரைக் கைவிட்டுத்
தீத்திறத்தார் பக்கமே சேர்க" (பக். 120)

என்கின்றார். வீரபத்தினியாகிய நம் கண்ணகியார் பின்பு மதுராபதியால் பழம் பிறப்புணர்ந்து, செங்கோடு அடைந்து, தன்னைக் கண்டு வினவிய வேட்டுவர்க்கு, "மணமதுரையோடு அரசு கேடுற, வல்வினை வந்து உருத்த காலை, கணவனை அங்கு இழந்து போந்த கடுவினையேன், யான்" என்று கூறி விட்டு, தம்பால் வந்த வானவூர்தியேறி விண்ணுலகு செல்வ தால் தோன்றும் நலம் பலவும் இனி விரிக்கில் மிகப்பெருகும்.

6. **மாதவி**: காவிரிப்பூம்பட்டினத்து நாடகக் கணிகை யருள் சித்திராபதியென்பாட்கு மகள் இம் மாதவி. இவள், ஆடல், பாடல், அழகு என்ற இவற்றுள் ஒன்றிலும் சிறிதும் குறைபாடு இல்லாதவள். ஐந்தாவது வயது தொடங்கிப் பன்னிரண்டாவது வரையில் ஆடலும் பாடலும் அறிவுமிகு கல்வியும் நன்கு பயின்றவள். திருந்திய அறிவும் பொருந் திய கல்வியும் விரிந்த மனமும் உடையவள். கரிகாற் பெரு வளத்தான் முன் நிருமித்த நாடக அரங்கில், இளங்கோவடி கள், இவளை நமக்குக் காட்டுகின்றார். அங்கே,

"பொன்னியல் பூங்கொடி புரிந்துடன் வகுத்தென,
நாட்டிய நன்னூல் நன்குகடைப் பிடித்துக்" (பக். 10)

காண்கின்ற நம் மனம் மகிழத் தன் நாடகநூற்புலமையை நன்கு காட்டுகின்றாள்.

மாதவி கோவலனுடைய தொடர்பு பெற்று, அவன்பால் சிறந்த காதல் கொண்டு ஒழுகுகின்றாள். இதனை, அடிகள்,

"நிலவுப்பயன் கொள்ளும் நெடுநிலா முற்றத்துக்
கலவியும் புலவியும் காதலற்கு அளித்து ஆங்கு

ஆர்வ நெஞ்சமொடு கோவலற்கு எதிரிக்
கோலங் கொண்ட மாதவி" (பக். 14.)

என்கின்றதனால் அறிகின்றோம். இவளோடு கூடியிருக்குங் கால் கோவலன் இன்புற்ற திறம்,

" காதற் கொழுநனைப் பிரிந்தலர் எய்தா
மாதர்க் கொடுங்குழை மாதவி தன்னொடு...
காமக் களிமகிழ் வெய்திக் காமர்
பூம்பொதி நறுவிரைப் பொழிலாட் டமர்ந்து...
பூமலி கானத்துப் புதுமணம் புக்கு,
புகையும் சாந்தும் புலராது சிறந்து,
நகையா டாயத்து நன்மொழி திளைத்துக்
குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரத்தரொடு
திரிதரு மரபின் கோவலன்" (பக். 19)

என்பதனால் இனிது விளங்குகிறது.

இந்திரவிழாவில் இம் மாதவி அரங்கேறி, திருமாற்குரிய தேவபாணிமுதல், திங்களைப் பாடும் தேவபாணியீறாகப் பல வகைத் தேவபாணி பாடி, பாரதி, கொடுகொட்டி, பாண்ட ரங்கம், முதலாகவுள்ள பதினொருவகைக் கூத்தும் ஆடி மக்களைக் களிப்பிக்கின்றாள். அவளுடைய பாடலும் ஆடலும் அழகும் மக்கள் மனத்தை இன்புறுத்தக் கண்டு கோவலன் "ஊடற்கோலம்" உறுகின்றான். இங்கேதான், அவன் மாதவியைப் பிரிதற்குத் தோற்றுவாயாகிய மனப்பிளவு தோன்றுகிறது.

இதனை மாதவி தெளிய உணராது, வாளாது கூடற் குரிய ஊடலென்றே கருதி யொழிகின்றாள். அவனுவக்கு மாறு தனது கூந்தல் முதல் சீறடி ஈறாகப் பலவகையுறுப்பும் அழகு திகழப் புனைந்து கொள்ளுகின்றாள். இக்கோலம் கொண்டது அவன் உவக்குமாறே யன்றித் தன்னைக் காண் பார் மகிழுமாறு அன்று என்பதை அடிகள், "ஊடற் கோல மோடு இருந்தோன் உவப்ப" (கடலாடு. 75) என்றும்,

“கூடலும் ஊடலும் கோவலற் களித்துப், பாடமை சேக்கைப் பள்ளியுள் இருந்தோள்” (கடலாடு. 109—10) என்றும் கன்குவற்புறுத்துவதனுல், இம்மாதவி, நாடகமகளாயினும் குலமகட்குரிய கற்பும் பொற்பும் உடையளாய் இருந்தமை தெளிய விளங்குகிறது. கடற்கானற்குச் செல்லும்போதும் இம்மாதவி, கோவலனுடன் ஒரே ஊர்தியிற் செல்லாது, அவன் ஒரு கோவேறு கழுதைமேே விவர்ந்து வர, தானோர் வையமேறிச் செல்கின்றுள்.

மாதவி கடற்கானற் சோலையில் இருந்தபோது, தொடக்கத்தே தன் கையிலிருந்த யாழை அவன்பால் தந்து அதனை இசைத்துப் பாடுமாறு வேண்ட, அவனே குறிப்பு வேறுடைய பாட்டுக்களை முதற்கண் பாடலுறுகின்றுன். இவற்றைக் கேட்ட மாதவி, இசையின்பத்தோடு பொருள் நலமும் தேர்ந்து, “இவன் மனத்தே வேறு குறிப்பு உளது போலத் தோன்றுகிறது; அவ்வாறு இருத்தற்கு இடமில்லை; இவன் தன் நிலைமயங்கினன்” என்று உட்கொண்டு “கலவியால் மகிழ்ந்தாள்போல் புலவியால் யாழ் கை வாங்கித், தானும் ஒரு குறிப்பினள்போல்” பாடுகின்றுள். இப்பாட்டுக் குறிப்பை நன்கு ஆராய்ந்து காண்டற்குரிய கோவலன் அதனைச் செய்யாதது அவன் குற்றமே. குறிப்பு வேறு உண்மை கண்டதும், அவன் உள்ளத்தே பொறுமை குடிகொண்டுவிடுகிறது; அறிவு மழுங்கிவிடுகிறது; வெருளி எழுகின்றது. “கானல்வரி யான் பாட, தான் ஒன்றின்மேல் மனம் வைத்து மாயப்பொய் பல கூட்டும் மாயத்தாள் பாடினுள்” என்று நினைக்கின்றுன். நினைத்தவன் சிறிதேனும் அங்கே இருந்தானு எனின் இல்லை; உண்மையிலே அப்போது, பொழுதும் கெடிது கழிந்தது. “பொழுது கழிந்தது, வருக, செல்வோம்” என்றேனும் கூறி, அவளுடன் புறப்பட்டுத் தான் வேண்டுமாயின் தனித்தேகி

யிருக்கலாமன்றோ! அஃதன்றோ ஆடவர்க்குப் பண்பு. சட்டி சுட்டது, கை விட்டது என்பதுபோல, குறிப்பு வேறுபாடு கண்டதும், "பொழுது ஈங்குக் கழிந்ததாகலின் எழுதும் என்று உடனெழாது" சட்டெனத் தனக்குரிய ஏவலர் சூழ் வரத் தான் மட்டில் பிரிந்து ஏகிவிடுகின்றான். மாதவி உண்மை விளங்காளாய்க் கையற்று மனம் வருந்தித் தன் மனையை அடைகின்றாள். இதற்குக் காரணம் ஊழ்வினை என்கின்றார் இளங்கோவடிகள். இதனால், கோவலன் பிரிவுக்கு மாதவி ஏதும் பிழை செய்திலள் என்பது பெறப்படுகிறது.

பின்பு, அவள் கோவலன் பிரிவாற்றாது வருந்தி அவற்குத் தன் தோழி வயந்தமாலை வாயிலாகத் திருமுகம் விடுப்ப, அதனையும் அவன் மறுத்து விடுகின்றான்; அவளோ மனம் வெறாது, "மாலை வாராராயினும், காலை காண்குவம்" என்று எண்ணிக் கையற்று இருந்தொழிகின்றாள். கோவலன் புகார் நகரின் நீங்கித் தன் மனைவியுடன் வேற்று நாட்டிற்குச் சென்றொழிந்தது அறிந்து கோசிகமாணி என்பான்பால் ஓலையொன்று விடுக்கின்றாள். அதனைக் கண்டபின்பே கோவலன், "அவள் எழுதிய இசைமொழியுணர்ந்து தன் தீதிலள்" எனத் தளர்ச்சி நீங்குகின்றான். முடிவில் கோவலன் கொலையுண்டது கேள்வியுற்றுப் புத்தமாதவர்பால் அறம் கேட்டு புத்தபிக்குணியாய் விடுகின்றாள். இவ்வரலாற்றால், அவள் முடிவுகாறும் கோவலனையன்றிப் பிற ஆடவரைக் கருதாத பெருங் கற்புடையவளாய் விளங்கினதை அறிகின்றோம். இதனையறியாது, இக்கால நாடகமாக்கள், மாதவியை வன்கண்மையும் பொருள் வேட்கையும் பொய்யன்புமுடைய 'மாதகி'யாக்கி நடித்துத் திரிகின்றனர்.

7. கவுந்தியடிகள் :—இவர் சமண்சமயத் துறவிகளில் பெண்பாலருள் ஒருவராவர். இவர் சோழ நாட்டில் புகார் நகர்க்கு மேற்கில் ஒரு காவதத் தொலைவில் பள்ளியமைத்து

அறம் புரிந்து வருகையில், தன்பால் வந்த கோவலனையும் கண்ணகியையும் காண்கின்றார். அவர்களைக் கண்டதும், "உருவும் குலனும் உயர்பே ரொழுக்கமும், பெருமகன் திரு மொழி பிறழா நோன்பும் உடையீர்" என்று வினவுவது இவரது நல்லொழுக்கத்தைப் புலப்படுக்கின்றது.

மேலும், இவர் கோவலனை நோக்கிக் கண்ணகியின் மென்மைத் தன்மையை விதந்தோதி மதுரைக் கேகுதலை ஒழிக என விலக்குகின்றார்; அவன் அதனைக் கேளாதொழி யவே, தானும் மதுரைக்கு அவருடன் வர இசைகின்றார்.

வழிகாட்டிச் செல்லுமிடத்து முதற்கண் அவர் மனத்தே கண்ணகியின் அருமையும் மென்மையும் முன்னின்று வருத் தவே, அக் கண்ணகிக்கு அவலம் செய்வனவற்றையே எடுத் தோதி விலக்கிச் செல்கின்றார். ஏனை யுயிர்கள்பால் அவர் கொண்டிருந்த அருள்நிலை மிகப் பெரிது.

"குறுநர் இட்ட குவளையம் போதொடு
பொறிவரி வண்டினம் பொருந்திய கிடக்கை
நெறிசெல் வருத்தத்து நீர்அஞர் எய்தி
அறியாது அடிஆங்கு இடுதலும் கூடும்"

என்றும்,

"எறிநீ ரடைகரை இயக்கந் தன்னில்
பொறிமாண் அலவனும் நந்தும் போற்றாது
ஊழடி யொதுக்கத்து உறுநோய் காணின்
தாழ்தரு துன்பந் தாங்கவும் ஒண்ணா"

என்றும் கூறுவன (பக். 49) அவரது அருளறத்தின் இயல்பை நன்கு தெரிவிக்கின்றன.

சாரணர் தோன்றி அக்கவுந்தியடிகளை நோக்கி,

கழிபெருஞ் சிறப்பின் கவுந்தி காணாய் :
ஒழிகஎன ஒழியாது ஊட்டும் வல்வினை,
இட்ட வித்தின் எதிர்ந்துவந் தெய்தி
ஒட்டுங் காலை ஒழிக்கவும் ஒண்ணா ;

கடுங்கான் நெடுவெளி இடுஞ்சுடர் என்ன
ஒருங்குடன் நில்லா உடம்பிடை யுயிர்கள் (பக். 51)

என்று ஓதி அருகனுடைய பல மாண்புகளையும் எடுத்துரைக்கின்றனர். அவற்றைக் கேட்டதும் கவுந்தியடிகள் கூறுவனவற்றால் அவர் தம் சமய மெய்ப்பொருள்பால் கொண்டிருந்த திண்ணிய பற்று விளங்குகிறது. அவர்,

ஒருமூன் றவித்தோன் ஓதிய ஞானத்
திருமொழிக் கல்லதென் செவியகம் திறவா;
காமனை வென்றோன் ஆயிரத் தெட்டு
நாம மல்லது நவிலாது என் நா;
ஐவரை வென்றோன் அடியிணை யல்லது
கைவரைக் காணினும் காணா என்கண்;
அருளறம் பூண்டோன் திருமெய்க் கல்லது என்
பொருளில் யாக்கை பூமியில் பொருந்தாது;
அருகர் அறவன் அறிவோர்க் கல்லதென்
இருகையும் கூடி ஒருவழிக் குவியா;
மலர்மிசை நடந்தோன் மலரடி யல்லது என்
தலைமிசை யுச்சி தான்அணிப் பொறாஅது;
இறுதியில் இன்பத் திறைமொழிக்கல்லது
மறுதர ஓதி என் மனம்புடை பெயராது; (பக். 52)

என்பது அதற்குத் தக்க சான்றாவதாம். வழியில் வந்து இகழ்வுரை வழங்கிய வம்பப்பரத்தையரைக் குறுநரியாகுக எனச் சபித்ததும், பிறகு சாபவிடை வழங்கியதும் அவருடைய ஆற்றற்குத் தக்க சான்றாகின்றன.

மாடலன் போந்து கோவலற்கு மதுரைக்குரிய நெறி கூறுவான் பிலத்தின் பெற்றியினைக் கூற, கவுந்தியடிகள், 'நலம்புரி கொள்கை நான்மறை யாள, பிலம்புக வேண்டும் பெற்றியீங் கில்லை" என்று மறுத்து,

"வாய்மையின் வழாது மன்னுயிர் ஓம்புநர்க்கு
யாவது முண்டோ எய்தா அரும்பொருள்
காமுறு தெய்வம் கண்டடி பணிய
நீபோ; யாங்களும் நீள்நெறிப் படர்குதும்" (பக். 60)

என்று மொழியும் திறம் அவரது விழைவின்மையைக் காட்டுகின்றது.

தன்பால் கண்ணகியை விடுத்துத் தான் தனியே மதுரை மூதூர்க்குச் சென்று வரவேண்டுமென்று கூறி வருந்திய கோவலனுக்கு அவர் மனைத் தொடர்பின் துன்பமும் இராமன் நளன் முதலியோர் வரலாறும் கூறி, தெருட்டுவது அவரது துறவு நெறியும் அறிவின் ஒட்பமும் நன்கு உணரக் காட்டுகின்றது.

அவர் கண்ணகியை மாதரியென்னும் ஆய்ச்சிபால் அடைக்கலப்படுத்துமிடத்துக் கூறுவன மிக்க இன்பந்தருவன வாகும். கண்ணகியைப் பேணுமாறு இது என்பார்போல், கவுந்தியடிகள் மாதரியை நோக்கி,

"மங்கல மடந்தையை நன்னீ ராட்டிச்
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் தீட்டி,
தேமென் கூந்தல் சின்மலர் பெய்து
தூமடி உடீஇத் தொல்லோர் சிறப்பின்
ஆயமும் காவலும் ஆயிழை தனக்குத்
தாயும் நீயே யாகித் தாங்கு ; (பக். 87)

என்றும், கண்ணகியின் கற்புப் பெருமையைக் குறித்து,

இன்துணை மகளிர்க்கு இன்றி யமையாக்
கற்புக் கடம்பூண்ட இத்தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாம்கண் டிலமால் ;
வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது
நீணில வேந்தர் கொற்றம் சிதையாது
பத்தினிப் பெண்டிர் இருந்த நாடுஎன்னும்
அத்தகு நல்லுரை அறியா யோநீ," (பக். 88)

என்றும், துறவியாகிய தான் தரும் அடைக்கலத்தைத் தாங்கின் வரும் பயன் குறிப்பாராய்,

"தவத்தோர் அடைக்கலம் தான் சிறிதாயினும்
மிகப்பே ரின்பம் தருவது கேளாய்" (பக். 88)

என்றும் கூறுகின்றார்.

இவ்வண்ணம் கண்ணகிபால் பேரன்பு செலுத்திய கவுந்தியடிகள், கோவலன் கொலையுண்டதும் பிறவும் கேட்டு உண்ணு நோன்பிருந்து உயிர்பதிப் பெயர்க்கின்றனர்.

இவ்வாறே பிறர் ஒவ்வொருவருடைய குணம் செயல் களையும் தனித்தனியே காணலுறின், வரம்பின்றிப் பெருகு மாதலின், இம்மட்டில் நிறுத்தி, இவ்விலக்கியத்துள் காட்டப் படும் வரலாறுகள் சில காண்பாம்.

X. வரலாறுகள் :—இதன்கண் சோழவேந்தர் மரபில் தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன், முசுகுந்தன், மனுவேந்தன், கரிகால்வளவன் முதலியோர் செய்த சிறப் புடைச் செய்திகள் குறிக்கப்படுகின்றன. பாண்டி வேந்தருள் வடிம்பலம்ப நின்ற பாண்டியன் செய்தியும், இந்திரன் சென் னியில் வளையுடைத்தவன், கடலில் வடிவேலெறிதலும், இந்திரன் ஆரத்தைத் தான் பூண்டு கோடலும், மேகத்தைச் சிறை செய்தலுமாகிய செய்திகளும், பாண்டியன் கைகுறைத் துக் கோடலும் பிறவும் காணப்படுகின்றன. சேரவேந்தர் இமயத்தில் விற்பொறித்ததும், கடலில் கடம்பரை யெறிந்த தும், நேரிவாயில் என்னுமிடத்து எதிர்த்த வேந்தர் ஒன்ப தின்மரை வென்றதும், முடிவேந்தர் எழுவரை வென்று, அம் முடிப் பொன்னும் மணியும் கொண்டு ஆரமொன்று செய்து சேரவேந்தர் வழிவழியாக மார்பிற் பூண்டொழுகிய தும், ஆரிய மன்னரையும் பிறரையும் வென்றதும் பிறவும் விரியக் கூறப்படுகின்றன.

இவையேயன்றி, இறைவன் மூவெயில் முருக்கியதும், முருகனைப் பயந்ததும், முருகன் சரவணத்தே அறுவர் பாலுண்டு வளர்ந்ததும், அவுணரை வென்றதும், வள்ளியை வேட்டதும், திருமால் வையை மளந்ததும், நரசிங்கமானதும், இராமன் சீதையை இழந்து வருந்தியதும், இராவணனை வென்றதும், கஞ்சனைக் கண்ணன் கொன்றதும், பஞ்சவர்க்

குத் தூது சென்றதும், இந்திரன் மலைகளின் சிறகை யரிந்ததும், அவன் மகன் சயந்தன் என்பான் அகத்திய முனிவனால் சாபமுற்று மூங்கிலானதும், நளன் கதையும், பிறவும் ஏற்றவிடத்து எடுத்துக் காட்டப்படுகின்றன.

இவற்றோடு இடையிடையே துறவிகட்குத் தானம் செய்வோர் பெறும் பேறும், கள்வர் தொழில் வன்மையும் கற்புடைய மங்கையர் சிறப்பும் பிறவும் விளக்கும் வரலாறுகள் பல ஓதப்படுகின்றன.

கோவலன், கண்ணகி, மாதவி, தேவந்தி முதலியோர் பிறப்பு வரலாறும், பழம் பிறப்பும், சுட்டப்படுகின்றன.

XI. இசை நாடகக் குறிப்புக்கள்:—இந்நூல் "இயலிசை நாடகப் பொருட்டொடர்நிலைச் செய்யுள்" எனப் பண்டை ஆசிரியன்மாரால் சிறப்பித் தோதப்படுவதென்று முன்பே கூறினோம். ஆகவே, இதன்கண் இசையும் நாடகமும் குறிக்கப்பெறும் என்பது சொல்லாமலே விளங்கும். இதன்கட் காணப்படும் மங்கல வாழ்த்துப் பாடல், கானல் வரி, வேட்டுவ வரி, ஆய்ச்சியர் குரவை, ஊர்சூழ் வரி, குன்றக் குரவை, வாழ்த்து என்ற பகுதிகள் இசையும் நாடகமும் பயின்றுவரும் பகுதிகளாகும். துன்ப மாலையும் வஞ்சின மாலையும் இசைவிரவி அழுகைச் சுவை மிக்கு நிற்பனவாகும்.

அரங்கேற்று காதை, வேனிற் காதை முதலியவற்றுள் பண்டை இசை நாடக நூற்குறிப்புக்கள் செறிந்திருக்கின்றன. காண்டந்தோறும் இறுதியில் நிற்கும் கட்டுரைகள் இசை நாடகக் குறிப்புக்களைச் சுருக்கமாகக் காட்டுகின்றன.

இவற்றை இப் பேரிலக்கியத்துக்கு உரைகண்ட அரும்பதவுரைகாரர், அடியார்க்கு நல்லார் என்ற இப் பெருமக்கள் வழங்கியுள்ள உரைக் குறிப்புக்களால் ஒருவாறு காண்டல் கூடும். விரிய வுணர்தற்கு ஆகாதவாறு அவ்விசை நாடக

நூல்கள் பலவும் இறந்தொழிந்தன. இக்குறை அறிஞர் உலகிற்குப் பேரவலத்தைச் செய்து நிற்கிறது. இத்துறையில் சுவாமி விபுலானந்தர், மகாமகோபாத்தியாய பண்டித மணி மு. கதிரேசன் செட்டியார், நாவலர் பெருந்தகை பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் முதலியோர் உழைத்து வருகின்றனர். அவர் முயற்சி வெற்றி பெறுவதாக.

XII. **சில வழக்காறுகள்** :—ஆசிரியர் தொல்காப்பியர் காலத்தும், சங்க நூற் காலத்தும், திருவள்ளுவர் காலத்தும் இருந்த திருமணமுறை இச் சிலப்பதிகாரக் காலத்தே மாறியிருக்கிறது. தொல்காப்பியனார் முதலியோர் காலத்தே நிலவிய களவு வழி நிகழ்ந்த காதல் மணம் இளங்கோவடிகள் காலத்தே இல்லையென்பதை, கோவலற்கும் கண்ணகிக்கும் நிகழ்ந்த மணவினை காட்டுகின்றது. "இரு பெருங் குரவரும் ஒரு பெருநாளால் மணவணி காண மகிழ்ந்தனர்" என்பது அடிகள் உரையாகும். மேலும், "மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத், தீவலஞ் செய்வது" என்ற முறை இவர் காலத்தே தோன்றிவிட்டது.

திருமணம் புணரும் மக்களை வாழ்த்துமிடத்தும், கடவுட் பூசை நிகழ்த்துமிடத்தும் பெரும்பாலும் அரசனை வாழ்த்தும் நன்முறை, "செருமிகு சினவேற் செம்பியன், ஒரு தனியாழி உருட்டுவோன் எனவே" (மங்கல.) என்றும், "பொறையுயர் பொதியிற் பொருப்பன் பிறநாட்டுக், கட்சியும் கரந்தையும் பாழ்பட வெட்சிசூடுக விறல் வெய்யோனே" (வேட்டுவ.) என்றும், "உண்டு மகிழ்ந்தானா வைகலும் வாழியர், வில்லெழுதிய இமயத்தொடு, கொல்லியாண்ட குடவர் கோவே" (குன்றக்.) என்றும் வருவனவற்றால் இனிதுணரப் படுகின்றது.

இவ்வாறே, மனையறம் செய்தலும், வாணிப முறையும், கைத்தொழில் வளமும், இசை நாடக நலனும், ஆய்ச்சியர்

வாழ்வும், குன்றவர் செல்வ நிலையும், அரசியல் முறையும் பிறவும் பண்டைத் தமிழ் வாழ்வின் உயிரோவியம் போல இந் நூற்கண் உருக்கொடுத்துக் காட்டப்படுகின்றன. அவற்றை ஈண்டு விரிக்கிற் பெருகும்.

வேள்வி வேட்கும் வழக்கு அடிகள் காலத்தே தமிழ் நாட்டில் இருந்திருக்கிறது. மதுரை நகரிலும், சேரனாட்டிலும் ஆகுதிப் புகையும், மாடலன் வேள்வியும் பிறவும் நாம் காண்கின்றோம்.

அடிகள் காலத்தே, இசை, நாடகம், சமயம், அரசியல் வாணிபம், மருத்துவம் முதலிய துறைகட்கேயன்றி, கனவு, களவு முதலியவற்றின் உண்மை காண்டற்கும் நூல்கள் பல இருந்திருக்கின்றன. கனாத்திறமுரைத்த காதையும், கொலைக் களக் காதையும் இவற்றைப் புலப்படுத்துகின்றன.

அடிகள் காலத்தே வடநூற்புராண இதிகாசக் கதைகள் தமிழ்நாட்டில் வந்துவிட்டிருக்கின்றன. அவை வாயிலாக, வடவர் வழக்க ஒழுக்கங்களுட் பல தமிழகத்தே புகுந்திருக்கின்றன.

முடிப்புரை: இப் பேரிலக்கியத்துக்கு அரும்பதவுரை யொன்றுண்டு; அதன் பிற்போந்த அடியார்க்கு நல்லார் என்னும் பேராசிரியர் அழகியதொரு விரிவுரை எழுதியுள்ளார். அரும்பதவுரை நூல் முழுமைக்கும் உண்டு; அடியார்க்கு நல்லார் உரை தொடக்க முதல் வழக்குரை காதை வரையில் தான் உளது. இவற்றின் இடையே கானல்வரிக்கு இவரது உரை கிடைத்திலது. இஞ்ஞான்று நடுக்காவேரி நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் நன்காராய்ந்து, நூன் முழுமைக்கும் எழுதிய நல்லுரை தமிழ்மக்கள் தவப்பேற்றால் வெளிவந்திருக்கின்றது. இப் பெருமக்களின் உரைநலத்தை முதனூலைப் படித்து இன்புறுதல் வேண்டும். இச்சிறு நூலகத்தும் ஆங்காங்கு ஒன்றிரண்டு காட்டப்பெற்றுள்ளன.

இப் பெருநூல், பண்டைத் தமிழ் வாழ்வும் தமிழறிஞர் அறிவு நுண்மையும் பிறவும் நாம் அறிந்துகோட்டற்கு ஏற்ற பெருமணியாய்த் திகழ்வது. இதன் நலம் முற்றும் காண்பதற்கு வேண்டும் அவாவைப் படிப்போருள்ளத்தில் எழுப்புவது ஒன்றே குறிக்கோளாகக் கொண்டு இச் சிறு நூல் வெளியிடப்படுகின்றது.

இதுபோலும் பல தொண்டுகள் இற்றைய நம் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு வேண்டுவனவாம் என்று நன்கு அறிந்து, இவற்றை ஆற்றுதற்கு முன் வந்திருக்கும் **திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்க்கு** நாம் பெரிதும் நன்றி செலுத்தும் கடப்பாடு உடையோம்.

இத்தகைய தொண்டினை ஆற்றற்குரிய பெரும்புலமையும் அருந்திறமையும் படைத்த புலவர் பெருமக்கள் பலரிருக்க, வேங்கடத்தடியில் தமிழ் கற்பிக்கும் தொழில் தாங்கியிருக்கும் அடியேனைப் பொருளாக் கொண்டு இப் பணி புரிவிக்கும் உமையொரு பாகத்து ஒருவன் திருவருளை வியந்து மனமொழி மெய்களால் பணிந்து மகிழ்ந்து பரவுகின்றேன்.

திருவேங்கடம், 9—7—1942

ஔவை. சு. துரைசாமி.

# உரை பெறு கட்டுரை.

க. அன்றுதொட்டுப் பாண்டியன் நாடு, மழை வறங் கூர்ந்து, வறுமை எய்தி, வெப்பு நோயும் குருவும் தொடரக், கொற்கையிலிருந்த வெற்றிவேற் செழியன், நங்கைக்குப் பொற் கொல்லர் ஆயிரவரைக் கொன்று, களவேள்வியால் விழவொடு சாந்தி செய்ய, நாடுமலிய மழைபெய்து நோயும் துன்பமும் நீங்கியது.

உ. அது கேட்டுக் கொங்கிளங் கோசர், தங்கள் நாட்டகத்து நங்கைக்கு விழவொடு சாந்திசெய்ய, மழை தொழில் என்றும் மாறாதாயிற்று.

ந. அது கேட்டுக், கடல்சூழ் இலங்கைக் கயவாகு என்பான், நங்கைக்கு நாட்பலி பீடிகைக் கோட்டம் முந்துறுத்து, ஆங்கு, "அரந்தை கெடுத்து வரம் தரும் இவள்" என, ஆடித்திங்கள் அகவையின், ஆங்கு ஓர் பாடி விழாக்கோள் பன்முறை எடுப்ப, மழை வீற்றிருந்து வளம்பல பெருகிப் பிழையா விளையுள் நாடாயிற்று.

ச. அது கேட்டுச் சோழன் பெருங்கிள்ளி, கோழி யகத்து "எத்திறத்தானும் வரந்தரும் இவள் ஓர் பத்தினிக் கடவுளாகும்" என நங்கைக்குப் பத்தினிக் கோட்டமுஞ் சமைத்து நித்தல் விழாவணி நிகழ்வித் தோனே.

# இளங்கோவடிகள்
அருளிய
# சிலப்பதிகாரத்தின் சுருக்கம்

## க. புகார்க் காண்டம்

### க. மங்கல வாழ்த்துப் பாடல்

திங்களைப் போற்றுதும், திங்களைப் போற்றுதும்,
[1] கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றுஇவ்
[2] அங்கண் உலகளித்த லான்.

ஞாயிறு போற்றுதும், ஞாயிறு போற்றுதும்,
காவிரி நாடன் [3] திகிரிபோல் [4] பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்.

மாமழை போற்றுதும், மாமழை போற்றுதும்,
[5] நாமநீர் வேலி யுலகிற்கு, அவனளிபோல்
[6] மேல்நின்று தான்சுரத்த லான்.

பூம்புகார் போற்றுதும், பூம்புகார் போற்றுதும்,
[7] வீங்குநீர் வேலி உலகிற்கு அவன்குலத் தோடு
ஓங்கிப் பரந்தொழுக லான்.

---

1. கொங்கு - தேன். தார் - மாலை. சென்னி - சோழன்.
2. அம்கண் - அழகிய இடத்தையுடைய.
3. திகிரி - ஆக்கினை சக்கரம்.
4. பொன்கோடு - அழகிய சிகரம்.
5. நாமநீர் - அச்சம் தரும் கடல்.
6. மேல் நின்று - எல்லாப் பொருட்கும் மேலாக நின்று.
7. வீங்குநீர் - மிக்க கடல்; நிறைந்த நீரையுடைய கடல்.

உலகளிக்கும் திங்களைப் போல் வெண்குடை நிழற்றி, மேரு வலம் திரியும் ஞாயிற்றைப் போல் திகிரி யுருட்டி, மேல் நின்று சுரக்கும் மா மழை போல் உலகிற்குத் தலையளி செய்து, ஓங்கிப் பரந்த பூம் புகார் போல் பழங்குடி மக்களாய்த் திகழ்ந்த சோழர் குடியிற் பிறந்த சோழ மன்னர் சோழ நாட்டை அறம் இனிது வளர ஆட்சி புரிந்தனர். அக் காலத்தே புகார் எனப் புலவர் பரவும் காவிரிப்பூம் பட்டினம் அவர்கட்குத் தலைநகரம்.

பொதியி லாயினும், இமய மாயினும்,
[1]பதியெழு வறியாப் பழங்குடி [2]கெழீஇய
[3]பொதுவறு சிறப்பின் புகாரே யாயினும்,
[4]நடுக்கின்றி நிலைஇய என்பது அல்லதை
[5]ஒடுக்கம் கூறார், உயர்ந்தோர் உண்மையின்,
[6]முடித்த கேள்வி முழுதுணர்ந் தோரே.

இப் புகார் நகரத்தே வணிகர் பெரும்பாலராக வாழ்ந்து வந்தனர். அவருள், இப்பர், கவிப்பர், பெருங்குடியர் என மூன்று வகையினர் உண்டு. அம் மூவகையினருள் பெருங்குடியர் வகையில் மாநாய்கன் என்றொரு வணிகன் வாழ்ந்து வந்தனன். அவனுக்கு ஒருமகள் இருந்தாள்; இக் கதை தொடங்கும் காலத்தே அவட்கு வயது பன்னிரண்டு; திருமணம் செய்தற் குரிய பருவம் இது.

அவளுந்தான்,
[7]போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்,
தீதிலா [8]வடமீனின் திறம்இவள் திறமென்றும்,

1. பதி எழுவறியா - பகை காரணமாகவோ, வறுமை காரண மாகவோ இருக்கும் இடத்தைவிட்டு நீங்குவதை அறியாத.
2. கெழீஇய - பொருந்தின.
3. பொதுவறு சிறப்பு - தனக்கே உரிய சிறப்பு.
4. நடுக்கின்றி - சலிப்பின்றி. நிலைஇய - நிலைபெற்றன.
5. ஒடுக்கம் கூறார் - முடிவு உண்டு என்று கூறார்.
6. முடித்த கேள்வி - கரைகண்ட கல்வி கேள்வி.
7. போதில் ஆர் திருவினாள் - தாமரைப் பூவில் பொருந்திய திருமகள்; தாமரைப் பூவை இல்லமாகக் கொண்ட திருமகள்.
8. வடமீனின் திறம் - அருந்ததியினுடைய கற்பு. தீது - பழுது.

மாதரார் தொழுதேத்த [1] வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள், பெயர்மன்னும் கண்ணகிஎன் பாள்மன்னோ.

இந் நகரத்தே, இப் பெருங்குடியர் மரபிலே மாசாத்து வான் என்பவன் ஒரு வணிகன். இவன் மாநாய்கன்பால் பெண் கொள்ளுதற்கு உரிமையுடையவன்; [2] உயர்ந்தோங்கு செல்வத்தான். இவனுக்கு ஒரு மகன் இருந்தான்; அவ னுக்கும் இக் கதை தொடங்கும் காலத்தே வயது பதினாறு நிரம்பி யிருந்தது.

அவனுந்தான்,

[3] மண்தேய்த்த புகழினான், மதிமுக மடவார்தம்
[4] பண்தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்டிக்
கண்டேத்தும் [5]செவ்வேள் என்று [6]இசைபோக்கிக் காதலால்
கொண்டேத்தும் [7]கிழமையான், கோவலன்என் பான் மன்னோ

இக் கோவலனுக்கும் கண்ணகிக்கும் இருபெரும் குர வரும் திருமணம் செய்யக் கருதினர். குறித்த நாளில் திரு மணம் நடந்தது. அதுபோது, மிக்க உயர்வும் பரப்புமுடைய பந்தர்கள் இடப்பட்டன. விதானங்கள் அழகுற அமைக்கப் பெற்றன; அவற்றில் நீல நிறமான ஆடைகளைத் தைத்து முத்துக்கள் அணியப்பெற்றன. எம்மருங்கும் முத்துத் தாமங்களும் பூமாலைகளும் தொங்கின. மாமுது பார்ப்பான் மறைவழிகாட்டி எரி வளர்த்தான். கோவலன் அருந்ததி அன்ன கண்ணகியைக் கைப்பற்றித் தீவலம் வந்தான்.

---

1. ஏத்த வயங்கிய - ஏத்தும்படி விளங்கின.
2. உயர்ந்தோங்கு செல்வம் - மிகவோங்கிய செல்வம்.
3. மண் தேய்த்த புகழ் - மண்ணுலகம் சிறுத்துத் தனக்குள் அடங் கும்படி விரிந்த புகழ்.
4. பண் தேய்த்த மொழி - இனிமையால் பண்ணின் இசையும் கேட்க உவர்க்கும்படியான சொல். ஆயம் - பெண் கூட்டம்.
5. செவ்வேள் - முருகன்.
6. இசை போக்கி - சிறப்பைப் பாராட்டி.
7. கிழமையான் - உரிமையுடையவன்.

அவ்வழி,

முரசியம்பின, முருடதிர்ந்தன,
முறையெழுந்தன, பணிலவெண்குடை
அரசெழுந்ததொர் படியெழுந்தன,
அகலுள்மங்கல அணியெழுந்தது.

கோவலன் கண்ணகிக்கு மங்கலநாண் பூட்டினன். பின்பு, பெருமுது மங்கல மகளிர்,

விரையினர் மலரினர் விளங்கு மேனியர்
உரையினர் பாட்டினர் ஒசிந்த நோக்கினர்
சாந்தினர் புகையினர் தயங்கு கோதைய(ராய்ச்)

சுண்ணமும், விளக்கும், பூம்பாலிகையும், முளைக்குடமும் கொணர்ந்து மங்கலம் பொலிவித்து, சில மண மலர்களைத் தூவி, “இமயத்தில் இப்பால் புலியைப் பொறித்த எங்கள் கரிகாலன், தன் திகிரியை எப்பாலும் உருட்டுவானாக; அவன் பொறித்த புலிப்பொறி அவ்விமயத்துக்கு அப்பாலும் நிலை பெற நிற்பதாக” என அரசனை வாழ்த்தி,

காதலற் பிரியாமல், [1]கவவுக்கை ஞெகிழாமல்,
தீதறுக என ஏத்திச், சின்மலர் கொடுதூவி,
அங்கண் உலகின் அருந்ததி அன்னாளை,
[2]மங்கல நல்லமளி ஏற்றினார்.

1. கவவுக்கை ஞெகிழாமல் - தழுவிய கை தளராமல்; இணைபிரியாமல் என்றபடி.

2. மங்கல அமளி - மணப் பள்ளி.

## உ. மனையறம் படுத்த காதை

குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர் மக்களாகிய கோவலனும் கண்ணகியும் புதுமணத் தேறல் மாந்தி இன்புற்றிருந்தனர். ஒருநாள், அவர்கள், மயன் என்னும் தேவ தச்சனால் செய்யப்பெற்றது போன்றதொரு மணிக்கால் அமளியினை, நெடுநிலைமாடத்து இடைநிலத்தேயிட்டு அதன் மேல் இனி திருந்தனர். அதுபோது,

> கழுநீர், ஆம்பல், [1] முழுநெறிக் குவளை,
> அரும்பு [2] பொதி யவிழ்ந்த [3] சுரும்பிமிர் தாமரை,
> வயற்பூ, வாசம் [4] அளைஇ அயற்பூ
> மேதகு தாழை, [5] விரியல்வெண் தோட்டுக்
> [6] கோதை மாதவி, சண்பகப் [7] பொதும்பர்த்
> [8] தாதுதேர்ந் துண்டு மாதர்வாள் முகத்துப்
> புரிகுழல் அளகத்துப் [9] புகலேக் கற்றுத்
> திரிதரு சுரும்பொடு [10] செவ்வி பார்த்து
> மாலைத் [11] தாமத்து மணிநிரைத்து வகுத்த
> கோலச் சாளரக் குறுங்கண் நுழைந்து
> வண்டொடு புக்க [12] மணவாய்த் தென்றல்

மெய்க்கினிதாக வீசிற்று. அது கண்டு, இருவரும் பெரு மகிழ் வெய்தி, காதல் சிறந்து நிரைநிலைமாடத்து நிலாமுற்ற மேறி இன்புறுவா ராயினர்.

---

1. முழுநெறிக் குவளை - இதழ் ஒடியாத குவளைப் பூ.
2. பொதி அவிழ்ந்த - இதழ் விரிந்த.
3. சுரும்பு இமிர் தாமரை - வண்டு இசைக்கும் தாமரை.
4. அளைஇ - கலந்து உண்டு.
5. விரியல் வெண்தோடு - விரிந்த வெண்மையான இதழ்.
6. கோதை மாதவி - மாலைபோன்ற குருக்கத்திக் கொடி.
7. பொதும்பர் - மரங்களின் செறிவு.
8. தாது - தேன்.
9. புகல் ஏககற்று - புகுவதற்காக ஏக்கமுற்று.
10. செவ்வி - சமயம்; காலம்.
11. தாமம் - மாலை: ஈண்டு மணிமாலை.
12. மணவாய்த் தென்றல் - மணத்தைத் தன்னிடத்தேயுடைய தென்றல்.

அங்கே, கண்ணகியின் நலங்களை ஐவகைக் கருவிகளா லும் ஆர நுகர்ந்த கோவலன், தீராக் காதலால் அவள் திரு முக நோக்கிச் சில கூறலுற்றான். தொடக்கத்தே, அவன், கண்ணகியின் நுதல், புருவம், கண், சாயல், நடை, சொல் முதலியவற்றின் நலம் புனைந்து கூறி மகிழ்கின்றான் ; பின்பு, கண்ணகிக்குச் செய்யப்பெற்றிருக்கும் ஒப்பனையைக் கண்டு, பெரிதும் வியந்து,

நறுமலர்க் [1] கோதை ! நின் நலம் பாராட்டுநர்
மறுவில் மங்கல வணியே அன்றியும்,
[2] பிறிதணி அணியப் பெற்றதை எவன்கொல் ?
[3] பல்லிருங் கூந்தல் சில்மலர் அன்றியும்,
[4] எல்லவிழ் மாலையொடு [5] என் உற்றனர் கொல் ?
[6] நானம் நல்லகில் நறும்புகை யன்றியும்,
[7] மான்மதச் சாந்தொடு வந்ததை எவன்கொல் ?
[8] திங்கள் முத்தரும்பவும் சிறுகிடை வருந்தவும்
இங்கிவை அணிந்தனர் என் உற்றனர் கொல் ?

என்று, கூறுகின்றான். அதற்குப்பின்,

மாசறு பொன்னே ! வலம்புரி முத்தே !
[9] காசறு விரையே ! கரும்பே ! தேனே !
அரும்பெறல் பாவாய் ! ஆருயிர் மருந்தே !
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே !
மலையிடைப் பிறவா மணியே என்கோ ;

---

1. கோதை - மாலையையுடையாய்.
2. பிறிது அணி அணியப் பெற்றதை - வேறே சில அணிகளை அணிந் ததனால் பெற்ற பயன்.
3. பல் இருங் கூந்தல் - பலவகைத்தாகிய கூந்தல்.
4. எல் அவிழ் மாலை - ஒளி விளங்க மலர்ந்த பூமாலை.
5. என் உற்றனர் - என்ன உறவு உடையவர்கள்.
6. நானம் - எண்ணெய் (வாசனை யெண்ணெயுமாம்).
7. மான்மதம் - கஸ்தூரி.
8. திங்கள் முத்து அரும்ப - சந்திரன் போன்ற முகத்தில் முத்துப் போல வியர்வை துளிக்க.
9. காசு அறு விரையே - குற்றமற்ற வாசனைப்பொருளை யொப்பாய்.

[1] அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ;
யாழிடைப் பிறவா இசையே என்கோ,
[2] தாழிருங் கூந்தல் தையால்! நின்னை

எனப் பலவாறு பாராட்டி இன்புற்று மகிழ்ந்து வரலாயினன். இவ் வண்ணம் சில நாட்கள் சென்றன. கோவலன் தாயாகிய பேரியற்கிழத்தி அவனையும் கண்ணகியையும் மனையறம் படுக்க விரும்பி, பல்வேறு வகைச் செல்வமும், உரிமைச் சுற்றமும் உவந்தளித்துத் தனியே இருந்து மனைவாழ்க்கை நடத்த விடுத்தனள். அவ்வண்ணமே இருவரும் தாம் மேற்கொண்ட இல்லறத்தை இனிது செய்து வந்தனர்; யாண்டுகளும் சில கழிந்தன.

1. அலை - கடல்.
2. தாழ் இருங் கூந்தல் - நீண்டு தாழ்ந்த கரிய தலைமயிர்.

# ௩. அரங்கேற்று காதை

அக் காலத்தே காவிரிப்பூம் பட்டினத்தில் நாடகக் கணி கையர் பலர் வாழ்ந்திருந்தனர். அவருள் சித்திராபதி என் பாள் சீரும் திருவுமுடையளாய் இருந்தாள். அவட்கு மாதவி யென்னும் மகளொருத்தி உண்டு. அவள் பெரிய தோளும் கடைகுழன்று சுருண்ட கூந்தலும் உடையள்; ஆடல், பாடல், அழகு என்ற இம் மூன்றில் ஒன்றும் குறைவு படாமல் நாடக நலம் பெற்றவள். இவள் ஐந்தாம் ஆண்டில் ஆடல் பாடல்களைப் பயிலத் தொடங்கி, மேல் ஏழாண்டு அவற்றை நன்கு பயின்று, பன்னிரண்டாமாண்டை எய்தி னாள். அவளது கல்வித் துறையும் நிறைவெய்திற்று. அவள் தாயர் முதலியோர் அவள் கற்றவற்றை ஒரு நல்ல நாளிலே, அரசர் பெருமானான கரிகாற்பெருவளத்தானுக்கு அவனது அவைக்களத்தே அரங்கேற்றிக் காட்டவிரும்பினர்.

கூத்தின் இலக்கணங்களை முற்றக் கற்று, ஆடவும் ஆட்டு விக்கவும் வல்ல ஆடலாசிரியனும், கூத்தும் இசையும் பொருந் தப் புணர்க்கும் புலமை மிக்க இசையாசிரியனும், கூத்தும் பாட்டும் இனிது அமைய நாடகங்கள் எழுத வல்ல நாடகக் கவிஞனும், தண்ணுமையாசிரியனும், குழலியம்புவோனும், யாழாசிரியனும், பிறரும் அரங்கேற்றுதற்கு வேண்டியவற் றைச் செய்தனர். சிற்பநூலாசிரியர் வகுத்துள்ள இயல்பு வழுவாதவாறு தக்க இடத்தே அரங்கு வகுக்கப் பெற்றது. அதன்கண், ஒரு முகவெழினி, பொருமுகவெழினி, கரந்து வரல் எழினி என்பனவாகிய திரைகள் அமைக்கப் பெற்றன. தங்கள் அரசற்குத் தோற்றோடிய மாற்றரசரது வெண்குடை யின் காம்பைத் தலைக்கோலாக நிறுத்தி, அதனை இந்திரன் மகன் சயந்தனாக நினைத்து, ஆடலாசிரியன் முதலாயினோர், புண்ணிய நதிகளிலிருந்து பொற்குடத்திற் கொணர்ந்த நன்னீரால் நீராட்டி மாலை சூட்டி வழிபட்டனர். இவ்வாறு,

[1] இந்திரன் சிறுவன் சயந்த னாகஎன,
வந்தனை செய்து வழிபடு தலைக்கோல்
புண்ணிய நன்னீர் பொற்குடத்து ஏந்தி
[2] மண்ணிய பின்னர், மாலை அணிந்து,
நலம்தரு நாளால், [3] பொலம்பூண் ஓடை
[4] அரசுவாத் தடக்கையில் பரசினர் கொண்டு,
முரசுஎழுந் தியம்பப் [5] பல்இயம் ஆர்ப்ப,
அரசொடு பட்ட [6] ஐம்பெருங் குழுவும்
தேர்வலம் செய்து [7] கவிகைக் கொடுப்ப,
ஊர்வலம் செய்து புகுந்துமுன் வைத்து

அரங்கிலே புகுந்து ஆடுதற்குரிய நெறியிலே யாவரும் அமைந்தனர். அங்கே, ஆடல் மகளிர், [8] வாரம் பாடுவோர், இசைக் கருவியாளர், ஆசிரியன்மார் பலரும் தத்தமக்கு உரிய இருக்கைகளை அடைந்தனர். மாதவியும், "வலக்கால் முன் மிதித்து ஏறி, அரங்கத்து, வலத்தூண் சேர்தல் வழக்கு" என்பது கொண்டு, அம் முறையே அரங்கேறினள். அவட்குப் பின் ஆடி முதிர்ந்த [9] தோரிய மடந்தையர் இடத்தூண்

---

1. இந்திரன் சபையில் ஒருகால் இந்திரன் மகனா சயந்தன் என்பவன் அங்கே வந்து நடித்த உருப்பசியின்மேல் காமுற்றான்; அதனை அறிந்த அகத்தியன் அவ்விருவரையும் நோக்கி, "நீங்கள் இருவரும் மண்ணுலகம் அடைந்து, உங்களில் சயந்தன் விந்தியமலையில் மூங்கிலாகவும், உருப்பசி நாடகக் கணிகையாகவும் பிறப்பீர்களாக" எனச் சபித்தான். சயந்தன் பணிந்து, "சாபவிடை எப்போது?" என்று கேட்டனன். அவற்கு முனிவன், "நீ மூங்கிலாய், நாடகமகளிர் முதலரங்கேறும்போது, அரங்கத்தில் முன்னதாக நிறுத்தி வழிபடப்படும் தலைக்கோலாக இருந்து சாபம் நீங்குவாய்" என்றான். இது வரலாறு.

2. மண்ணிய - நீராட்டிய.

3. பொலம் பூண் - பொன்னால் செய்த. ஓடை - பட்டம்.

4. அரசு உவா - பட்டத்து யானை.

5. பல் இயம் - பல் வாத்தியங்கள்.

6. ஐம்பெருங்குழு - அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், ஒற்றர், தூதுவர்.

7. கவி கைக் கொடுப்ப - தேர்மேல் நின்ற பாடலாசிரியன் கையில் கொடுக்க.

8. ஏகம், சாப்பு என்ற இருவகைத் தாளத்திற் பாடப்படும் பாட்டுகள் வாரம் என்பர்.

9. தோரிய மடந்தை - வயது முதிர்ந்த ஆடல் மகள்.

பக்கலில் இருந்தனர். ஆடல் தொடக்கத்தே, தோரிய மடந்தையர் வாரம் பாடினர்; இசைக்கருவிகள் யாவும் இனிது இசைத்தன. அவற்றுள்,

> குழல்வழி நின்றது யாழே; யாழ்வழித்
> [1] தண்ணுமை நின்றது தகவே; தண்ணுமைப்
> பின்வழி நின்றது முழவே; முழவொடு
> கூடிநின்று இசைத்தது [2] ஆமந் திரிகை.

பின்னர், மாதவி ஆடரங்கின் முற்போந்து,

> [3] பொன்னியல் பூங்கொடி புரிந்துடன் வகுத்தென
> நாட்டிய நன்னூல் நன்குகடைப் பிடித்துக்
> காட்டினள்; ஆதலின், காவல் வேந்தன்
> [4] இலைப்பூங் கோதை இயல்பினின் [5] வழாஅமைத்
> தலைக்கோல் எய்தித் தலையரங் கேறி
> [6] விதிமுறைக் கொள்கையின் ஆயிரத் தெண்கழஞ்சு
> [7] ஒருமுறை யாகப் பெற்றனள்; அதுவே,
> நூறுபத் தடுக்கி எட்டுக்கடை நிறுத்த
> வீறுயர் பசும்பொன் பெறுவதுஇம் மாலை;
> [8] "மாலை வாங்குநர் சாலும்நம் கொடிக்கு" என
> [9] மானமர் நோக்கி ஓர் கூனிகைக் கொடுத்து

---

1. தண்ணுமை - மத்தளம்.
2. ஆமந்திரிகை - இடக்கை என்னும் இசைக்கருவி.
3. பொன் . . . . வகுத்தென: பொன்னால் செய்ததொரு பூங்கொடி கூத்து நடித்ததுபோல.
4. இலைப்பூங்கோதை - பசும்பொன்மாலை; இது அரசனுடைய மாலை. இதனோடு தலைக்கோல் எய்தித் தலையரங்கேறினள் என்க.
5. இயல்பினின் வழாஅமை - கூத்து, பாட்டு, அழகு என்ற இவற்றிற்கு ஏற்ற முறைமையில் ஒன்றும் வழுவாமல்.
6. விதிமுறைக் கொள்கை - நாடகக் கணிகையர்க்குத் தலைவரிசை ஆயிரத் தெண்கழஞ்சு பொன் என்னும் விதிமுறை.

   "முட்டில் பாணரும் ஆடியல் மகளிரும், எட்டொடு புணர்ந்த
   ஆயிரம் பொன்பெறும்" என்பது அந்த விதி.
7. ஒரு முறையாகப் பெற்றனள்: ஒரு நாளைக்குப் பரிசம் இது என்று அரசனால் பெற்றாள்.
8. மாலை - அரசன் தந்த இலைப்பூங்கோதை.
9. மான் அமர் நோக்கி ஓர் கூனி - மான் போன்ற கண்களையுடைய ஒரு கூனி; ஏவல் மகளுமாம்.

[1] நகர நம்பியர் திரிதரும் [2] மறுகில்
[3] பகர்வனர் போல்வதோர் பான்மையின் நிறுத்த

அத் தெருவழியே சென்ற கோவலன், அம் மாலையின் விலை, மாதவியின் பரியமாதல் கண்டு, ஆயிரத் தெண்கழஞ்சு பொன்னையும் கொடுத்து அம் மாதவிக்கு அமைவானுயினன்.

மாமலர் நெடுங்கண் மாதவி மாலை
கோவலன் வாங்கிக் கூனி தன்னொடு
மணமனை புக்கு மாதவி தன்னோடு
[4] அணைவுறு வைகலின் அயர்ந்தனன் மயங்கி
[5] விடுத லறியா விருப்பின னாயினன் ;

அன்றியும், வடு நீங்கிய சிறப்புப் பொருந்திய தன் மனையகத்தையும் மறந்தொழிந்தான்.

1. நகரநம்பியர் : நகரத்துச் செல்வ இளைஞர்.
2. மறுகு - தெரு.
3. பகர்வனர் - விலைக்கு விற்பவர்.
4. அணைவுறு வைகலின் - சேர்ந்த அந்த ஒரு நாளிலேயே.
5. விடுதல் அறியா - நீங்க முடியாத.

# ௪. அந்திமாலைச் சிறப்புச்செய் காதை

கோவலன் தன் மனையகத்தை மறந்து, மாதவியின் மனைக்கண்ணே மயங்கிக் கிடக்க நாட்கள் பல கழிந்தொழிந்தன. தன்னை அவன் பிரியாமல் ஒழுகுவதால் மாதவிக்கு மகிழ்வு மிகுவதாயிற்று; அவன் பிரிவாற்றாத கண்ணகிக்கு உண்டான துயர் அளப்பரிதாயிற்று. காதலரைப் பிரிந்தவர்க்கு மாலைப்போது பொறுத்தற்கரிய துன்பம் தருவதாதலால், ஒரு நாளைய அந்திமாலையின் சிறப்பு இங்கே கூறப்படுகிறது.

பகற்பொழுது கழிய அந்திமாலை வந்தது. பகலவன் மேலைத் திசையில் மறைந்தான். எங்கும் பசுவெயில் பரந்தது; மாலையில் மலரும் பூக்களிடத்தே பனிநீர் தங்கித் துளிக்கலுற்றது; எங்கும் குளிர்ச்சி நிலவத் தொடங்கிற்று.

"விரிகதிர் பரப்பி உலகமுழு தாண்ட
[1] ஒருதனித் திகிரி உரவோற் காணேன்;
அங்கண் வானத்து அணிநிலா விரிக்கும்
திங்களஞ் செல்வன் யாண்டுளன்கொல்?" எனத்
திசைமுகம் பசந்து, [2] செம்மலர்க் கண்கள்
[3] முழுநீர் வார, முழுமெயும் பனித்துத்,
[4] திரைநீர் ஆடை இருநில மடந்தை,
[5] அரைசுகெடுத்து அலமரும் [6] அல்லற் காலையே

இவ்வந்தி மாலையாகும். சிறிது போதில் [7] மயங்கிருள் வருவதாயிற்று.

---

1. ஒரு தனித் திகிரி - ஒப்பற்ற தேரினுடைய ஒற்றைச் சக்கரம். உரவோன் - சூரியன்.

2. செம்மலர்க் கண்கள் - செவ்விய மலர்களாகிய கண்; பசந்து - பொன்னிறம் கொண்டு.

3. முழுநீர் - துளிக்கின்றநீர். முழுமெயும் பனித்து - மெய் முழுதும் பனிகொண்டு. (பனிமூடி என்றுமாம).

4. திரைநீர் ஆடை - கடலை ஆடையாகவுடைய.

5. அரைசு - அரசனாகிய சூரியன்.

6. அல்லற்காலை - துன்பக்காலம்.

7. மயங்கு இருள் - மாலையில் படரும் மெல்லிய இருள்.

[1] கறைகெழு குடிகள் கைதலை வைப்ப
[2] அறைபோகு குடிகளொடு ஒருதிறம் பற்றி
[3] வலம்படு தானை மன்னர் இல்வழிப்
[4] புலம்பட இறுத்த [5] விருந்தின் மன்னரின்
[6] தாழ்துணை துறந்தோர் [7] தனித்துயர் எய்தக்
காதலர்ப் புணர்ந்தோர் களிமகிழ் வெய்தக்
[8] குழல்வளர் முல்லையில் கோவலர் தம்மொடு
[9] மழலைத் தும்பி வாய்வைத் தூத;
[10] அறுகாற் குறும்பெறிந்து அரும்புபொதி வாசம்
[11] சிறுகாற் செல்வன் மறுகில் தூற்ற
[12] எல்வளை மகளிர் மணிவிளக் கெடுப்ப
[13] மல்லல் மூதூர் மாலைவந் திறுத்தது.

இந் நிலையில் தென்னவர் குல முதலான பிறைத் திங்கள் தோன்றியது. பகைவர் இளையராயினும் அவரை முளையிலே களையும் அரசு முறை அத் தென்னவர்க்கு இயல்பாக

---

1. கறை - கடமை(வரி).

2. அறைபோகு குடிகள் - அரசனுக்கு விரோதமான மனப்பான்மை கொள்ளும்படி கொடுக்கப்பட்ட வீரர்கள்.

3. வலம் - வெற்றி.

4. புலம்பட இறுத்த - அவர் நிலத்தே வந்து விட்ட.

5. விருந்தின் மனனர் - புதிய வேந்தர்.

6. தாழ்துணை - தங்கள் மனதில் தங்கின காதலர் (கணவர்).

7. தனித்துயர் - பிரிவுத் துன்பம்.

8. கோவலர் குழல் வளர் முல்லையில் வாய் வைத்து ஊத - இடையர் ஊது குழலில் முல்லைப்பண் உண்டாகத் தம் வாயை வைத்து ஊத; தும்பி கோவலர் குழல் வளர் முல்லையில் வாய் வைத்து ஊத - வண்டுகள் இடையர் தலையில் சூடிய முல்லைப் பூவில் மொய்த்து ஊத.

9. மழலைத் தும்பி - எழுத்து விளங்காத ஓசையைச் செய்யும் தும்பி.

10. அறுகாற் குறும்பு - ஆறுகால்களையுடைய வண்டு. தென்றலால் தளிர்த்துப் பூத்த பூக்களின் தேனை வண்டு புகுந்து உண்பதால், அந்த வண்டு "குறும்பு" எனப்பட்டது. குறும்பு செய்தல் - பிறர்க்குரியதைத் தான் அக்கிரமமாகப் புகுந்து கவர்ந்து கொள்ளுதல்.

11. சிறுகாற் செல்வன் - தென்றற் காற்று.

12. எல்வளை - விளங்குகின்ற வளையல்.

13. மல்லல் - வளம்.

உண்டு; அதனால், அத் தென்னர் குலத் திங்கள், அந்தி மாலைப் போதில் அடைந்த மயக்கிருளை மாற்றிப் பால் போன்ற தன் வெண் கதிரைப் பரப்பிற்று. நிலவுப் பயன் கொள்ளும் நெடு நிலா முற்றத்தில், மாதவி, கோவலனை எதிரேற்று, அவனுக்குக் கலவியும் புலவியும் நல்கிக் களி கொண்டனள். மாதவியைப் போலவே காதலரைக் கூடிய மகளிரும் [1] செழும்பூஞ் சேக்கைக் கண்ணே,

மந்த மாருதத்து மயங்கினர் [2] மலிந்தாங்கு
[3] ஆவியங் கொழுநர் அகலத் தொடுங்கிக்
[4] காவியங் கண்ணால் களித்துயில் எய்த,

தம் மனம் பொருந்திய காதலரைக் கூடுதற்கின்றித் தமித்திருக்கும் மகளிர் சிலர் பெருந்துயர் உழந்தனர். அவருள் கண்ணகி,

அம்செஞ் சீறடி அணிசிலம் பொழிய
மெல்துகில் [5] அல்குல் மேகலை நீங்க,
கொங்கை முன்றில் குங்குமம் எழுதாள் ;
மங்கல அணியின் பிறிதணி மகிழாள் ;
[6] கொடுங்குழை துறந்து [7] வடிந்துவீழ் காதினள் ;
திங்கள் வாள்முகம் சிறுவியர் பிரியச்
[8] செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்பப்
[9] பவள வாள்நுதல் திலகம் இழப்ப,
தவள வாள் நகை கோவலன் இழப்ப
[10] மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பக்

---

1. செழும் பூஞ் சேக்கை - செழித்த பூக்கள் பரப்பிய படுக்கை.
2. மலிந்து - மகிழ்ந்து.
3. ஆவியங் கொழுநர் - உயிர் போன்ற கணவன்மார். அகலம் - மார்பு.
4. காவி - நீலோற்பலம்.
5. அல்குல் - அரை.
6. கொடுங்குழை - வளைந்த காதணி.
7. வடிந்து வீழ் காதினள் என்றது அணியாத போதும் அழகு விளங்குவதைக் காட்டுகிறது. வடிதல் - அழகு வடிதல்.
8. செங்கயல் - செவ்விய கயல்மீன்,
9. பவளத் திலகம் - சிவந்த பொட்டு.
10. மையிருங் கூந்தல் - மிகக் கரிய கூந்தல்.

கையறும் நெஞ்சமொடு கலக்கம் உற்றனள். அவளை ஒத்த ஏனை மகளிர், [1] ஊதுலைக் குருகு போல வெய்துயிர்த்து, வேனிற் காலத்து எய்தும் பள்ளியிடத்தை மேவாது குளிர் காலத்துப் பள்ளியை மேவினர்; அங்கே, நிலாவொளியும் தென்றலும் புகாவண்ணம் [2] குறுங் கண் சாளரங்களை அடைத்துக் கொண்டு ஒடுங்கிக் கிடந்தனர். காதலரைக் கூடிய காலமெல்லாம் கலங்கி யறியாத அவர் உள்ளம், இதுபோது கலங்குவதாயிற்று; கடைக் கண்ணும் சிவப்ப தாயிற்று. ஆகவே; அவர்கள் நள்ளிருள் யாமத்தும் பகலும் துஞ்சாது வருந்தினர். காமனும் மலரம்பும் கரும்பு வில்லும் ஏந்தி நகர்க் காவல் புரியலானான்.

இவ்வண்ணம் இரவுப் போது கழிதலும், அதன் இறுதி யாகிய விடியற் காலம்,

அன்ன மெல்நடை நன்னீர்ப் பொய்கை
[3] ஆம்பல் நாறும் தேம்பொதி நறுவிரைத்
தாமரைச் செவ்வாய்த் [4] தண்ணறல் கூந்தல்
பாண்வாய் வண்டு [5] நோதிறம் பாடக்
[6] காண்வரு குவளைக் கண்மலர் விழிப்பப்
புள்வாய் முரசமொடு [7] பொறிமயிர் வாரணத்து
[8] முள்வாய்ச் சங்கம் முறைமுறை ஆர்ப்ப
[9] உரவுநீர்ப் பரப்பின் ஊர்துயில் எடுப்பி

எய்திற்று.

---

1. ஊதுலைக் குருகு-கருமான் உலைக்களத்துககாற்றெழுப்பும்துருத்தி.
2. குறுங்கண் - சிறு துவாரம்.
3. அன்னமாகிய மென்னடையையும், ஆம்பல் நாறும் நறுவிரை யையும் தாமரையாகிய செவ்வாயையும் அறலாகிய கூந்தலையுமுடைய பொய்கையாகிய பெண்.
4. தண் அறல் - குளிர்ந்த கருமணல்.
5. நோதிறம் - ஒருவகைப் பாலைப்பண்; இதனைப் புறநீர்மை என்றும் கூறுவர்.
6. காண்வரு - விழிப்ப: அழகிய, குவளையாகிய கண்ணையுடைய மலர் மலர; குவளைப் பூவாகிய கண்கள் விழிக்க என்று இருபொருள் கொள்க.
7. பொறி மயிர் வாரணம் - வரி பொருந்திய சிறகுகளையுடைய சேவற் கோழி.
8. முள்வாய் - கூர்மையாகக் குவிந்த.
9. உரவு நீர்ப் பரப்பின் - பரந்த கடல் போன்ற.

# ௫. இந்திர விழ வூரெடுத்த காதை

[1] அலைநீ ராடை மலைமுலை யாகத்து
ஆரப் பேரியாற்று மாரிக் கூந்தல்
[2] கண்ணகன் பரப்பின் [3] மண்ணக மடந்தை
[4] புதையிருட் படாஅம் போக நீக்கி
[5] உதைய மால்வரை உச்சித் தோன்றி
உலகுவிளங்கு [6] அவிரொளி மலர்கதிர் பரப்பி

வெயில் விளங்கும் நண்பகற் போதினைச் செய்ய, சித்திரை மாதத்துச் சித்திரா பூரணை வந்தது. அந் நாள் தொடங்கி இருபத் தெட்டு நாள்காறும் காவிரிப்பூம் பட்டினத்தில் இந்திரனுக்கு விழா அயர்வது வழக்கம். அக் காலத்தே, [7] வேயாமாடம், [8] வியன்கல இருக்கை, மாளிகை இடங்கள் முதலாகப் [9] பெரும்பாணிருக்கை, பிற [10] சிறு குறுங்கை வினையாளர் இருக்கை ஈறாகப் பொருந்திய மருவூர்ப் பாக்கமும், கோவியல் வீதி, கொடித்தேர் வீதிகள் முதலாக, குதிரை, களிறு, தேர் என்ற இவற்றின் பாகரும், போர் வீரரும் இருக்கும் [11] பெரும்பா யிருக்கை, பீடுகெழு திருவின் பெரியோர் இருக்கை ஈறாகவுள்ள பட்டினப் பாக்கமும் என இரு பகுதிப் பட இருந்தது இக் காவிரிப் பூம் பட்டினம். இவ்விரு பாக்கங்கட்கும் இடையே பல்வகை

---

1. அலைநீர் - கடல்.
2. கண் அகல் பரப்பின் - இடம் விரிந்த நிலமாகிய.
3. அலை நீரை ஆடையாகவும், மலையை முலையாகவும், யாற்றை ஆரமாகவும், மாரியைக் கூந்தலாகவுமுடைய மண்ணக மடந்தை.
4. புதை இருள்படாம் - புதைந்த இருளாகிய போர்வை,
5. உதைய மால் வரை - உதய கிரி.
6. அவிர் ஒளி - விளங்குகின்ற ஒளியையுடைய சூரியன்.
7. வேயாமாடம் - கூரையின்றித் தட்டோடிட்டுச் சாந்து பூசிய பெருவீடு.
8. வியன்கல இருக்கை - அகன்ற பண்டசாலை.
9. பெரும்பாண் இருக்கை - பெரும் பாணர்கள் வசிக்குமிடம்.
10. சிறு குறுங்கை வினையாளர் - சிறு சிறு கைத்தொழில்களைச் செய்பவர்.
11. பெரும்பாய் இருக்கை - பெரிய பரந்த இருப்பிடம்.

மரம் செறிந்த சோலை யொன்று உண்டு. அம் மரங்களின் அடியில் கடைகள் கட்டப் பெற்றிருந்தன. அவ்விடம் நாளங் காடி என்பது.

இந் நாளங்காடியில், காவற் பூதத்துப் பலி பீடிகை, உயிர்ப்பலி வழங்கும் முழுப்பலி பீடிகை, கொற்றப் பந்தர், பட்டி மண்டபம், தோரண வாயில், உயர்ந்தோர் மண்டபம், வெள்ளிடை மன்றம், இலஞ்சி மன்றம், நெடுங்கல் மன்றம், பூத சதுக்கம், பாவை மன்றம் முதலிய பல சிரிய இடங்கள் இருந்தன.

இந்திரவிழா அயர்தற்குரிய சித்திரை சேர்ந்த சித்திரைத் திங்களில் உயர்ந்தோர்கள் ஒன்று கூடி,

மெய்வகை யுணர்ந்த [1] விழுமியோர் ஏத்தும்
[2] ஐவகை மன்றத்தும் அரும்பலி உறீஇ
[3] வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசம்
[4] கச்சை யானைப் பிடர்த்தலை ஏற்றி
[5] வால்வெண் களிற்றரசு வயங்கிய கோட்டத்துக்
[6] கால்கோள் விழவின் [7] கடைநிலை சாற்றித்
தங்கிய கொள்கைத் [8] தருநிலை கோட்டத்து
மங்கல நெடுங்கொடி வானுற எடுத்து

வேதிகை, நெடுநிலை மாளிகை முதலியன பொருந்திய தெருக்களைத் தோரணம் நாற்றி, பூரண கும்பம், பொற் பாலிகை, பாவை விளக்கு, பொற் படாகை, கவரி, சுண்ணம் முதலியவற்றால் அழகுறுத்தினர். பின்பு, ஐம்பெருங்

---

1. விழுமியோர் - உயர்ந்தோர்.
2. ஐவகை மன்றம் - வெள்ளிடை மன்றம், இலஞ்சி மன்றம், நெடுங்கல் மன்றம், பூத சதுக்கம், பாவை மன்றம்.
3. வச்சிரக் கோட்டம் - வச்சிராயுதம் நிறுத்தப்பட்ட கோயில்.
4. கச்சை - யானையின் கீழ் வயிற்றிற் கட்டிய கச்சை.
5. வால் வெண்களிற்றரசு - ஐராவதம்.
6. கால்கோள் - தொடக்கம்.
7. கடைநிலை - முடிவு.
8. தருநிலைக் கோட்டம் - கற்பகமரம் நிற்கும் கோயில்.

குழுவும், [1] எண்பேராயமும், அரச குமரரும், [2] பரத குமரரும், புரவி, களிறு, தேர் என்ற இவற்றின்மேல் இவர்ந்து வந்து ஒருங்கு கூடி,

> அரைசு [3] மேம்படீஇய [4] அகல்நிலை மருங்கின்
> [5] உரைசால் மன்னன் [6] கொற்றம் கொள்கென,
> மாயிரு ஞாலத்து மன்னுயிர் காக்கும்
> ஆயிரத் தோரெட் [7] டரசு தலைக் கொண்ட
> தண்நறுங் காவிரித் தாதுமலி பெருந்துறைப்
> புண்ணிய நன்னீர் பொற்குடத் தேந்தி
> [8] மண்ணகம் மருள வானகம் வியப்ப
> விண்ணவர் தலைவனை விழுநீ ராட்டி

விழா அயரலாயினர். ஒருபக்கத்தே,

> [9] பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்,
> அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்,
> [10] வால்வளை மேனி வாலியோன் கோயிலும்,
> நீல மேனி நெடியோன் கோயிலும்,
> [11] மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்

ஆகிய இக் கோயில்களில் நான்மறையிற் கூறிய முறையில் தப்பாது தீ வளர்க்கப் பெற்றன. ஒரு பக்கத்தே, நால்வகைத் தேவர், பதினெண் கணங்கள் என்ற வேறு வேறு கடவுளர்க்கும் விழாச் செய்யப்பட்டன. அறவோர் பள்ளி

---

1. எண்பேராயம் - கரணத்தியலவர், கருமகாரர், கனகச் சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், நளி படைத்தலைவர், யானைவீரர், குதிரை வீரர்.
2. பரத குமரர் - வணிக குமரர்.
3. மேம்படீஇய - மேம்படுவது குறித்து.
4. அகல்நிலை மருங்கின் - மிகப்பெரிய நிலவுலகின் கண்ணே.
5. உரை - புகழ்.
6. கொற்றம் - வெற்றி.
7. அரசு தலைக்கொண்ட - அரசர் தலையில் சுமப்பித்துக்கொண்ட.
8. மண்ணகம் மருள - மண்ணுலகம் விண்ணுலகமாய் மாறுபட.
9. பிறவா யாக்கைப் பெரியோன் - சிவன்.
10. வாய்வளை மேனி வாலியோன் - வெள்ளிய சங்கு போன்ற வெள்ளை மேனியனாகிய பலராமன்.
11. மாலை வெண்குடை மன்னவன் - இந்திரன், மாலை - முத்துமாலை.

யில் அறவுரையும், புண்ணியத் தானங்களில் திறவோர் உரைக்கும் நற்செயலும் *நிகழ்ந்தன ; ஒரு பால், சிறைப்பட்ட மன்னரது அடித்தளை நீக்கிச் [1]சிறைவீடு செய்யும் அருட் செயல் நிகழ்ந்தது ; ஒருபக்கத்தே, [2]கண்ணுளர், [3]குயிலுவர், யாழ்ப்புலவர், பாடற்பாணர் முதலியோர் எண்ணருஞ் சிறப் புடன் இசையிசைத்துச் சிறந்தனர் ; இரவும் பகலும் மாட வீதி, குறுந்தெரு, மூலைமுடுக்கர் என்ற எல்லா இடங்களி லும் முழவு முழக்கம் இடையறாது இந்திர விழா இனிது நடை பெற்றது. இவ்வண்ணம்,

விழவுக்களி சிறந்த [4]வியலுளாங்கண்,
காதற் கொழுநனைப் பிரிந்து அலரெய்தா
[5]மாதர்க் கொடுங்குழை மாதவி தன்னோடு

காமக்களி மகிழ்வெய்தி, நறுவிரைப் பொழிலில் விளை யாட்டமர்ந்து, காளங்காடியிலுள்ள பூமலி கானத்துப் புது மணம் நுகர்ந்து, புகையும் சாந்தும் கொண்டு, நகையாடாயத் தாரின் நன்மொழியில் திளைத்துக் குரல்வாய்ப் பாணர், நகரப் பரத்தர் என்ற இவரொடு கூடித் திரிந்தனன் கோவலன் ; இவனைப்போல இளவேனிற் பருவத்து இனிது வரும் தென்றல், மாடவீதிகளில் மணங் கமழ்ந்து உலவிற்று.

இங்ஙனம் மாலைப்போது கழியவே, நள்ளிரவு எய் திற்று. அக் காலைப் பொதுமகளிர் உறையும் தெருக்களிலும் குலமகளிர் உறையும் தெருக்களிலும் முறையே காமுகர் புகழ்ச்சியும் இல்லற வுயர்ச்சியும் எழுந்தன. அவற்றுள், காமுகர்,

'இருநில மன்னற்குப் பெருவளம் காட்டத்
திருமகள் புகுந்ததுஇச் செழும்பதி யாம்' என

---

* திறவோர் உரைக்கும் செயல் - புராணம் படித்தல் என்பர் அடி யார்க்கு நல்லார்.

1. சிறைவீடு - சிறை விடுதலை.
2. கண்ணுளர் - கூத்தர் ; மதங்கர் என்றும் கூறப்படுவர்.
3. குயிலுவர் - தோற் கருவி வாசிப்பவர்.
4. வியலுள் - அகன்ற தெரு.
5. மாதர் - காதல், அழகுமாம்.

[1] எரிநிறத் திலவமும் முல்லையும் அன்றியும்
கருநெடுங் குவளையும் [2] குமிழும் பூத்துஆங்கு
[3] உள்வரிக் கோலத்து உறுதுணை தேடிக்
[4] கள்ளக் கமலம் திரிதலும் உண்டுகொல் !
மன்னவன் செங்கோல் மறுத்த லஞ்சிப்
பல்லுயிர் பருகும் [5] பகுவாய்க் கூற்றம்
ஆண்மையில் திரிந்துதன் [6] அருந்தொழில் திரியாது
நாணுடைக் கோலத்து நகைமுகம் [7] கோட்டிப்
பண்மொழி நரம்பின் [8] திவவுயாழ் மிழற்றிப்
பெண்மையில் திரியும் பெற்றியும் உண்டுகொல் !

எனப் பொதுமகளிரைப் புகழ்ந்து கூறி மகிழ்ந்தனர். இவ்வாறு பொது மகளிரை ஊடல் தீர்த்துக் கூடிய ஆடவர், அவர் பூசிய சாந்தும், சூடிய மாலையும் கூடிய குறியுமுடையராய்த் தம் மனைக்கண், விழவிற்கு வந்த விருந்தினரோடு சென்றனர். அவர் செயல் கண்டு புலத்தற்குரிய அவர்தம் குலமகளிர் புலத்தலினும் வந்த விருந்தோம்பல் பேரறம் என்று உட்கொண்டு, அவரோடு உடனுறைவு மருவுகின்றனர். அதனை அறிந்து மகிழும் அவர்தம் கொழுநர்,

---

1. எரிநிறத்து இலவம் - நெருப்புப் போன்ற நிறத்தையுடைய இலவம் பூ.

2. குமிழ் - குமிழம்பூ.

3. உள்வரிக் கோலம் - வேற்றுருக் கொண்டு நடிப்பது.

4. கள்ளக் கமலம் - கள்ளையுடைய அந்தத் தாமரைப் பூ. மன்னனுக்குப் பெருவளம் காட்டவேண்டித் திருமகள் இச் செழும்பதி புகுந்தாளாம் என இலவமும் முல்லையுமே அன்றிக் குவளையும் குமிழமும் பூத்துக் கமலம், தன் துணைதேடி, உள்வரிக் கோலத்துடன் திரிவதாயிற்றோ என்க.

5. பகுவாய் - திறந்த வாய்.

6. அருந்தொழில் - தடுத்தற் கரிய உயிர் கொள்ளும் தொழில்.

7. நாணுடைக் கோலத்து நகைமுகம் கோட்டி - உண்மையுருவை விட்டு வேற்றுருக்கொள்ளு மிடத்துப் பெண்ணுருவும் அதற்கேற்ப நாணுடைமையும் கொள்ளுதல் அரிதாதலால் அதனை முதலில் கொண்டு. அதன் பின் சிரித்த முகம் மேற்கொண்டு.

8. திவவு யாழ் - செங்கோட்டு யாழ்; யாழிசைபோலப் பேசி என்க. கூற்றம், மறுத்தல் அஞ்சி, தொழில் திரியாது, முகம் கோட்டி, யாழ் மிழற்றி, பெண்ணுருவில் திரியும் பெற்றியும் உண்டாயிற்றோ என்க. பெற்றி - தன்மை.

விருந்தொடு புக்க பெருந்தோள் கணவரொடு
[1] உடனுறைவு மரீஇ ஒழுக்கொடு புணர்ந்த
வடமீன் கற்பின் மனையுறை மகளிர்
[2] மாதர்வாண் முகத்து [3] மணித்தோட்டுக் குவளைப்
போது [4] புறங்கொடுத்துப் போகிய [5] செங்கடை
[6] விருந்தின் தீர்ந்தில தாயின் யாவதும்
மருந்தும் தருங்கொல் இம் மாநில வரைப்புஎன

மனமாரப் பாராட்டினர். இந்த நள்ளிரவில்,

[7] உள்ளகம் நறுந்தாது உறைப்ப மீதழிந்து
கள்ளுக நடுங்கும் கழுநீர் போலக்
கண்ணகி [8] கருங்கணும் மாதவி [9] செங்கணும்
உள்நிறை கரந்து அகத் தொளித்து நீர் உகுத்தன ;
எண்ணுமுறை இடத்தினும் வலத்தினும் துடித்தன.

---

1. உடனுறைவு - உடன் இருப்பது.

2. மாதர் - காதல்.

3. மணித் தோட்டுக் குவளைப் போது - நீலமணி போன்ற இதழையுடைய குவளைப் பூ.

4. புறங்கொடுத்து - நிகராகமாட்டாமல் தோற்று.

5. செங்கடை - கடைக்கண் சிவந்து தோன்றல் ; (மகளிர் கோபித்துக் கண் சிவந்து காட்டும் பார்வை என்பதாம்).

6. விருந்தின் - விருந்தினால் ; நிலவரைப்பு - நிலவுலகம்.

7. உள்ளகம் - உள்ளே யிருக்கின்ற. மீது அழிந்து - மேலே மிகுந்து வழிந்து.

8. கருங்கண் - காதலனோடு கூடாமையால் கரிதாகிய கண்.

9. செங்கண் - காதலனோடு கூடினதால் சிவந்த கண்.

# கூ. கடலாடு காதை

வெள்ளிமால் வரையின் வடபகுதியில் சேடி என்னும் வித்தியாதர நகரமொன்று உண்டு. ஆங்கு வாழும் விஞ்சையருள் ஒருவன், காவிரிப்பூம் பட்டினத்தில் இந்திர விழா நடைபெறும் காலத்தை அறிந்து அவ் விழா நிகழ்ச்சியைத் தன் காதலிக்குக் காட்ட விரும்பினான். அதனால், அவன் தன் காதலியை நோக்கி, "துடியிடையாய்!

தென்திசை மருங்கின் [1]செழும்பதி தன்னுள்
இந்திரவிழவு கொண்டு எடுக்குநாள் இது"

எனச் சொல்லி, "ஆங்கே நாம் செல்வோம் வருக; மேலும், அச் செழும்பதியில்,

ஐவகை மன்றத் தமைதியும் காண்குதும்;
[2]நாரதன் வீணை நயந்தெரி பாடலும்,
தோரிய மடந்தை வாரம் பாடலும்,
[3]மங்கை மாதவி வழிமுதல் தோன்றிய
அங்கர வல்குல் ஆடலும் காண்குதும்;
அமரர் தலைவனை வணங்குதும் யாம்" என,

அவளும் அதற்கு இசைந்தனள். இருவரும் புறப்பட்டு வருங்கால், அவன் அவளுக்கு, இமய வரையும் கங்கையாறும், உஞ்சைப்பதியும், விந்தமலைக் காடும், வேங்கட மலையும், காவிரி நாடும் காட்டி, புகார் நகர்க்கண் புகுந்து அமரர் தலைவனை வணங்கி நகரிடை எடுக்கும் விழா நலம் காணலுற்றான். இருவரும் தம் விஞ்சையர் உருவை மறைத்துக்கொண்டு, அந் நகர்க்கண் நிகழ்ந்த கூத்தும் பாட்டும் காண்பாராயினர்.

[4]தேவபாணியென்னும் இசைப்பாட்டு வகையைப் பாடி,

---

1. செழும்பதி - காவிரிப்பூம் பட்டினம்.

2. நாரதன் - யாழ் வல்லவனாகிய நாரத முனிவன். ஊர்வசி மாதவியாகப் பிறப்பதற்கு உண்டான சாபம் இவன் கலகத்தினால்தான் ஆயிற்று. நயம் தெரி பாடல் - ஏழிசையின்பமும் இனிது தெரியப் பாடுதல்.

3. மங்கை மாதவி - மங்கையாகிய ஊர்வசி. அரவு அல்குல்-மாதவி.

4. தேவபாணி - ஒன்பது வகை இசைப்பாட்டுகளில் ஒன்று. இது பெருந்தேவபாணி, சிறுதேவபாணி எனவரும்; இவ்விரண்டும் பலதேவன்

உமையவள் ஒருதிற னாக ஓங்கிய
இமையவ னாடிய [1]கொடுகொட்டி யாடலும்,
பாரதி யாடிய வியன் [2] பாண் டரங்கமும்,
அஞ்சன வண்ணன் ஆடிய ஆடலுள்
[3] அல்லியத் தொகுதியும், அவுண றக் கடந்த
[4] மல்லின் ஆடலும், மாக்கடல் நடுவண்
சூர்த்திறம் கடந்தோன் ஆடிய [5] துடியும்,
படைவீழ்த் தவுணர் [6] பையுள் எய்தக்
குடைவீழ்த்து அவர்முன் ஆடிய [7] குடையும்,
நீள்நில மளந்தோன் ஆடிய [8] குடமும்,
காம னாடிய [9] பேடி யாடலும்
[10] மாயவ ளாடிய [11]மரக்கா லாடலும்

---

முதல் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நால் வகை வருணத் தாரையும் பாடிப் பரவுதல். இங்கே முதலில் பாடியது திருமாலைப் பாடிய தேவபாணி ; இது கடவுள் வாழ்த்துப் போல்வது.

1. கொடுகொட்டி : திரிபுரம் எரித்த வெற்றி மகிழ்ச்சியால் சிவன் உமாதேவியை ஒரு பங்கிலே கொண்டு ஆடியது.

2. பாண்டரங்கமும் - வேதக் குதிரை பூண்ட தேரில் தேரோட்டிய பிரமன் எதிரே, வாணியின் உருக்கொண்டு சிவன் ஆடிய கூத்து.

3. அல்லியக் கூத்து - கஞ்சன் விடுத்த யானையின் கொம்பை முறிப்ப தற்காகக் கண்ணன் ஆடிய கூத்து.

4. மல்லின் ஆடல் : வாணனை வெல்வதற்காகக் கண்ணன் அவனோடு ஆடிய மற்கூத்து.

5. துடி - சூரனைக் கடலின் நடுவே புகுந்து வென்ற முருகன் ஆடிய துடிகொட்டி என்னும் கூத்து.

6. பையுள் - துன்பம்.

7. குடை - சூரனுடைய அசுர வீரர்கள் தோற்றுத் தம் படைகளைக் கைவிட்டபோது முருகன் குடையை முன்னே சாய்த்துக்கொண்டு ஆடிய கூத்து.

8. குடம் - கண்ணன் வாணனுடைய சோ என்னும் அரண் சூழ்ந்த வீதியில் குடம் கொண்டு ஆடியது.

9. காமன், சிறைபட்டிருந்த மகன் அநிருத்தன் சிறை மீட்கப் பெற்ற போது, பேடியுருவுடன் ஆடியது.

10. மாயவள் - துர்க்கை,

11. மரக்காலாடல் - அவுணர்கள் வஞ்சனையால் பாம்பும் தேளுமாய் உருக்கொண்டு வந்தபோது துர்க்கை மரக்கால் கொண்டு ஆடிய கூத்து. மரக்கால் - மரத்தால் ஆகிய கால்.

திருவின் செய்யோள் ஆடிய [1] பாவையும்
[2] அயிராணி மடந்தை ஆடிய [3] கடையமும்

ஆகிய இவற்றைத் தன் காதலிக்குக் காட்டின அவ் விஞ்சையன், ஆடற்கோலத்தோடு மாதவி தோன்றக் கண்டு,

"தாதவிழ் பூம்பொழில் இருந்துயான் கூறிய
[4] மாதவி மரபின் மாதவி இவள்" எனக்
காதலிக் குரைத்துக் கண்டுமகிழ் வெய்திய

காலத்தே, கோவலன், இந்திர விழா முடிவு பெறுத லாலும், மாதவி ஆடலிற் காலம் நீட்டித்தலாலும், பலரும் அவளைப் பரிவாய்ப் பார்த்தலால் வந்த பொறாமையாலும் வெறுப்புற்று ஊடற் கோலத்தோடு இருந்தான். அவன் உவக்குமாறு, மாதவி கோலங் கொள்ளலானாள்: மாதவி தன் கூந்தலில் நறு நெய் தடவி நலம் செய்து கொண்டாள். சிவந்த சிறிய அடிகளில் செம்பஞ்சி யூட்டப்பெற்றன; மெல் விரல்களில் நல்ல அணிகள் செறிந்தன; துடையில் [5]குறங்கு செறி என்னும் பூண் அணியப் பெற்றது. காலுக் குப் பரியகம், நூபுரம், பாடகம், சதங்கை, பாதசாலம் முதலியன அணியப்பட்டன; சீரிய பூந்துகில் உடுத்து, தோளுக்குக் கண்டிகையோடு பின்னிய [6]தோள்வளை செறித் துக் கொண்டாள்; முன்கைக்குச் சூடகமும், மெல்விரற்கு மணியாழியும், கழுத்திற்கு முத்தாரமும் தூமணிக் கோவை யும், காதிற்குக் கடிப்பிணையும் கவினுற அணிந்துகொண் டாள்.

---

1. பாவைக் கூத்து - அவுணர் தம் போர்க் கோலத்துடன் மோகித்து விழும்படி திருமகள் கொல்லிப்பாவை வடிவத்துடன் ஆடியது.

2. அயிராணி - இந்திரன் மனைவி.

3. கடையம் - வாணன் நகரத்து வடக்கு வாயிலில் உள்ள வயலில் நின்றுகொண்டு அயிராணி ஆடிய கூத்து. உழவர் மகளிராகிய கடைசியர் ஆடும் கூத்தாதலால் இது கடையம் எனப்படுகிறது.

4. உருப்பசி அகத்தியனால் சபிக்கப் பெற்று மண்ணுலகு வந்து மாத வியாகப் பிறந்தாள். மாதவி - ஊர்வசி.

5. குறங்கு செறி - துடையில் அணியும் ஒருவகை அணி.

6. தோள் வளை - வாகுவலயம்.

இவ்வாறு தன்னை ஒப்பனை செய்து கொண்டவள், விழா நாள் முடிந்தபின் வந்த [1] உவாநாளில் கடலாடற்கு மக்கள் மிக்க ஆரவாரத்தோடு விரையக் கண்டாள் ; உடனே, அவள்,

[2] பெருநீர் போகும் [3] இரியல் மாக்களொடு
மடலவிழ் கானல் கடல்விளை யாட்டுக்
காண்டல் விருப்பொடு வேண்டின ளாகி,
பொய்கைத் தாமரை [4] புள்வாய் புலம்ப
வைகறை யாமம் வாரணம் காட்ட
[5] வெள்ளி விளக்கம் நள்ளிருள் கடியத்
தாரணி மார்பனொடு பேரணி யணிந்து

அவன் கோவேறு கழுதைமீது வர, தான் ஒரு வண்டியிலேறி பட்டினப்பாக்கத்து மாடமலி மறுகும் பீடிகைத் தெருவும், திருமகள் நீங்காதுறையும் ஆவண வீதியும் கடந்து, மருவூர்ப் பாக்கத்து நகர வீதியின் நடுவே சென்று, பரதேசமக்கள் வாழும் [6] மாலைச் சேரியின் மருங்கே அடைந்தாள். அங்கே,

வண்ணமும் சாந்தும் மலரும் சுண்ணமும்
[7] பண்ணியப் பகுதியும் பகர்வோர் விளக்கமும்,
செய்வினைக் கம்மியர் கைவினை விளக்கமும்,
[8] காழியர் மோதகத் தூழுறு விளக்கமும்,
[9] கூவியர் காரகற் குடக்கால் விளக்கமும்,
[10] நொடைநவில் மகடூஉக் கடைகெழு விளக்கமும்,
இடையிடை மீன்விலை பகர்வோர் விளக்கமும்,

---

1. உவா - பூர்ணிமை.
2. பெருநீர் - கடல்.
3. இரியல் மாக்கள் - விரைந்து செல்லும் மக்கள்.
4. புள்வாய் புலம்ப - அன்னப் பறவை தங்கிய இடமாகிய பூ தனிப் பட.
5. வெள்ளி - சுக்கிரன். தாரணி மார்பன் - கோவலன்.
6. மாலைச் சேரி - ஒழுங்குபட்ட சேரி. (சேர இருக்குமிடம் சேரி)
7. பண்ணியப் பகுதி - பண்ணிகாரம்.
8. காழியர் - பிட்டு வாணிகர். மோதகம் - பிட்டு.
9. கூவியர் - அப்பம் விற்பவர். காரகல் குடக்கால விளக்கு - கரிய அகல் வைத்த குடவிளக்கு.
11. நொடை - பல பண்டங்களின் விலை.

[1] இலங்குநீர் வரைப்பின் [2]கலங்கரை விளக்கமும்,
விலங்குவலைப் பரதவர் [3]மீன்திமில் விளக்கமும்,
[4] மொழிபெயர் தேஎத்தோர் ஒழியா விளக்கமும்,
[5] கழிபெரும் பண்டம் காவலர் விளக்கமும்,
எண்ணுவரம் பறியா இயைந்தொருங்கு ஈண்டிக்
[6] கடிப்பகை காணும் காட்சிய தாகிய
மருத வேலியின் மாண்புறத் தோன்றும்

நெய்தல் நிலத்துக் கானற் சோலையைக் கண்டாள். அவ் விடத்தில் கடல்படு பொருளும், மலைபடு பொருளும் நிரை நிரையாக மல்கி இருந்தன; கடற்றுறையில் வளம் சுமந்த கலங்கள் அசைந்து கொண்டு நின்றன. பரத குமரரும் பல் வேறு ஆய மகளிரும், ஆடுகள மகளிரும், பாடுகள மகளிரும் வேறு வேறு கோலத்துடன் மேவி இருந்தனர். காவிரி கடலொடு கலக்குமிடத்து, தாழை வேலியாக வளர்ந்துள்ள அக் கானலையடைந்த மாதவி, அவ்விடத்தே,

புன்னை நீழற் புதுமணல் பரப்பில்
[7] ஓவிய எழினி சூழவுடன் போக்கி
விதானித்துப் படுத்த [8] வெண்கால் அமளிமிசை
[9] வருந்துபு நின்ற வசந்த மாலைகைத்
திருந்துகோல் நல்லியாழ் செவ்வனம் வாங்கிக்
கோவலன் தன்னொடும் [10] கொள்கையின் இருந்தனள்.

---

1. இலங்கு நீர் - விளங்குகின்ற கடல்.

2. கலங்கரை விளக்கம் - கப்பல்களைக் கரைக்கழைக்கும் தூண் விளக்கு.

3. மீன் திமில் - மீன் பிடிக்கும் படகு.

4. மொழிபெயர் தேஎத்தோர் - வேறுவேறு வேற்றுமொழி பேசுபவர்.

5. கழிபெரும் பண்டம் - மிக்க பெரிய பண்டங்கள்.

6. கடிப் பகை காணும் காட்சி - கடுகு வீழ்ந்தால் சிறுவருத்தமும் இன்றி எடுக்கக்கூடிய அவ்வளவு வெளிச்சம் அமைந்த காட்சி.

7. ஓவிய எழினி - சித்திரமெழுதிய திரை; சித்திரத் திரை.

8. வெண்கால் அமளி - யானைக் கோட்டினால் கடைந்து செய்த வெண்மையான கால்களையுடைய கட்டில்.

9. வருந்துபு நின்ற - மக்கட் கூட்டத்தின் இடையே நெருங்கி விரைய வந்ததனால் வருந்தி நின்ற.

10. கொள்கையின் இருந்தனள் - மனங் கொள்ளுவதால் சேரக் கூடியிருந்தாள்.

## எ. கானல் வரி

### கட்டுரை

வசந்த மாலை கை நீட்டித் தந்த குற்றமில்லாத யாழைத் தன் கையால் தொழுது வாங்கி, எண் வகையால் இசை எழுப்பி, பண்வகையால் குற்றம் களைந்து, "மரகத மணித் தாள் செறிந்த மணிக்காந்தள் மெல்விரல்கள், பயிர் வண்டின் கிளை போலப் பன்னரம்பின் மிசைப்படர" வார்தல் முதலாக ஓதப்படும் எட்டுவகை இசைக் கரணத்துப் பட்ட இசையினைச் செவியால் ஓர்ந்துணர்ந்து, "இப்பொழுது இதனை வாசி, என்று விதிக்கின்றேனல்லேன்; வாசிக்கும் பாணி யாது? என்று அறியலுறுகின்றேன்" என்பவளைப் போல, மாதவி, அவ் யாழைக் கோவலன் கை நீட்டினள் "நீட்ட அவனும், காவிரியை நோக்கினவும், கடற் கானல் வரிப்பாணியும், மாதவி தன் மனம் மகிழ வாசித்தல் தொடங்குமன்."

### ஆற்று வரி

திங்கள் [1] மாலை வெண்குடையான்
சென்னி செங்கோ லது [2] வோச்சிக்
கங்கை தன்னைப் [3] புணர்ந்தாலும்
[4] புலவாய், வாழி காவேரி;
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவா தொழிதல், [5] கயற் கண்ணாய்!
மங்கை மாதர் பெருங்கற் பென்று
அறிந்தேன் வாழி காவேரி.

---

1. திங்கள் மாலை - திங்களின் தன்மையுடைய (மங்க. 1. காண்க).
2. ஓச்சி - செலுத்தி.
3. புணர்ந்தாலும் - அரசாட்சியைப் பரப்பினாலும்; கலந்தாலும்.
4. புலவாய் - வற்றுவதில்லை; பிணங்குவதும் செய்யாய்.
5. கயற்கண்ணாய் - கயல் மீனாகிய கண்ணையுடையாய், கயல் போன்ற கண்ணையுடையாய்.

உழவரோதை மதகோதை உடை நீரோதை [1]தண்பதங்கொள்
விழவரோதை சிறந்தார்ப்ப நடந்தாய் வாழி காவேரி!
விழவரோதை சிறந்தார்ப்ப நடந்த வெல்லாம்[2] வாய்காவா
மழவரோதை வளவன்தன் வளனே வாழி காவேரி!

## முகச்சார்த்து வரி

[3] கரிய மலர்நெடுங்கண் காரிகைமுன்
கடல்தெய்வம் காட்டிக் காட்டி [4]
அரிய சூள்[5] பொய்த்தார் அறனிலர்என்று
ஏழையம் யாங்கு அறிவோம், ஐய,
விரிகதிர் வெண்மதியும் மீன்கணமும்
ஆமென்றே விளங்கும் வெள்ளைப்
புரிவளையும் முத்தும்கண்டு [6]ஆம்பல்
பொதியவிழ்க்கும் புகாரே எம்மூர்.

மோது முதுதிரையால் மொத்துண்டு
போந்தசைந்த [7]முரல்வாய்ச் சங்கம்
மாதர் வரிமணல்மேல் [8]வண்டல்
உழுதழிப்ப [9]மாழ்கி, ஐய,
கோதை [10]பரிந்தசைய மெல்விரலால்
கொண்டோச்சும் குவளை மாலைப்

---

1. தண்பதங் கொள் விழவர் - புதுப்புனல் ஆடுபவர்.

2. வாய் காவா மழவர் - நான் நான் எனத் தலைவனை நெருங்கு கின்ற வீரர். போரில் தமக்குள்ள விருப்ப மிகுதி தோன்றத் தருக்கிக் கூறுவதால் " வாய்காவா மழவர் " என்றார்.

3. கரியமலர் நெடுங்கண் காரிகை - கருமையான குவளை போன்ற நீண்ட கண்ணையும் அழகையும் உடையவள்.

4. காட்டிக் காட்டிப் பல முறையும் செய்த, பொய்யாக்கக் கூடாத சூள் (சபதம்; ஆணை).

5. எதிரிலே நிற்கும் அவனைப் பிறன்போலக் கூறுகின்றாள்; அதனால் " பொய்த்தார்; அறன் இலர் " என்று சொல்லுகிறாள்.

6. ஆம்பல் வளையையும் முத்துக்களையும் வெண்மதியும் மீன்கணமும் ஆம் என்று கொண்டு அரும்பு மலரும்; வளை - சங்கு. கணம் - கூட்டம்.

7. முரல்வாய்ச் சங்கம் - முழங்குகின்ற வாயையுடைய சங்கு.

8. வண்டல் - கடற்கரை மணலில் மகளிர் வைத்தாடும் பாவை விளையாட்டு.

9. மாழ்கி - மயங்கி.

10. பரிந்து - அறுத்து. கோதையைக் கொண்டு ஓச்சும் (ஓட்டும்).

[1]போது சிறங் கணிப்பப் [2]போவார் கண்
போகாப் புகாரே எம்மூர்.

## கானல் வரி

துறைமேய் வலம்புரி தோய்ந்து மணலுழுத
தோற்றம் [3]மாய்வான்
[4]பொறைமலி பூம்புன்னைப் பூவுதிர்ந்து நுண்தாது
போர்க்கும் கானல்
நிறைமதி வாள்முகத்து நேர்கயற்கண்
செய்த
[5]உறைமலி உய்யாநோய் [6]ஊர்சுணங்கு
மென்முலையே தீர்க்கும் போலும்.

[7]வலைவாழ்நர் சேரி வலையுணங்கு முன்றில்
மலர்கை ஏந்தி
விலைமீன் உணங்கல் பொருட்டாக வேண்டுருவம்
கொண்டு, வேறோர்
கொலைவேல் நெடுங்கண் கொடுங்கூற்றம்
வாழ்வது
அலைநீர்த்தண் கானல் அறியேன் ; அறிவேனேல்
அடையேன் மன்னோ.

---

1. குவளைமாலைப்போது சிறங்கணிப்ப - குவளை மாலையிலுள்ள பூக்கள் சிதறிக் கடைக்கணித்துப் பார்ப்பது போலக் கிடக்க. "சிறக்கணித் தாள்போல நகும்" (குறள் ௧0௯௫.)

2. போவார்கண் போகார் புகார் - போகின்றவர் அவைகளைக் கண் என்று கருதிப் போகாது நிற்கும் புகார்.

3. மாய்வான் - மறைப்பதற்காக.

4. பொறை மலி புன்னை - தழையும், அரும்பும், பூவும் நிரம்பி நிற்கும் புன்னை.

5. மலி உறை உய்யா நோய் - தாங்க முடியாதபடி மிகுவதால் வேறு மருந்துகளால் போக்க முடியாத நோய்.

6. ஊர் சுணங்கு - பரந்த தேமல். வலம்புரி மணலில் தோய்ந்து செய்த தோற்றம் மறையும்படியாகப் புன்னை நுண் தாது போர்க்கும்; அதுபோல, கயற்கண் செய்த நோயை முலையே தீர்க்கும். போலும். அசை.

7. வலை வாழ்நர் - செம்படவர். உணங்கும் - புலரவிட்டிருக்கும்.

## நிலைவரி

கயலெழுதி வில்லெழுதிக் காரெழுதிக் * காமன்
செயலெழுதித் [1] தீர்ந்த முகம் திங்களோ, காணீர் ;
திங்களோ காணீர், [2] திமில்வாழ்நர் சீறூர்க்கே
அங்கண்ணேர் வானத்து [3] அரவுஅஞ்சி வாழ்வதுவே.

புலவுமீன் வெள்ளுணங்கல்
புள்ளோப்பிக் கண்டார்க்கு
[4] அலவநோய் செய்யும் [5] அணங்கு
இதுவோ, காணீர் ;
அணங்கு இதுவோ, காணீர்,
[6] அடும்புஅமர் தண்கானல்
[7] பிணங்குநேர் ஐம்பாலோர்
பெண்கொண் டதுவே.

## முரிவரி

பொழில்தரு நறுமலரே, புதுமணம் விரிமணலே,
பழுதறு திருமொழியே, [8] பணையிள வனமுலையே,
முழுமதி புரைமுகமே, முரிபுரு வில்இணையே
எழுதரு மின்இடையே, எனை இடர் செய்தவையே.

வளைவளர் தருதுறையே, மணம்விரி தருபொழிலே,
[9] தளைஅவிழ் நறுமலரே, தனியவள் திரிஇடமே,
[10] முளைவளர் இளநகையே, முழுமதி புரைமுகமே,
இளையவள் இணைமுலையே எனை இடர் செய்தவையே.

---

* காமன் செயல் எழுதி - பிறரை வருத்தக் கூடிய காமச் செயல்களை எழுதி.

1. தீர்ந்த முகம் - அழகு முழுதும் பொருந்த அமைத்துவிட்ட முகம்.
2. திமில் - படகு.
3. அரவு - இராகு.
4. அலவ - மனம் வருந்த.
5. அணங்கு - தெய்வம்.
6. அடும்பு - ஒருவகைக் கொடி.
7. பிணங்கு நேர் ஐம்பால் - செறிந்து நீண்ட கூந்தல். பெண் - பெண் வடிவு.
8. பணை - பருத்த, வனமுலை - அழகிய முலை,
9. தளை - முறுக்கு, (அரும்பு).
10. முளை நகை - முளைபோலும் பல்.

## திணை நிலைவரி

கடல்புக்கு [1]உயிர் கொன்று வாழ்வர்நின் [2]ஐயர் ;
உடல்புக்கு உயிர்கொன்று வாழ்வைமன், நீயும் ;
[3] மிடல்புக்கு அடங்காத வெம்முலையோ பாரம் ;
இடர்புக்கு இடுகும் இடைஇழவல் கண்டாய்.

ஓடும் திமில்கொண்டு உயிர்கொல்வர் நின் ஐயர்;
[5] கோடும் புருவத்து உயிர்கொல்வை நீயும் ;
பீடும் [6]பிறர் எவ்வம் பாராய், முலைசுமந்து
வாடும் சிறுமென் [7]மருங்கு இழவல் கண்டாய்.

## வேறு

[8] பவள உலக்கை கையால் பற்றித்
[9] தவள முத்தம் குறுவாள் செங்கண் ;
தவள முத்தம் குறுவாள் செங்கண்
குவளை யல்ல கொடிய கொடிய.

கள்வாய் நீலம் கையின் ஏந்திப்
[10] புள்வாய் உணங்கல் கடிவாள் செங்கண் ;
புள்வாய் உணங்கல் கடிவாள் செங்கண்
[11] வெள்வேல் அல்ல வெய்ய வெய்ய.

---

1. உயிர் - மீன்வகை.
2. ஐயர் - தந்தை, உடன்பிறந்தோர் முதலியோர்.
3. மிடல் - வலிமை.
4. இடர்புக்கு இடுகும் இடை இழவல் - இடரிலே கிடந்து சிறுகுகின்ற இடையினை இழந்து விடாதே.
5. கோடும் - வளைந்த.
6. பிறர் எவ்வம் பார்த்தல் பீடு - பிறர்க்கு உண்டாகும் துன்பத்தைப் பார்த்து இரங்குவது உனக்குப் பெருமை; நீ அதனைப் பார்ப்பாயாக.
7. மருங்கு - இடை.
8. பவள உலக்கை - பவளத் துண்டத்தை உலக்கையாக.
9. தவள முத்தம் - வெண்மையான முத்து. குறுவாள் - குற்றுகிறவள்.
10. புள் வாய் உணங்கல் - உணங்கல் வாய் புள் ; உலருகின்ற மீன்களைக் கவர வரும் பறவைகளை. கடிவாள் - ஓப்புபவள்.
11. வெள்வேல் - வெண்மையான வேல்.

### வேறு

சேரல், மடவன்னம் ! சேரல் ; நடை ஒவ்வாய் ;
சேரல், மடவன்னம் ! சேரல் ; நடை ஒவ்வாய் ;
[1] ஊர்திரைநீர் வேலி உழக்கித் திரிவாள்பின்
சேரல், மடஅன்னம் ! சேரல் ; நடை ஒவ்வாய்.

(இவ்வண்ணம் கோவலன்) கானல்வரிப் பாடல் (பாடக்) கேட்ட மான்நெடுங்கண் மாதவியும், (இவன்பால் மன்னிய (தொரு) குறிப்பு உண்டு ; இவன் தன் நிலை மயங்கினான் என (உட்கொண்டு) கலவியால் மகிழ்ந்தாள்போல் புலவியால் யாழ் வாங்கி, தானும் ஓர் குறிப்பினள்போல் கானல் வரிப் பாடற் பாணி, நிலத்தெய்வம் வியப்பெய்த, நீள்நிலத்தோர் மனம் மகிழக் [2] கலத்தொடு புணர்ந்தமைந்த [3]கண்டத்தால் பாடத் தொடங்குமன்.

### ஆற்றுவரி

[4] மருங்கு வண்டு சிறந்தார்ப்ப
மணிப்பூ ஆடை அதுபோர்த்துக்
கருங்கயற்கண் விழித்தொல்கி
நடந்தாய் ; வாழி காவேரி !
கருங்கயற்கண் விழித்தொல்கி
நடந்த எல்லாம் நின்கணவன்
[5] திருந்துசெங்கோல் வளையாமை
அறிந்தேன் வாழி காவேரி !

வாழிஅவன்தன் வளநாடு
மகவாய் வளர்க்கும் தாயாகி
ஊழி உய்க்கும் பேருதவி
ஒழியாய் வாழி காவேரி.

---

1. ஊர் திரை - பரந்து வருகின்ற அலை. உழக்கி - அலைத்து.
2. கலம் - யாழ்.
3. கண்டம் - மிடறு (அடித்தொண்டை).
4. மருங்கு - பக்கம், வண்டு - வண்டுகள், வளையல். ஒல்கி - ஒதுங்கி.
5. திருந்து செங்கோல் - நேர்மையால் அழகிய செங்கோல்.

ஊழியுய்க்கும் பேருதவி
ஒழியாது ஒழுகல் உயிரோம்பும்
[1] ஆழியாள்வான் பகல்வெய்யோன்
அருளே வாழி காவேரி.

## சார்த்து வரி

[2] திங்கதிர் வாள்முகத்தாள் செவ்வாய்
மணிமுறுவல் ஒவ்வா வேனும்
வாங்குநீர் முத்தென்று வைகலும்
[3]மால்மகன்போல் வருதிர், ஐய,
[4] வீங்கோதம் தந்து விளங்கொளிய
வெண்முத்தம் [5]விரைசூழ் கானல்
பூங்கோதை கொண்டு [6]விலைஞர்போல்
மீளும் புகாரே எம்மூர்.

உண்டாரை [7]வெல்நறா [8]ஊண் ஒளியாப்
பாக்கத்துள் [9]உறைஒன் றின்றித்
[10] தண்டாநோய் மாதர் தலைத்தருதி என்பது
யாங்கு அறிகோம், ஐய,
[11] வண்டால் திரைஅழிப்பக் கையால்
மணல்முகந்து மதிமேல் நீண்ட
புண்தோய் [12]வேல் நீர்மல்க மாதர்
கடல்தூர்க்கும் புகாரே எம்மூர்.

---

1. ஆழியாள்வான் - ஒற்றைச் சக்கரத்தையுடைய தேர் செலுத்தும் சூரியன். பகல் வெய்யோன் - பகற்பொழுது செய்பவன்; நீதியையே விரும்புபவன்.

2. திங்கதிர் - இனிய கதிர். மணி முறுவல் - நல்ல நகை.

3. மால் மகன் - மயங்கின மகன் ; காமன் என்றுமாம்.

4. வீங்கு ஓதம் - பெரிய கடல். ஓதம் முத்தைத் தந்து கோதை கொண்டு மீளும் புகார் என்க.

5. விரை - மணம்.

6. விலைஞர் - விலை கொடுத்து ஒன்றை வாங்குபவர்.

7. வெல்நறா - மயங்கச் செய்யும் கள்.

8. ஊண் ஒளியா - உண்ட வூனை மறையாத.

9. உறை - உறுத்தல்.

10. தண்டா நோய் - நீங்காத நோய்.

11. வண்டால் - வண்டற்பாவை ; விகாரம்.

12. வேல் - வேல் போன்ற கண்.

## திணை நிலை வரி

[1] புணர்துணையோடு [2]ஆடும் பொறி அலவன் நோக்கி
[3] இணர்ததையும் பூங்கானல் என்னையும் நோக்கி
உணர்வொழியப் போன ஒலிதிரைநீர்ச் சேர்ப்பன்
[4] வணர்சுரி ஐம்பாலோய்! [5]வண்ணம் உணரேனால்.

[6] புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோல்
துன்பம் [7] உழவாய், துயிலப் பெறுதியால்.
[8] இன்கள்வாய் நெய்தால்! நீஎய்தும் கனவினுள்
[9] வன்கணார் கானல் வரக்கண்டு அறிதியோ.

### வேறு

[10] புள்ளியல்மான் தேராழி போன வழியெல்லாம்
தெள்ளுநீர் ஓதம்! சிதைத்தாய்மற்று என்செய்கோ
[11] தெள்ளுநீர் ஓதம்! சிதைத்தாய்மற்று எம்மோடீங்கு
[12] உள்ளாரோடு உள்ளாய்; உணராய்; மற்று என்செய்கோ.

நேர்ந்தநம் காதலர் [13] நேமி நெடுந்திண்தேர்
ஊர்ந்தவழி சிதைய ஊர்ந்தாய் வாழி கடலோதம்!
ஊர்ந்தவழி சிதைய ஊர்ந்தாய்மற்று எம்மொடு
[14] தீர்ந்தாய்போல் தீர்ந்திலையால், வாழி கடலோதம்.

---

1. புணர் துணை - கூடுகின்ற பெண் நண்டு.
2. ஆடும் பொறி அலவன் - விளையாடும் பொறிகளையுடைய நண்டு.
3. இணர் ததையும் - பூங்கொத்துக்கள் நெருங்குகின்ற.
4. வணர் சுரி ஐம்பால் - கடைகுழன்று சுரிந்த கூந்தல்.
5. வண்ணம் - மனக் கருத்து.
6. புன்கண் - துன்பம்.
7. உழவாய் - வருந்துவது இல்லாய்.
8. இன் கள் வாய் நெய்தால - இனிய தேனையுடைய நெய்தற் பூவே.
9. வன்கணார் - அன்பில்லாமையையுடைய காதலர்.
10. புள் இயல் மான் - பறவைபோல் விரைந்து செல்லும் இயல்பையுடைய குதிரை.
11. தெள்ளு நீர் - தெளிந்த நீர்.
12. உள்ளாரோடு உள்ளாய் - நினையாத காதலரோடு சேர்ந்துகொண்டு என் நோயை அறியாதிருக்கின்றாய்.
13. நேமி - சக்கரம்.
14. தீர்ந்தாய்போல் தீர்ந்திலை - உறவுபோல் இருந்து உறவாய் இல்லை; காரியத்தில் வேறுபடுகின்றாய்.

## மயங்குதிணை நிலைவரி

நல்[1]நித் திலத்தின் பூண் அணிந்து
நலம்சார் பவளக் கலைஉடுத்துச்
செந்நெல் [2]பழனக் கழனிதொறும்
திரையுலாவு கடல் சேர்ப்ப!
புன்னைப் [3]பொதும்பர் [4]மகரத்திண்
கொடியோன் எய்த புதுப்புண்கள்
என்னைக் காணு வகைமறைத்தால்
அன்னை காணின், என்செய்கோ.

[5]புலவுற் றிரங்கி யதுநீங்கப்
[6]பொழில் தண்டலையில் புகுந்துதிர்ந்த
கலவைச் [7]செம்மல் மணம்கமழத்
திரைஉ லாவு கடல்சேர்ப்ப,
பலவுற் றொருநோய் துணியாத
[8]படர்நோய் மடவாள் தனிஉழப்ப
[9] அலவுற் றிரங்கி அறியாநோய்
அன்னை அறியின் என்செய்கோ.

### வேறு

[10] இளையிருள் பரந்ததுவே [11]எல்செய்வான் மறைந்தனனே;
[12] களைவரும் புலம்புநீர் கண்பொழீஇ உகுத்தனவே

---

1. நித்திலம் - முத்து.
2. பழனம் - பொய்கை யருகுள்ள கழனி.
3. பொதும்பர் - சோலை.
4. மகரத் திண் கொடியோன் - மகரமீன் எழுதிய வலிய கொடியை யுடைய மன்மதன்.
5. புலவுற்று இரங்கியது - புலால் நாற்றம் உற்று வருந்தியது.
6. பொழில் தண்டலையில் - சோலையில்.
7. செம்மல் - பழைய பூக்கள்.
8. பல துன்பங்களை உற்றதனால் நினைந்து பெற்ற வருத்தம்.
9. அலவுற்று - துயரமுற்று.
10. இளை இருள் - மெல்லிய இருள்.
11. எல் - பகற் காலம்.
12. களைவரும் - நீக்குதற்கு அரிய. புலம்பு - வருத்தம்.

தளையவிழ் மலர்க்குழலாய் [1]தணந்தார்நாட்டு உளதாம்கொல்,
வளைநெகிழ எரிசிந்தி வந்தஇம் மருள்மாலை !

பறவைபாட் டடங்கினவே,
பகல்செய்வான் மறைந்தனனே ;
[2]நிறைநிலா நோய்கூர
நெடுங்கண்நீர் உகுத்தனவே.
[3]துறுமலர் அவிழ்குழலாய் !
துறந்தார் நாட்டு உளதாம்கொல்,
[4]மறவையாய் என்உயிர்மேல்
வந்தஇம் மருள்மாலை !

## சாயல் வரி

[5]கைதை வேலிக் கழிவாய் வந்துஎம்
[6]பொய்தல் அழித்துப் போனார் ஒருவர் ;
பொய்தல் அழித்துப் போனார் அவர்நம்
[7]மையல் மனம்விட்டு அகல்வார் அல்லர்.

அன்னம் துணையோடு ஆடக் கண்டு
[8]நென்னல் நோக்கி நின்றார் ஒருவர் ;
நென்னல் நோக்கி நின்றார் அவர்நம்
[9]பொன்னேர் சுணங்கின் போவா ரல்லர்.

## திணை நிலைவரி

அடையல், [10]குருகே ! அடையல் எம்கானல் ;
அடையல், குருகே ! அடையல் எம்கானல் ;

---

1. தணந்தார் - பிரிந்தவர்.
2. நிறை நிலா நோய் - நிறுத்தினால் நிறுத்தியவழி நில்லாது பெருகுகின்ற நோய், கூர - உண்டாக.
3. துறுமலர் - செறிந்த பூ.
4. மறவையாய் - மறம் உடையதாய்.
5. கைதை - தாழம்பூ. (தாழம்புதர்).
6. பொய்தல் - மகளிராடும் விளையாட்டு. அழித்து - கைவிடும்படி செய்து.
7. மையல் - மயக்கம்.
8. நென்னல் - நேற்று.
9. பொன் நேர் சுணங்கு - பொன்போன்ற தேமல். இன் - போல.
10. குருகு - நீர்ப்பறவை.

உடைதிரை நீர்ச் சேர்ப்பற்கு [1]உறுநோய் உரையாய்
அடையல் குருகே! அடையல் எம்கானல்.

இவ்வாறு பாடிப் போந்த மாதவி மீட்டும் தன் மெல் விரலால் செவ்வழிப் பாலைப்பண்ணை இசைத்து வரிப் பாட்டுப் பாடினாள்.

## முகமில் வரி

[2] நுளையர் விளரி [3]நொடிதரும்தீம் பாலை
[4] இளிகிளையில் கொள்ள இறுத்தாயால், மாலை!
இளிகிளையில் கொள்ள இறுத்தாய்மன் நீயேல்
[5] கொளைவல்லாய் என்ஆவி கொள்,வாழி, மாலை!!

[6] பையுள்நோய் கூரப் பகல்செய்வான் போய்வீழ
[7] வையமோ கண்புதைப்ப வந்தாய், மருள்மாலை!
மாலைநீ ஆயின், மணந்தார் அவராயின்
[8] ஞாலமோ நல்கூர்ந் ததுவாழி, மாலை!!

## வேறு

[9] தீத்துழைஇ வந்தஇச் [10]செல்லல் மருள்மாலை
[11] தூக்காது துணிந்தஇத் [12]துயரெஞ்சு கிளவியால்
பூக்கமழ் கானலில் பொய்ச்சூள் பொறுக்கஎன்று
மாக்கடல் தெய்வம்! நின் மலரடி வணங்குதும்.

---

1. உறுநோய் - யான் உற்ற வருத்தத்தை.
2. நுளையர் - செம்படவர். விளரி - அழுகிறவர் பாடும் பண்.
3. நொடிதரும் - பாடும்.
4. இளி கிளையில் கொள்ள - மயக்கத்தால் யாழ் வாசிப்பவர் விரல் சென்று பகை நரம்பில் தடவ.
5. கொளை வல்லாய் - கொள்ளல் வல்லாய்!
6. பையுள் நோய் - வருத்தம் மிக்க நோய்.
7. வையம் - நிலத்தில் வாழ்பவர்.
8. ஞாலம் நலகூர்ந்தது - உலகு வறுமை உற்றது; அஃதாவது, தனக்குண்டானதுபோல எல்லார்க்கும் வருத்த முண்டாகியதாக நினைத்து "ஞாலமோ நல்கூர்ந்தது" என்கின்றாள்.
9. தீத்துழைஇ - நெருப்பைத் துழவிக்கொண்டு
10. செல்லல் - வருத்தம்.
11. தூக்காது - நம்மை வருத்துமென்று கருதாமல்.
12. துயரெஞ்சு கிளவி - நல்ல வார்த்தை.

## கட்டுரை

(என்று மாதவி பாடக் கேட்டு), யாழ் இசை மேல் வைத்துத் தன் ஊழ்வினை வந்து உருத்ததாகலின், (கோவலன்) யான் கானல் வரி பாட, (இவள்) தான் ஒன்றின் மேல் மனம் வைத்துப் பாடினாள்; (இவள்) [1]மாயப் பொய் பல கூட்டும் மாயத்தாள் என, உவவுற்ற திங்கள் முகத்தா(ளாகிய அவளைக்) [2]கவவுக்கை நெகிழ்ந்தனனாய், "ஈங்கும் பொழுது கழிந்தது; ஆதலின், எழுதும்" என்று (அவ)ளுடன் எழாது, (தான்மட்டில்) ஏவலாளர் உடன்சூழ்தரப் (போயினன்;) போன பின்னர், தாதவிழ் மலர்ச்சோலை [3]ஓதை யாய்த்து ஒலியவித்துக் கையற்ற நெஞ்சினளாய் வையத்தின் உள்புக்குக் காதலனுடன் அன்றியே மாதவி தன் மனை புக்காள்.

1. மாயப் பொய் - வியக்கத் தகுந்த பொய்.
2. கவவுக்கை - இறுகத் தழுவிய கை.
3. ஓதை ஆய்த்து - ஓசையாகியது.

# அ. வேனிற் காதை

[1]" நெடியோன் குன்றமும் [2]தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நன்னாட்டு
மாட மதுரையும் பீடார் [3]உறந்தையும்
[4] கலிகெழு வஞ்சியும் ஒலிபுனல் புகாரும்
அரைசுவீற் றிருந்த உரைசால் சிறப்பின்
மன்னன் [5]மாரன் மகிழ்துணை யாகிய
இன்இள வேனில் வந்தனன் இவண்" என
வளம்கெழு பொதியில் மாமுனி பயந்த
[6] இளங்கால் தூதன் இசைத்தனன் ; ஆதலின்,
[7] மகர வெல்கொடி மைந்தன் சேனை
புகரறு கோலம் கொள்ளும்என் பதுபோல்,
கொடிமிடை சோலைக் [8]குயிலோன் என்னும்
[9] படையுள் படுவோன் [10]பணிமொழி கூற,
மடலவிழ் கானற் கடல்விளை யாட்டினுள்
கோவலன் ஊடக், கூடாது ஏகிய
மாமலர் நெடுங்கண் மாதவி, விரும்பி,
வானுற நிவந்த மேல்நிலை மருங்கின்
[11] வேனிற் பள்ளி ஏறி, மாணிழை,
தென்கடல் முத்தும் தென்மலைச் சந்தும்
தன்கடன் இறுக்கும் தன்மைய ஆதலின்,
கொங்கை முன்றில் குங்கும [12]வளாகத்து

---

1. நெடியோன் - திருமால். குன்றம் - வேங்கடம்.
2. தொடியோள் - கன்னியாகுமரி.
3. உறந்தை - உறையூர்.
4. கலி - ஆரவாரம்.
5. மாரன் - காமன்.
6. இளங்கால் தூதன் - தென்றற் காற்று ஆகிய தூதுவன்.
7. மகரவெல் கொடிமைந்தன் - காமன். அவனது சேனை - மகளிர் கூட்டம். புகர் - குற்றம்.
8. குயிலோன் - குயில்.
9. படையுள் படுவோன் - படையில சிறியவனாய், கானம் ஊதுபவன்.
10. பணிமொழி - கட்டளை; பணித்த சொல்.
11. வேனிற் பள்ளி - வேனிற்காலத்தே கொள்ளுகின்ற படுக்கையறை.
12. வளாகம் - இடம்.

மையறு சிறப்பின் [1] கையுறை ஏந்தி
[2] அதிரா மரபின் யாழ்கை வாங்கி
மதுர கீதம் பாடினள்.

இந்த மதுர கீதம் செம்பாலையென்னும் பண் என்பர். இதனை முதற்கண் கண்டத்தால் பாடி மயங்கி அதனையே யாழினும் பாடினள்; அதனாலும், தான் கோவலனைப் பிரிந்த துயர் வேனில் விருப்பால் மிகுவதால், ஆற்றாளாய், பலவகைப் பண்களையும் பாடினள். அவற்றாலும் அவளது துயர் நீங்கவில்லை. பின்பு ஒருவாறு தேறி, கோவலனுக்குத் திருமுகமொன்றெழுத மனத்தால் எண்ணினள். உடனே, தாழைப் பூவினது வெள்ளியமடலை ஓலை நறுக்காகவும் [3]பித்திகையின் கூறிய அரும்பை எழுத்தாணியாகவும் கொண்டு, செம்பஞ்சின் குழம்பில் தோய்த்து உதறி எழுதலானாள்.

மன்னுயி ரெல்லாம் மகிழ்துணை புணர்க்கும்
இன்னிள வேனில் இளவர சாளன்
[4] அந்திப் போதகத்து [5]அரும்பிடர்த் தோன்றிய
திங்கட் செல்வனும் [6]செவ்விய னல்லன்;
புணர்ந்த மாக்கள் பொழுதுஇடைப் படுப்பினும்
[7] தணந்த மாக்கள் தம்துணை மறப்பினும்
நறும்பூ [8]வாளியின் நல்லுயிர் கோடல்
இறும்பூ தன்றுஇஃது அறிந்தீ மின்எனத்

தன் ஆற்றாமைக் குறிப்பையும், தான் கற்ற நாடகக் கலைவகைகளுள் கோவலனோடுதான் கூடி இருந்தபோது அவன்பால் நிகழ்த்திக் காட்டிய [9]வரிவகைகளையும் வாயாற் சொல்லிச் சொல்லி,

---

1. கையுறை - காணிக்கை.
2. அதிராமரபு - தன் ஓசையில் அபசுரம் படுவதில்லாத.
3. பித்திகை - பிச்சியென்னும் பூ.
4. அந்திப் போதகம் - அந்திமாலையாகிய யானை.
5. அரும்பிடர் - ஏறுதற்கரிய கழுத்தின்மேல்.
6. செவ்வியனல்லன் - நேர்மையின்றி உடலாலும் கோணியிருப்பவன்; அதனால் இன்பம் செய்யான்.
7. தணந்த மாக்கள் - பிரிந்தவர்கள்.
8. வாளி - அம்பு.
9. வரிவகைகள் - நடிப்பு வகைகள்.

[1] விளையா மழலையின் விரித்துரை எழுதிப்
பசந்த மேனியள் படருறு மாலையின்
வசந்த மாலையை வருகெனக் கூஉய்த்
தூமலர் மாலையின் துணிபொருள் எல்லாம்
கோவலற்கு அளித்துக் [2]கொணர்க ஈங்குஎன,

அவள் அதனை எடுத்துச் சென்றனள். கோவலன் கூலவீதியில் இருப்பக் கண்டு, அவள் அத் திருமுகத்தை அவன்பால் கொடுத்தாள். அவன் அதனைப் படித்து, வசந்தமாலையை நோக்கி, "நங்காய், இதனுட் கூறியுள்ள,

காதலில் தோன்றிய [3]கண்கூடு வரியும்,
கருநெடுங் கண்ணி [4]காண்வரிக் கோலமும்,
செருவேல் நெடுங்கண் [5]சிலதியர் கோலத்து
ஒருதனி வந்த [6]உள்வரி யாடலும்,
புறத்துநின் றாடிய [7]புன்புற வரியும்,
கிளர்ந்துவே றாகிய [8]கிளர்வரிக் கோலமும்,
தேர்ந்துதேர்ந் துரைத்த [9]தேர்ச்சிவரி யன்றியும்,
கண்டவர்க் குரைத்த [10]காட்சி வரியும்,
எடுத்தவர் தீர்த்த [11]எடுத்துக்கோள் வரியும்

---

1. விளையா மழலை - முதிராத இளமை கனிந்த சொல்.
2. கொணர்க - அழைத்துக்கொண்டு வருக.
3. கண்கூடு வரி - பிறர் சொல்லாமலே தானே விரும்பி முன்னின்று நடிப்பது.
4. காணவரிக் கோலம் - நகைத்துக்கொண்டே வாவென வருதலும் போஎனப் போதலும் ஆக நடிப்பது.
5. சிலதியர் - ஏவற் பெண்கள்.
6. உள்வரி யாடல் - சேடிப் பெண்களைப்போல உருக்கொண்டு நடித்து இன்பம் செய்தல்.
7. புன்புறவரி - காதல் மிகவுடையவள்போல அருகில் வந்து பின் புறத்தே சென்று நடிப்பது.
8. கிளர்வரி - தனக்கும் காதலனுக்கும் சேடியர் தூது சொல்ல நெருங்குவதும் போவதுமாக நடிப்பது.
9. தேர்ச்சிவரி - காதலன் பிரிந்தானாகக்கொண்டு, அவனது கிளைஞருக்குத் தன் துன்பத்தைச் சொல்லுவதுபோல நடித்தல்.
10. காட்சிவரி - தன்னைப் பார்ப்பவர் அனைவருக்கும் தன் துன்பங்கள் தெரியக் காண நடித்தல்.
11. எடுத்துக் கோள்வரி - தான் காமத்தால் துன்புற்று மயங்கி வீழ்ந்ததாகவும், பிறர் எடுத்துத் தேற்றியதாகவும் நடித்தல்.

ஆடல் மகளே யாதலின், ஆயிழை!
[1] பாடு பெற்றனஅப் பைந்தொடி தனக்குஎன

உரைத்துத் தன் வாராமையும் சொல்லி விட்டான். அவன் மறுத்தது கண்ட வசந்தமாலை செயலற்று, மெலிவுமுற்றாள். பின்பு அவள் வாடிய உள்ளமுடன் விரைந்து மாதவிபால் சென்று, கோவலன் கூறியதும், மறுத்ததும் விரியக் கூறி, அவனை "அன்பில்லாதவன், கொடியன்; இனி, அவன் வாரான்" எனப் பழித்துரைத்தாள். அது கேட்கப் பொறாத மாதவி, நாடகக் கணிகை யாயினும் கற்பும் பொற்பும் சிறக்கப்பெற்றவளாதலால், வசந்த மாலைக்குத் "தோழி, அவரைக் கொடுமை கூறாதே; அருட் செல்வர்; அவர்,

மாலை வாரா ராயினும், மாணிழை,
காலைகாண் குவம்" எனக் கையறு நெஞ்சமொடு
பூமலர் அமளிமிசைப் பொருந்தாது வதிந்தனள்.

1. பாடு பெற்றன = பெருமை பெற்றன.

## கூ. கனத்திறம் உரைத்த காதை

மாலதி என்னுமொரு பார்ப்பனி தன் மாற்றாள் குழந்தைக்கு ஒரு நாள் சங்கு கொண்டு பால் ஊட்ட, அக் குழந்தை பால் விக்கி இறந்தது. அது கண்டு அஞ்சின அவள், சட்டென அதனை எடுத்துக் கொண்டு அமரர் தருக் கோட்டம் முதலாகப் பல்வகைக் கோட்டங்கட்கும் சென்று முடிவில் சாத்தனார் கோட்டத்தில் பாடு கிடந்தாள். அது காலை, இடாகினி என்னும் பேய் அக் குழந்தையை எடுத்து விழுங்கி ஒழிந்தது. மனம் இரங்கிய சாத்தனார் அவளைத் தேற்றிப் போகச் சொல்லி வழியில் தானே அக் குழந்தை உருவாய்க் கிடந்தார். அவள் மனத் துயர் நீங்கிற்று. அக் குழந்தையான சாத்தனார் வளர்ந்து கல்வி நிரம்பி, பெற்றோர்க்கு இறுதிக் கடன் செய்து, தேவந்தி என்னும் பெண்ணை மணந்து எட்டியாண்டு தன் மனைவியொடு வாழ்ந்து பழையபடியே தேவவுருக் கொண்டார். தேவந்தி அன்று முதலே அச் சாத்தனார் கோயிலை வழிபட்டு வருவாளாயினள். இவளுக்குக் கண்ணகி தன் கொழுநனைப் பிரிந்ததனால் துன்புறுவது தெரிந்தது. அதனால், அவளோடு நட்புற்று அவட்குத் தோழியாய் இருந்து வந்தாள். ஒரு நாள் தேவந்தி கண்ணகியின் முகம் நோக்கி, "நீ நின் கணவனது கூட்டம் பெறுக" என்று வாழ்த்தினள். அதனால் கண்ணகிக்கு உவகையுண்டாயிற்றாயினும், "நீ கூறுமாறு யான் என் கணவனைப் பெறுவேன்; ஆனால்,

[1] கடுக்கும்என் நெஞ்சம் கனவினால்; என்கை
[2] பிடித்தனன் போய்ஓர் பெரும்பதியுட் பட்டேம்;
பட்ட பதியில் படாத தொருவார்த்தை
இட்டனர் ஊரார், [3] இடுதேள்இட்டு என்தன்மேல்,

---

1. கடுக்கும் - ஐயப்படுகிறது.

2. பிடித்தனன் - என் கணவன் என் கையைப் பற்றிக்கொண்டு போக.

3. இடுதேள் இட்டு - தேள் கொட்டப்படுபவர் தெரியாவகை, தேளல்லாத ஒன்றை மறைத்துக்கொண்டு வந்து அவர் மேலே போட்டுப் பயமுறுத்துதல்.

கோவலற்கு உற்றதுஓர் தீங்குஎன்று ; அதுகேட்டுக்
காவலன் முன்னர்யான் கட்டுரைத்தேன் ; காவலனோடு
ஊர்க்குற்ற தீங்கும் ஒன்றுஉண்டால் ; [1]உரையாடேன் ;
[2] தீக்குற்றம் போலும், செறிதொடீஇ ! தீக்குற்றம்
உற்றேனோடு உற்ற [3]உறுவனோடு யான்உற்ற
[4] நற்றிறம் கேட்கின் நகையாகும்"

என்று தான் கண்ட கனவின் திறத்தைக் கட்டுரைத்தாள்.

அதனைக் கேட்ட தேவந்தி,

[5] கைத்தாயும் அல்லை ; கணவற்கு ஒருநோன்பு
பொய்த்தாய் பழம்பிறப்பில் ; [6]போய்க்கெடுக ; உய்த்துக்
கடலொடு காவிரி சென்றலைக்கும் [7]முன்றில்
மடலவிழ் நெய்தலங் கானல் [8]தடமுள ;
சோமகுண்டம் சூரிய குண்டம் துறைமூழ்கிக்
காமவேள் கோட்டம் தொழுதார், கணவரொடு
தாம்இன் புறுவர் உலகத்துத் தையலார் ;
[9] போகம்செய் பூமியினும் போய்ப் பிறப்பர் ; யாம் ஒரு
[நாள் ஆடுதும்,

என்று சொன்னாள். அதற்கு, கண்ணகி, கற்புடை மக ளிர் தம் கணவரை அன்றிப் பிற தெய்வங்களைக் கை தொழுதல் இலர் என்ற கருத்தால், அது "பீடன்று" என மறுத்திருந்தாள். இவ்வாறு இருக்கையில், வாயிலில் இருந்த ஏவலாட்டி வந்து, "காவலனாகிய கோவலன் வந்து நம் கடை யகத்துள்ளான்" என்றாள். கண்ணகியும் விரைந்து சென்று முகமலர்ந்து வரவேற்றாள். அவளோடு இனிதிருந்த கோவ

1. உரையாடேன் - இழிவான கனாக் கண்டால் பிறர்க்குச் சொல்லலா காது என்ற கொள்கையால் சொல்லிற்றிலேன்.

2. தீக்குற்றம் - கடிதான குற்றம் (முலை திருகி யெறிதல்). உற் றேன் - செய்தேன்.

3. உறுவன் - மிக்கவனாகிய கோவலன்.

4. நற்றிறம் - இருவரும் சுவர்க்கம் புகுந்தது.

5. கைத்தாயும் அல்லை - நின் கணவனால் நீ வெறுக்கப்படவில்லை.

6. போய்க் கெடுக - உன்னைப் பற்றிய தீங்குகள் எல்லாம் அழிக.

7. முன்றில் - முன்னேயுள்ள இடம்.

8. தடம் - தடாகம்.

9. போகம் செய்பூமி - போகபூமி.

லன், கண்ணகியின் வருந்திய நிலையும் வாடிய மேனியும் கண்டு பெரு வருத்தம் கொண்டு, நெஞ்சு கலுழ்ந்து,

[1] சலம்புணர் கொள்கைச் [2]சலதியொ டாடிக்
குலம்தரு [3] வான்பொருட் குன்றம் தொலைந்த
[4] இலம்பாடு நாணுத் தரும்எனக்கு

என்றான். மாதவிக்குக் கொடுக்கும் பொருள் குறைந்ததனால் இவ்வாறு இவன் தளர்ந்து கூறினான் என்று கொண்டு, கண்ணகி, "ஏனை அணிகலமெல்லாம் ஒழியினும், யான் அணியாது வைத்திருக்கும் சிலம்புகள் உள; அவற்றைக் கொண்டு செல்க" என்று பரிந்து கூறினாள். கோவலன் மனம் புண்பட்டு, "சேயிழை, கேள்: இச்

சிலம்பு முதலாகச் சென்ற கலனோடு
[5] உலந்தபொருள் [6] ஈட்டுத லுற்றேன்; மலர்ந்தசீர்
மாட மதுரை யகத்துச் சென்று"

என்று சொல்லி, "பொழுது விடிதற்குள் போதற்கு நினைந் தேன்; நீயும் என்னோடு எழுக" என மொழிந்தான்.

காதலி கண்ட கனவு கருநெடுங்கண்
மாதவிதன் சொல்லை வறிதாக்க—[7]மூதை
வினைகடைக் கூட்ட [8]வியம்கொண்டான் கங்குல்
கனை [9]சுடர் கால்சியா முன்.

1. சலம் - பொய்.
2. சலதி - பொய் பேசுபவள்; பொய்யொழுக்க முடையவள்.
3. வான் பொருள் - மிகுந்த செல்வம்.
4. இலம்பாடு - இல்லாமை (வறுமை).
5. உலந்த - கெட்ட.
6. ஈட்டுதலுற்றேன் - தேடிச் சேர்க்கத் துணிந்தேன்.
7. மூதை - பழைய.
8. வியம் கொண்டான் - வினையின் ஏவலை மேற்கொண்டான்.
9. சுடர் கங்குல் கால்சியாமுன் - சுடர் இருளை அதன் இடத்தினின்று போக்காத முன்பே; விடியுமுன்பே என்றபடி.

## ப. நாடுகாண் காதை

[1]வான்கண் விழியா வைகறை யாமத்து
[2]மீன்திகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்
காரிருள் நின்ற [3]கடைநாட் கங்குல்
ஊழ்வினை [4]கடைஇ உள்ளம் [5]துரப்பக்

கோவலன், கண்ணகி நல்லாளுடன் புகார் நகரத்தின் தோரண வாயிலைக் கடந்து, மணிவண்ணன் கோயிலை அடைந்து அவனை வலம் செய்து வணங்கி, புத்த தருமங்களை அந்தர சாரிகள் மறைய இருந்து ஓதுதற்காக இந்திரன் நிருமித்த இந்திர விகாரம் ஏழும் பொருந்திய புத்த சைத்தியத்தை அடைந்தான். அதன்பின் அருகன் கோயிலில் உள்ள பெருமன்றத்தில் நின்ற அசோக மரத்தின் நிழலில் [6]உலக நோன்பிகள் இட்ட சிலாதலத்தைக் கண்டு தொழுது வலம் செய்து கொண்டு, ஊர் வாயிலைக் கடந்து, இருவரும்,

[7]கலையி லாளன் காமர் வேனிலொடு
மலய மாருதம் [8]மன்னவற்கு இறுக்கும்
பன்மலர் அடுக்கிய நன்மரப் பந்தர்
[9]இலவந் திகையின் எயிற்புறம் போகிக்

காவிரிக்குச் செல்லும் பெரு வழியைத் தொடர்ந்து சென்று, அதன் கரை வாயிலைச் சேர்ந்தனர்; பின்னர், காவிரியின்வடகரை வழியாக மேற்குத் திக்குநோக்கி ஆங்கே செறிந்திருந்த மலர்ப்பொழில்களி னூடே ஒரு காவதம் நடந்து கவுந்திப் பள்ளியைக் கண்டடைந்தனர். அப் பள்ளியிற்

---

1. வான்கண் - சூரியன்.
2. மீன் - நட்சத்திரம்.
3. கடைநாட்கங்குல் - கடையாமத்தில் இருள் நின்ற இரவு.
4. கடைஇ - செலுத்தி.
5. துரப்ப - முடுக்க.
6. உலக நோன்பிகள் - சிராவகர். (இல்லிருந்து வாழும் சைனர்).
7. கலையிலாளன் - உடலுருவில்லாத காமன்.
8. மன்னவன் - சோழன். காமன் சோழனுக்கு வேனிலையும், மாருதத்தையும் திறையாக இறுக்கும்.
9. இலவந்திகை - வசந்தச் சோலை. எயில் - மதில்.

சிறிதுபோது இருப்ப, கண்ணகி, கோவலனை நோக்கி, புன் முறுவலுடன், "மதுரை மூதூர் யாது?" என வினவ, அவன், "நல்லாய்! அது ஆறைங்காத அளவில் (முப்பது காத தூரத்தில்) உளது; சேய்த்தன்று, நணித்தே" என்றான். அவள் நகைத்து மகிழ, இருவரும் அப் பள்ளியின்கண் வாழ்ந்த காவுந்தி ஐயையைக் கண்டு அடி தொழுதனர். அவர்களைக் கண்ட கவுந்தி, மகிழ்ந்த உள்ளத்தளாய்,

உருவும் குலனும் உயர்பே ரொழுக்கமும்
[1]பெருமகன் திருமொழி பிறழா நோன்பும்
உடையீர் ! என்னே, [2]உறுகணாளரின்
[3]கடைகழிந்து இங்ஙனம் கருதிய வாறு ?

என்று கேட்டனள். கோவலன், "உறுதவத்தீர், உரையாட்டு ஒன்றும் இல்லை. மதுரை மூதூர் சென்று பொருள் ஈட்டும் வேட்கை யுடையேன்" என்றான். "அது கருத்தாயின், நீவிர் நெறியின் அருமை அறிந்திலீர்; அது காடும் நாடும் இடையிட்டுப் பருக்கைகள் நிறைந்திருக்கும்; இவள் அதனைக் கடந்து போதற்கு வேண்டும் தன்மையுடையவளல்லள்; இனி ஊழ் என் செய்து முடிக்குமோ? அதனை அறிவார் யார்? அன்றியும் உயர்குடிப் பிறந்த நீ இவளை ஒருங்கு கொண்டு செல்வது ஏலாது; ஆதலால் செல்வதை ஒழிக எனின், நீவிர் ஒழிகின்றிலீர்" என்று முதற்கண் மொழிந்து, பின்பு,

"[4]மறவுரை நீத்த மாசறு கேள்வியர்
அறவுரை கேட்டுஆங்கு [5]அறிவனை ஏத்தத்
தென்தமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரைக்கு
[6]ஒன்றிய உள்ள முடையேன் ; ஆகலின்,

1. பெருமகன் - அருகதேவன்.
2. உறுகணாளர் - துன்பமுறும் பாவிகள்.
3. கடைகழிந்து - வீடுவாசலைவிட்டு.
4. மற உரை நீத்த மாசறு கேள்வியர் - பாவம் உண்டு பண்ணும் சொற்களைச் சொல்லுதல் இல்லாத குற்றமற்ற ஞானிகள்.
5. அறிவனை - அருகதேவனை.
6. ஒன்றிய உள்ளம் - போவதற்கு ஒருப்பட்ட கருத்து.

[1] போதுவல் யானும் ; போதுமின் " என்ற
காவுந்தி ஐயையைக் கைதொழுது ஏத்தி
" அடிகள் நீரே அருளுதி ராயின், இத்
[2] தொடிவளைத் தோளி துயர்தீர்த் தேன் " எனக்

கோவலன் உவகை மிகுந்து கூறலும், கவுந்தி, "கோவல, நீ செல்லுதற்கு மேற்கொண்ட வழியின்கண் துன்பம் தருவன பலவும் உண்டு; கேள்" என்று வழியின் அருமைகளை எடுத்துக் கூறலானாள்.

[3] வெயில்நிறம் பொறாஅ மெல்லியற் கொண்டு
பயில்பூந் தண்டலைப் [4]படர்குவ மெனினே,
மண் [5]பக வீழ்ந்த கிழங்குஅகழ் குழியைச்
சண்பகம் நிறைத்த [6]தாதுசோர் பொங்கர்
பொய்யறைப் படுத்துப் [7]போற்று மாக்கட்குக்
கையறு துன்பம் காட்டினும் காட்டும் ;
உதிர்[8]பூஞ் செம்மலின் ஒதுங்கினர் கழிவோர்
முதிர்தேம் [9]பழம்பகை முட்டினும் முட்டும்;
மஞ்சளும் இஞ்சியும் [10]மயங்கரில் வலயத்துச்
செஞ்சுளைப் பலவின் [11]பரல்பகை உறுக்கும் ;
கயல்நெடுங் கண்ணி காதற் கேள்வ !

---

1. போதுவல் - வருவேன்.

2. தொடிவளைத் தோளி - தொடியும் வளையும் அணிந்த தோள்களையுடைய இக் கண்ணகி.

3. வெயில் நிறம் பொறாஅ மெல்லியல் - வெயிலின் வெளிச்சத்தைக் கண்ணால் பார்க்கவும் பொறுக்காத மென்மையான தன்மையையுடைய கண்ணகி.

4. படர்குவம் - செல்வோம்.

5. பக வீழ்ந்த - வெடிப்புண்டாகக் கீழே உண்டாகிய.

6. தாது - சண்பகமரத்தின் பூந்தாது.

7. போற்று மாக்கட்கு - தெரியாமல் நடந்து செல்லுபவருக்கு.

8. பூஞ் செம்மல் - உதிர்ந்து கிடந்த பழம் பூக்களில்.

9. பழம் பகை முட்டும் - பலாப்பழம் பகைபோல முட்டும்.

10. மயங்கு அரில் வலயம் - ஒன்றோடொன்று பின்னிக்கொண்டு கிடக்கும் பாத்தி.

11. பரல் - பலாக்கொட்டை, பகை உறுக்கும் - பகையாய்க் காலை உறுத்தும்.

[1] வயலுழைப் படர்குவம் எனினே, ஆங்குப்
[2] பூநா றிலஞ்சிப் பொருகய லோட்டி
நீர்நாய் கௌவிய [3]நெடும்புற வாளை
[4] மலங்குமிளிர் [5]செறுவில் விலங்கப் பாயின்
கலங்கலும் உண்டுஇக் காரிகை ; ஆங்கண்,
கரும்பில் தொடுத்த பெருந்தேன் சிதைந்து
சுரும்புசூழ் பொய்கைத் தூநீர் கலக்கும் ;
அடங்கா வேட்கையின் [6]அறிவஞர் எய்திக்
குடங்கையின் [7]நொண்டு கொள்ளவும் கூடும்;
[8] குறுநர் இட்ட குவளையம் போதொடு
பொறிவரி வண்டினம் பொருந்திய கிடக்கை
நெறிசெல் வருத்தத்து நீரஞர் எய்தி
அறியாது அடிஆங்கு இடுதலும் கூடும் ;
எறிநீர் அடைகரை இயக்கம் தன்னில்
[9] பொறிமாண் அலவனும் நந்தும் போற்றாது
[10] ஊழடி யொதுக்கத்து உறுநோய் காணில்
[11] தாழ்தரு துன்பம் தாங்கவும் ஒண்ணா;
வயலும் சோலையு மல்லது யாங்கணும்
[12] அயல்படக் கிடந்த நெறிஆங்கு இல்லை ;
[13] நெறியிருங் குஞ்சி நீவெய் யோளொடு
குறியறிந்து அவையவை குறுகாது ஓம்புஎனச்

---

1. வயலுழை - வயல்களின் வழியாக.
2. பூ நாறு இலஞ்சி - பூக்களின் மணம் கமழும் குளம்.
3. நெடும் புற வாளை - நீண்ட முதுகையுடைய வாளை,
4. மலங்கு - ஒருவகை மீன்.
5. செறுவில் - வயலில்.
6. அறிவஞர் - அறிவு கலக்கம்.
7. நொண்டு - முகந்துகொண்டு.
8. குறுநர் - களை பறிப்பவர்.
9. பொறிமாண் அலவன் - புள்ளியால் மாட்சிமைப் பட்ட நண்டு.
10. ஊழடி யொதுக்கம் - முறையே அடிமேல் அடி வைத்து நடக்கும் நடை.
11. தாழ்தரு - தங்கும்.
12. அயல்பட - வேறாக.
13. நெறியிருங்குஞ்சி - நெறித்த கரிய தலைமயிர்.

சொல்லித் தோளில் தூகினும், கையில் பிச்சைப் பாத்திரமும் மயிற்பீலியும் கொண்டு [1]"மொழிப்பொருள் தெய்வம் வழித் துணை யாக" என்று புறப்பட்டனர்.

வழியில், காவிரியின் புதுநீர்ப் பெருக்கு மதகுகளில் முடுகியேகும் ஓசையும், வயல்களில் கம்புட்கோழியும், நாரையும் பிறவுமாகிய புள்ளினங்களின் ஒலியும்,

[2] கருங்கை வினைஞரும் களமரும் கூடி
ஒருங்குநின் றார்க்கும் ஒலியே அன்றியும்,
செங்கயல் நெடுங்கண் சின்மொழிக் [3]கடைசியர்
வெங்கள் [4]தொலைச்சிய விருந்திற் பாணியும்,
பார்உடைப் பனர்போல் [5]பழிச்சினர் கைதொழ
ஏரோடு நின்றோர் [6]ஏர்மங் கலமும்,
[7] பெருஞ்செய்ந் நெல்லின் [8]முகவைப் பாட்டும்,
தெண் [9]கிணைப் பொருநர் செருக்குடன் எடுத்த
[10] மண்கணை முழவின் மகிழிசை யோதையும்,

கேட்டவண்ணம் சென்ற இம் மூவரும் சில ஊர்களைக் கடந்து சென்றனர். அங்கே, மறையோர் இருக்கையும்,

பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வர்
இரப்போர் சுற்றமும் [11]புரப்போர் கொற்றமும்
உழவிடை விளைப்போர் பழவிறல் ஊர்களும்

கண்டு மகிழ்ந்தனர். ஆயினும், இவ்வாற்றால் இவர்கள் ஒரு காவதமே செல்ல முடிந்தது. முடிவில் ஆற்றிடைக்குறை

---

1. மொழிப் பொருள் தெய்வம் - உபதேச மந்திரம்.
2. கருங்கை வினைஞர் - பள்ளர்; பறையர். களமர் - உழவர்.
3. கடைசியர் - உழவர் மகளிர்.
4. தொலைச்சிய - தொலைத்த. விருந்திற் பாணி - பழகாத பாட்டு.
5. பழிச்சினர் - போற்றி.
6. ஏர் மங்கலம் - ஏர் உழுவார் பாடும் பாட்டு.
7. பெருஞ்செய் - பெரிய வயல்.
8. முகவைப் பாட்டு - நீர் இறைப்பவர் பாட்டு. ஏற்றப் பாட்டு.
9. கிணைப் பொருநர் - தடாரி என்னும் வாத்தியத்தை இசைக்கும் பாடகர்.
10. மண்கணை முழவு - வாரால் இறுகக்கட்டி மார்ச்சனை அமைக்கப் பெற்ற முழா. மார்ச்சனை - தட்டினால் கும்கும் என்று ஓசை எழுப்புவது.
11. புரப்போர் - அரசர். கொற்றம் - வெற்றி.

ஒன்று இவர்கள் முன் தோன்றிற்று. அதனருகே வானவர் உறையும் பொழிலொன்று இருந்தது. அதன்கண், உலக நோன்பிகள் இட்ட சிலாதலம் ஒன்று காணப்பட்டது. அதன் மேல் தருமம் உரைக்கும் சாரணர் தோன்ற, அவர் திருவடி களில் இம் மூவரும் வீழ்ந்து வணங்கினர். இவருள் கோவல னும் கண்ணகியும்,

வந்த காரணம் வயங்கிய கொள்கைச்
[1] சிந்தை விளக்கில் தெரிந்தோ னாயினும்
ஆர்வமும் [2]செற்றமும் அகல நீக்கிய
வீரனாகலின் [4]விழுமம் கொள்ளான்;
கழிபெருஞ் சிறப்பின் கவுந்தி! காணாய்.
ஒழிகென ஒழியாது ஊட்டும் வல்வினை,
[5] இட்ட வித்தின் எதிர்ந்துவந் தெய்தி
ஒட்டுங் காலை ஒழிக்கவும் ஒண்ணா;
[6] கடுங்கால் நெடுவெளி இடுஞ்சுடர் என்ன
ஒருங்குடன் நில்லா உடம்பிடை உயிர்கள்

என்று மொழிந்து, அருக தேவனது பலவேறு சிறப்பியல்பு உரைக்கும் பெயர்களைப் பலபட ஓதிப் புகழ்ந்து, "அப் பெருமான் ஓதிய வேதவொளி உறின் அல்லது, பிறவியாகிய இருட்டறைப் பட்டவர் அதனினின்றும் விடுபட்டுப் போதார்" என்று கூறினர்.

சாரணர் வாய்மொழி கேட்டுத் தவமுதல்
காவுந்தி, கைதன் தலைமேற் கொண்டு,
ஒரு [7]மூன் றவித்தோன் ஓதிய ஞானத்
திருமொழிக் கல்லது என் செவியகம் திறவா;
காமனை வென்றோன் ஆயிரத் தெட்டு

1. சிந்தை விளக்கு - அவதி ஞானம்; திரிகால உணர்வு.
2. செற்றம் - பகை.
3. அகல - நீங்க.
4. விழுமம் - வருத்தம்.
5. இட்டவித்தின் - வினையக்கூடிய நிலத்தில் விதைத்த விதை போல.
6. கடுங்கால் நெடுவெளி - கடிய காற்று வீசும் வெளியிடத்தில் (மைதானத்தில்).
7. மூன்று - காமம், கோபம், மயக்கம்.

நாம மல்லது நவிலாது என்நா ;
[1] ஐவரை வென்றோன் அடியிணை யல்லது
[2] கைவரைக் காணினும் காணா என்கண் ;
அருள்அறம் பூண்டோன் திருமெய்க் கல்லதுஎன்
[3] பொருளில் யாக்கை பூமியிற் பொருந்தாது ;
அருகர் அறவன் அறிவோற் கல்லதுஎன்
இருகையும் கூடி ஒருவழிக் குவியா ;
[4] மலர்மிசை நடந்தோன் மலரடி அல்லதுஎன்
தலைமிசை யுச்சி தான் [5] அணிப் பொறாஅது ;
இறுதியில் இன்பத்து இறைமொழிக் கல்லது
[6] மறுதர வோதிஎன் மனம்புடை பெயராது,

என்று கவுந்தியடிகள் பரவிக் கூறவே, சாரணர் நிலத்தி லிருந்து ஒரு முழ வுயரம் அந்தரத்தே நின்று, "பவந் தரு பாசம் கவுந்தி கெடுக" என்று உரைத்துவிட்டு வானவீதி யிற் படர்ந்தனர்.

பின்னர், கவுந்தியடிகளோடு கோவலனும் கண்ணகியும் ஓடமேறி ஆற்றைக் கடந்து காவிரியின் தென்கரையை அடைந்து, ஒரு பூம் பொழிலில் இருந்தனர். அங்கே, வம்பப் பரத்தையொருத்தியுடன் வறுமொழியாளன் ஒருவன் வந்து, கோவலனையும் கண்ணகியையும் கண்டு வியந்து,

காமனும் தேவியும் போலும் ஈங்குஇவர்
ஆர் ? எனக் கேட்டு [7] ஈங்கு அறிகுவம் என்றே
[8] நோற்றுணல் யாக்கை நொசிதவத் தீர் ! உடன்
[9] ஆற்றுவழிப் பட்டோர் ஆர் ? என வினவ, என்

---

1. ஐவர் - இந்திரியம் ஐந்து ; (ஐம்புலன்கள்.)
2. கைவரை - கைமேலே.
3. பொருளில் - பயனில்லாத.
4. மலர்மிசை நடந்தோன் - தாமரைப் பூவின்மேல் நடந்தவனாகிய அருகதேவன்.
5. அணிப் பொறாஅது - அணிவதற்கு உடன்படாது.
6. மறு தர ஓதி - உருவேற ஓதி.
7. ஈங்கு - இவ்விடத்தே.
8. நோற்றுணல் - விரத நாட்களில் பட்டினிகிடந்து உண்பது. யாக்கை நொசி தவத்தீர் - உடல் மெலிந்த தவசியே.
9. ஆற்று வழிப்பட்டோர் - வழியில் கூடி வந்த இவர்.

மக்கள் ; காணீர், மானிட யாக்கையர் ;
[1]பக்கம் நீங்குமின், [2]பரிபுலம் பினர்என,
[3]உடன்வயிற் றோர்கள் ஒருங்குடன் வாழ்க்கை
கடவதும் உண்டோ ? கற்றறிந் தீர்எனத்
[4]தீமொழி கேட்டுச் செவியகம் புதைத்துக்
காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்க,

கவுந்தியடிகள் கண்டு, "இவர்கள் என் பூங்கோதையாகிய கண்ணகியை இகழ்கின்றார்கள் போலும்; இவர்கள் முள்ளுடைக் காட்டின் முதுநரி ஆகுக" எனச் சாபம் தந்தார். குறுநரியாகிய அவ்விருவரும் ஊளையிடத் தொடங்கினர். அதனால்,

நறுமலர்க் கோதையும் நம்பியும் நடுங்கி,
[5]நெறியின் நீங்கியோர் [6]நீரல கூறினும்,
அறியாமை என்று அறியல் வேண்டும்;
செய்தவத் தீர்! நும் திருமுன் பிழைத்தோர்க்கு
[7]உய்திக் காலம் உரையீ ரோ ?என,
அறியா மையின்இன் று இழிபிறப் புற்றோர்
உறையூர் [8]நொச்சி ஒருபுடை ஒதுங்கிப்
பன்னிரு மதியம் படர்நோய் உழந்தபின்
முன்னை யுருவம் பெறுகஈங்கு இவர்எனச்

[9]சாப விடை செய்து இருவரும் பின்தொடர்ந்துவரக் கவுந்தியடிகள் உறையூருக்குப் போய்ச் சேர்ந்தனர்.

---

1. பக்கம் நீங்குமின் ; அவர் பக்கம் போகாமல் விலகிச் செல்லுங்கள்.
2. பரிபுலம்பினர் - மிகவும் வருந்தி இருக்கின்றனர்.
3. உடன் வயிற்றோர்கள் - ஒரு தாய் வயிற்றில் பிறந்தவர்கள்.
4. தீமொழி - இகழ்ந்த சொல்.
5. நெறியின் நீங்கியோர் - நல்லொழுக்கத்தில் தவறி நடப்பவர்கள்.
6. நீர் அல - தகாதவற்றை.
7. உய்திக் காலம் - சாபம் நீங்கும் காலம்.
8. நொச்சி - மதிற்புறம்.
9. சாபவிடை - சாப விடுதலை.

முதலாவது

**புகார்க் காண்டம் முடிந்தது.**

# உ. மதுரைக் காண்டம்

## கக. காடுகாண் காதை

இவ்வாறு உறையூரை யடைந்த கோவலனும் கண்ணகியும், கவுந்தியடிகளும், அங்குள்ள,

[1] திங்கள்மூன் றடுக்கிய திருமுக் குடைக்கீழ்ச்
செங்கதிர் ஞாயிற்றுத் [2]திகழொளி சிறந்து,
[3] கோதைதாழ் பிண்டிக் கொழுநிழல் இருந்த
[4] ஆதியில் தோற்றத்து [5]அறிவனை வணங்கி,

அவனது கோயிலில் இருந்த சமண முனிவர்களைக் கண்டனர். அவர்கட்கு ஆற்றிடைக் குறையில் சாவகர் இட்ட சிலாதலத்தின்மேல் இருந்துகொண்டு, சாரணர் சொன்ன அறவுரைகளைக் கவுந்தியடிகள் உரைத்தனர். அன்று பகற் போது கழியவே, இம் மூவரும் அப் பள்ளியிலேயே இரவுப் பொழுதையும் கழித்தனர். மறுநாட் காலையில் வெய்யவன் கீழ்த் திசையில் விளங்கித் தோன்ற, இம் மூவரும் செல்லத் தொடங்கி, நெடிது சென்றனர். வழியில், இளமரக் காவொன்று அவர் கண்ணெதிரே தோன்றிற்று. அவ் விடத்தை அடைந்து இவர்கள் இருக்கும்போது, மறையவன் ஒருவன்,

வாழ்க எங்கோ மன்னவர் பெருந்தகை
ஊழிதொ றூழி உலகம் காக்க;
[6] அடியில் தன்அளவு அரசர்க்கு உணர்த்தி,

---

1. திங்கள் மூன்று அடுக்கிய திரு முக்குடை : மூன்று முழு மதியை ஒன்றன்கீழ் ஒன்று அடுக்கினால் ஒத்த சிறந்த மூன்று குடை : அவை, சந்திராதித்தம், நித்தியவினோதம், சகலபாசனம் என்பன.

2. திகழ் ஒளி - விளங்கும் ஒளி.

3. கோதை தாழ் பிண்டி - கடவுள் தன்மையால் தொடுத்த மாலையாகவே பூத்துத் தொங்கும் அசோக மரம்.

4. ஆதியில் தோற்றம் - ஆதியும் அந்தமும் இல்லாத தோற்றம்.

5. அறிவன் - உறையூரில் கோயில் கொண்டிருக்கும் அருகன்.

6. தன் அளவு அடியில் உணர்த்தி - தன் பெருமையினது அளவைக் காலால் மிதித்து உணர்த்தி.

வடிவேல் எறிந்த [1]வான்பகை பொறாது
[2]பஃறுளி யாற்றுடன் பல்மலை யடுக்கத்துக்
[3]குமரிக் கோடும் [4]கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்திசை ஆண்ட தென்னவன் வாழி.
[5]செங்கண் ஆயிரத்தோன் திறல்விளங்கு ஆரம்
பொங்குஒளி மார்பில் [6]பூண்டோன் வாழி.
[7]மழைபிணித் தாண்ட மன்னவன் வாழ்க,

என்று பாண்டி நாட்டு வேந்தனை தென்னவனை வாழ்த்திக் கொண்டே வந்திருப்பதைக் கண்டனர். அவனைக் கோவலன் பார்த்து, "உமது ஊர் யாது? நீவிர் இங்கே வருவானேன்?" என வினவினன். அம் மறையவன்,

நீல மேகம் நெடும்பொன் குன்றத்துப்
[8]பால்விரிந்து அகலாது படிந்தது போல
ஆயிரம் விரித்துஎழு [9]தலையுடை அருந்திறல்
பாயல் பள்ளிப் பலர்தொழுது ஏத்த
விரிதிரைக் காவிரி [10]வியன்பெருந் துருத்தித்

---

1. வான் பகை பொறாது - (கடல்) பழம்பகையைப் பொறுக்காது.

2. பஃறுளி யாறு - குமரிமலைக்குத் தெற்கில் அதன் அடியில் ஓடிய யாறு.

3. குமரிக்கோடு - குமரிமலை. இஃது இப்போதிருக்கும் குமரி முனைக்குத் தெற்கில் இருந்ததென்பர்.

4. கொடுங்கடல் - யாற்றையும், பலமலையடுக்கத்தையும் விழுங்க நின்ற கொடுங்கடல்; இது தென்பெருங்கடல்.

5. செங்கண் ஆயிரத்தோன் - மெய்யெங்கும் பல கண்களையுடைய இந்திரன். திறல் - வலி.

6. பூண்டோன் - அணிந்துகொண்டவனாகிய பாண்டியன்.

7. மழை பிணித்து ஆண்ட மன்னவன் - மழை பெய்யாது ஒழிந்த முகிலினத்தைப் பற்றி நீங்காதவாறு விலங்கிட்டு மழை பெய்வித்துக் கொண்டவனாகிய பாண்டியன். (இச் செயல்கள் திருவிளையாடற் புராணத்து விரியக் காணப்படுகின்றன).

8. பால் விரிந்து அகலாது - எல்லாப் பக்கமும் விரியப் படர்ந்து நீங்காமல்.

9. தலையுடை அருந்திறல் - தலைகளையுடைய கிட்டுதற்கு அரிய வலிமை கொண்ட ஆதிசேடன்.

10. வியன்பெரும் துருத்தி - அகன்ற பெரிய ஆற்றிடைக்குறை.

திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்,
வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
ஓங்குயர் மலையத்து உச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
இருமருங்கு ஓங்கிய [1]இடைநிலைத் தானத்து
[2] மின்னுக்கோடி உடுத்து விளங்குவில் பூண்டு
[3] நல்நிற மேகம் நின்றது போலப்
[4] பகைஅணங்கு ஆழியும் பால்வெண் சங்கமும்,
[5] தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி
நலம்கிளர் ஆரம் மார்பில் பூண்டு
[6] பொலம்பூ ஆடையின் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்

காணவேண்டும் என்னும் ஆசை செலுத்த, யான் குடமலை நாட்டிலிருந்து வருகின்றேன். யான் அந்த நாட்டிலுள்ள மாங்காடு என்னும் ஊரில் இருப்பவன். மேலும்,

தென்னவன் நாட்டுச் சிறப்பும் செய்கையும்
[7] கண்மணி குளிர்ப்பக் கண்டேன் ; ஆதலின்
வாழ்த்திவந்து இருந்தேன் ; இதுஎன் வரவு,

என்று கூறினன். அது கேட்டுக் கோவலன், "மாமறை முதல்வ, மதுரைக்குச் செல்லும் செவ்விய நெறி யாது? கூறுக" என்றான். மறையோன், நெறி கூறலுற்று,

[8] கோத்தொழி லாளரொடு கொற்றவன் [9]கோடி
[10] வேத்தியல் இழந்த வியல்நிலம் போல

---

1. இடைநிலைத் தானத்து - இடைப்பட்ட இடத்தே.
2. மின்னுக் கோடி - மின்னுகிய புதுவுடை.
3. நல் நிற மேகம் - நல்ல கரிய நிறத்தையுடைய மேகம்.
4. பகை அணங்கு ஆழி - பகைவரை வருத்தும் ஆழிப் படை.
5. தகை - அழகு.
6. பொலம்பூ ஆடை - பூ வேலை செய்யப்பட்ட பொன்னுடை (பீதாம்பரம்).
7. கண்மணி குளிர்ப்ப - கண்ணின் மணி குளிர, கண்குளிர.
8. கோத்தொழிலாளர் - அமைச்சர்.
9. கோடி - செங்கோல் முறை தவறி.
10. வேத்தியல் - அரச இயல்.

[1] வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்
தான்[2] நலம் திருகத் தன்மையில் குன்றி
முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து
நல்லியல்பு இழந்த நடுங்குதுயர் [3] உறுத்துப்
பாலை யென்பதோர் படிவம் கொள்ளும்
காலை எய்தினிர், [4] காரிகை தன்னுடன் ;

வழியில் கற்பாறைகளும், பொத்தை மலைகளும், ஊறு செய் விலங்கும், [5] ஏற்றிழிவும் உடைய சிறுவழிகளும் உண்டு. இவற்றை முறையே கடந்து சென்றால், கொடும்பாளூர், நெடுங்குளம் என்னும் இரண்டுக்கும் நடுவே ஏரியொன்று இருப்பக் காண்பீர். அவ் வேரியின் கரையைக் கடந்து சென்றால், பிறை யணிந்த இறைவன் கையில் ஏந்திய மூவிலைச் சூலம் போல மூன்று கிளைவழிகள் பிரியக் காணலாம். அவற்றுள் வலம்படக் கிடந்த வழியாகச் செல்வீராயின் அது கடத்தற்கரிய சுரத்திடைக் கொண்டு செல்லும். அதன்பின் அவ் வழியில் சிறிது சேய்மைக்கண் சென்றவிடத்து,

வாழையும் கமுகும் காய்குலைத் தெங்கும்
மாவும் பலாவும் [6] சூழடுத் தோங்கிய
தென்னவன் சிறுமலை திகழ்ந்து தோன்றும் ;
அம்மலை வலம்கொண்டு அகன்பதிச் செல்லுமின்.

அவ் வழியைத் தொடராது, [7] இடம்படக் கிடந்த நெறியிற் செல்லின், நீவிர் திருமால் குன்றமாகிய அழகர் மலையை அடைவீர்கள். அவ்விடத்தே,

---

1. வேனலம் கிழவன் - வேனிற்காலமாகிய அமைச்சன், வெங்கதிராகிய வேந்தன்.
2. நலம் திருக - நலம் கெடுமாறு பண்ண.
3. உறுத்து - அடைவித்து, படிவம் - வடிவு.
4. காரிகை - அழகுடையவள் ; ஈண்டுக் கண்ணகி மேற்று.
5. ஏற்றிழவு - உயர்ச்சியும், தாழ்வும் சரிவுமாம்.
6. சூழ் அடுத்து ஓங்கிய - சுற்று முறறும் சூழக்கொண்டு உயர்ந்த.
7 இடம் படக் கிடந்த - இடப்பக்கமாக இருந்த.

[1] பெருமால் கெடுக்கும் [2]பிலம்உண்டு ; ஆங்கு,
விண்ணோ ரேத்தும் [3]வியத்தகு மரபின்
புண்ணிய சரவணம் பவகா ரிணியோடு
இட்ட சித்தி எனும் [4]பெயர் போகி,
[5] முட்டாச் சிறப்பின் மூன்றுஉள ; ஆங்கு,

புண்ணிய சரவணத்தைப் பொருந்துவீராயின், இந்திரன் செய்த ஐந்திர வியாகாரணத்தை அறிந்து கொள்வீர்கள்; பவகாரிணியில் மூழ்கினால், நீவிர் நுமது பழம் பிறப்பை அறிவீர்கள்; இட்டசித்தி என்பது மூழ்கினோர் விரும்பிய அனைத்தும் விரும்பியவாறே பெறுவிக்கும். பின்பு அங்கே காணப்படும் பிலத்துட் செல்ல விரும்பின், அருகிலுள்ள மலைமேல் இருக்கும் பெருமான் திருவடிகளை மனத்தே கொண்டு, அத் திருமலையை மும்முறை வலம் வருதல் வேண்டும். அவ்வாறு வரின், அங்கே ஓடும் [6]சிலம்பாற்றின் கரையில், வரோத்தமை என்பவள் நும் கண் முன்னே தோன்றி,

இம்மைக்கு இன்பமும், மறுமைக்கு இன்பமும்,
இம்மையும் மறுமையும் இரண்டும் இன்றிஓர்
[7] செம்மையில் நிற்பதும் செப்புமின், நீயிர் ;இவ்
[8] வரைத்தாள் வாழ்வேன் ; வரோத்தமை என்பேன் ;
[9]உரைத்தார்க்கு உரியேன் ; உரைத்தீ ராயின்,
[10] திருத்தக் கீர்க்குத் திறந்தேன் கதவு

1. பெரு மால் - மிக்க மயக்கம்.
2. பிலம் - பாதல வழி.
3. வியத்தகு மரபு - வியக்கத்தக்க தன்மை.
4. பெயர் போகி - நாற்புறமும் பெயர் சிறந்துள்ள.
5. முட்டாச் சிறப்பு - இடையறுத சிறப்பு.
6. சிலம்பாறு - இஃது ஓர் யாற்றின் பெயர்.
7. செம்மையில் நிற்பது - அந்தம் இல் இன்பத்து அழிவில் வீடு.
8. வரைத்தாள் - மலையின் அடி.
9. உரைத்தார்க்கு உரியேன் - உரைத்தவர் யாவராயினும் அவர்கட்கு அடித்தொண்டு புரிவேன்.
10. திருத்தக்கீர் - திருவாளர்களே. திறப்பேன் கதவு என்ன வேண்டியவள், திறப்பதன் விரைவு தோன்றத் திறந்தேன் என்றாள். இது கால மயக்கம்.

என்பள். அவட்கு அவள் கேட்ட முறையே பொருள் நலமும் அறவினைச் சிறப்பும், வீடுபேற்றியல்பும் விரித்துக் கூறுவீராயின், பிலவழிக்கு வேண்டும் கதவைத் திறந்து வழி காட்டுவாள். அவ் வழியே செல்லின், சேய்மைக்கண் இரட்டைக் கதவு ஒன்று உங்கட்குத் தோன்றும். அதனை அடையின், ஆங்கே ஒருத்தி தோன்றி,

[1]இறுதியில் இன்பம் எனக்கீங்கு உரைத்தால்,
பெறுதிர் போலும்நீர் பேணிய பொருள்,எனும்;
உரையீ ராயினும் [2]உறுகண் செய்யேன்;
[3]நெடுவழிப் புறத்து நீக்குவன் நும்எனும்.

ஒருகால் யாவரேனும் அவள் கேட்பதனை உரைத்தால் அவர்களை முன்பு கூறிய புண்ணிய சரவணம் முதலிய மூன்றனையும் காட்டி விரும்பியது செய்க என்று சொல்லி நீங்குவள்; நீவிரும் அவளால் அம் மூன்றும் காட்டப்பட்டு, ஐந்தெழுத்தும் எட்டெழுத்துமாகிய மறைமொழிகளுள் விரும்பிய தொன்றை நினைத்து வாயால் மொழிந்து, அவற்றுட் படிவீராயின், மலைமிசை இருக்கும் பெரியோன் திருவடியைப் பொருந்துவீர்கள்.

[4]உள்ளம் பொருந்துவீ ராயின், மற்றுஅவன்,
[5]புள்ளணி நீள்கொடி புணர்நிலை தோன்றும்;
தோன்றிய பின்அவன் துணைமலர்த் [6]தாள்இணை,
ஏன்றுதுயர் கெடுக்கும் இன்பம் எய்தி,
[7]மாண்புடை மரபின் மதுரைக்கு ஏகுமின்.

---

1. இறுதி இல் இன்பம் - வீடுபேறு.
2. உறுகண் - வருத்தம்.
3. நெடுவழிப் புறத்து நும் நீக்குவன் எனும் - நீவிர் போக வேண்டிய வழியின் கண்ணே நும்மைச் செலுத்துவேன் என்று சொல்வாள்.
4. உள்ளம் பொருந்துவீராயின் - திருவடிகளை உள்ளத்தில் நினைப்பீராயின்.
5. புள் அணி நீள் கொடி புணர்நிலை - கருடப் புள்ளின் வடிவெழுதிய கொடித் தண்டு பொருந்தி நிற்கும் நிலையிடம்.
6. தாள் இணை ஏன்று துயர் கெடுக்கும் - திருவடிகள் உம்மைத் தாங்கிக்கொண்டு பிறவித் துன்பத்தைக் கெடுக்கும்.
7. மாண்பு உடை மரபு - மாட்சிமை பொருந்திய முறைகள்.

என்று சொல்லி, இதுவே அப் பிலவழியின் காட்சி என்று சொன்னான். இதற்கு மேலும் சொல்லலுற்ற அம் மறையவன், "இதனையும் நீவிர் விரும்பீராயின் இடையே யுள்ள வழியே சென்மின்; அதுவே செவ்விய நெறி. வழி யில் நாடுகளும் ஊர்களும் பலவுண்டு; அரிய வழிகள் சில வும் காணப்படும். அவ்வருவழியில், மிக்க துயர் செய்யும் தெய்வமும் ஒன்று உண்டு. அது வழிப்போவார்க்கு வெளிப்படையாக யாதொரு தீங்கும் செய்யாது. நயந் தோன்ற நடித்துப் போகின்றவர்களைப் போகா வண்ணம் செய்துவிடும்; அதனைத் தப்பிச் செல்லின், மதுரைப் பதியை எளிதில் இனிது அடைவீர்கள். யானும், திருமாலை வழிபடச் செல்கின்றேன்," என்று சொல்லிச் செலவுபெறச் சமைந்தான். அவன் கூறியவற்றை இதுகாறும் மிக்க அமைதியுடன் கேட்டுக் கொண்டே வந்த கவுந்தியடிகள்,

> [1] நலம்புரி கொள்கை நான்மறை யாளா,
> பிலம்புக வேண்டும் [2]பெற்றிஈங்கு இல்லை;
> இறந்த பிறப்பில் எய்திய வெல்லாம்
> பிறந்த பிறப்பில் காணு யோநீ;
> [3] வாய்மையின் வழாஅது மன்னுயிர் ஓம்புநர்க்கு
> யாவதும் உண்டோ எய்தா அரும்பொருள்;
> [4] காமுறு தெய்வம் கண்டு அடிபணிய
> நீபோ; யாங்களும் [5]நீள்நெறிப் படர்குதும்,

என்று மொழிந்தனர்; மறையவனும் போய்ச் சேர்ந் தான். பின்னர் மூவரும் மதுரைக்குரிய வழியே நடக்க லுற்றனர்; அன்றையபோது வேறோர் அரிய ஊரின்கண் தங்கியிருந்து, அடுத்தநாட் காலையில் செல்வாராயினர். போம் போது வெயில் மிக்கது; ஏனை இருவர்க்கும் நீர் வேட்கை மிக்கது. கிளைவழி ஒன்றைக் கோவலன் பின்பற்றிச் சென்று ஒரு பொய்கைக் கரையை அடைந்தான். அங்கே

1. நலம் புரி கொள்கை - நல்ல ஒழுக்கத்தை விரும்பும் கோட்பாடு.
2. பெற்றி ஈங்கு இல்லை - தன்மை எமக்குக் கிடையாது.
3. வாய்மையின் வழாஅது - வாய்மை என்னும் அறத்தில் தவறாமல்.
4. காமுறு தெய்வம் - காண்பதற்காக விரும்பிய தெய்வமே.
5. நீள்நெறிப் படர்குதும் - நீண்ட வழியைச் செல்கின்றோம்.

ஒரு தெய்வம், மாதவியின் தோழியான வசந்தமாலைபோல் உருக்கொண்டு போந்து, மாதவியின் உட்கோளைக் கண்டு கூறுவது போல, நயமொழிகளை முதற்கண் சொல்லி,

"[1]மேலோ ராயினும் [2]நூலோ ராயினும்
[3]பால்வகை தெரிந்த பகுதியோ ராயினும்
பிணியெனக் கொண்டு [4]பிறக்கிட் டொழியும்
கணிகையர் [5]வாழ்க்கை கடையே [6]போன்ம்,"

என மாதவி மனம் அழிந்து வாழ்க்கையில் வெறுப் படைந்து என்னையும் விலக்கிவிட்டாள்; யானும் நீவிர் மதுரைக் கேகுவது கேள்வியுற்று, வாணிகச் சாத்தோடு தனியே வந்து துயருழந்தேன்; எனக்கு யாது பணிக்கின் றாய் ?" என்று கேட்டது. "இது ஒருகால் அம் மறையோன் சொன்ன மயக்கும் தெய்வமோ" எனக் கோவலன் ஐயுற்றுத் தன் நாவினால் ஒரு மறைமொழியைச் சொல்லவே, தெய்வம் தன் உண்மை வடிவு காட்டி,

[7]வனசா ரிணியான்; மயக்கம் செய்தேன்;
[8]புனமயில் சாயற்கும் [9]புண்ணிய முதல்விக்கும்
என்திறம் உரையாது ஏகுக,

என்று சொல்லிவிட்டு ஏகியது. கோவலன், அப் பொய்கை நீரைக் கவுந்தியடிகட்கும், கண்ணகிக்கும் கொடுத்து நீர்

---

1. மேலோர் - முனிவர்.
2. நூலோர் - கற்றோர்.
3. பால் வகை தெரிந்த பகுதியோர் - நூல்களைக் கல்லாது இயல் பாகவே நல்லதன் நன்மையும், தீயதன் தீமையும் பகுத்தறிந்து ஒழுகும் மதி நுட்பமுடையவர்.
4. பிறக்கிட்டு ஒழியும் - புறக்கணித்து நீக்கும்.
5. வாழ்க்கை - பொய் யொழுக்கம்.
6. போன்ம் - போலும். இஃது அசைநிலை.
7. வனசாரிணி - வனத்தில் திரியும் இயக்கி. [கண்ணகி.
8. புனமயில் சாயல் - புனத்தில் வாழும் மயிலின் சாயலையுடைய
9. புண்ணிய முதல்வி - கவுந்தியடிகள். தவத்தினும், கற்பு சிறந் தது; அதனால், கண்ணகியை முற்கூறி, புண்ணிய முதல்வியைப் பின்னர்க் கூறினார். இருவர் பாலும் முறையே சாயலும் அறமும் இருப்பினும், "தவறு கண்டுழிக் கணத்தில் வெகுண்டு சபிப்பர் என்று அஞ்சி அவர் கட்கு உரையாதொழிக" என்று இயக்கி இரந்து கேட்டாள்.

வேட்கையைப் போக்கினன். பின்னர், வேனில் வெப்பம் மிகுவது கண்டு, "இக் கொடிய சுரத்தில் இனிச் செல்வது பொருந்தாது" என்று தேர்ந்து,

குரவமும் மரவமும் கோங்கமும் வேங்கையும்,
விரவிய பூம்பொழில் விளங்கிய இருக்கை
[1] ஆரிடை அத்தத்து இயங்குநர் அல்லது,
மாரி வளம்பெறுஅ [2] வில்லேர் உழவர்
[3] கூற்றுறழ் முன்பொடு கொடுவில் ஏந்தி
[4] வேற்றுப் புலம்போகிநல் [5] வெற்றம் கொடுத்து,
[6] கழிபே ராண்மைக் கடன்பார்த் திருக்கும்
[7] விழிநுதற் குமரி, விண்ணோர் பாவை,
மையறு சிறப்பின் [8] வான நாடி

யாகிய [9] ஐயைக் கோட்ட மடைந்து அங்கே தங்குவாராயினர்.

---

1. ஆர் இடை அத்தத்து இயங்குநர் அல்லது - செல்லுதற்கு அருமையாகிய வழிகளிலே செல்லுபவர் கையில் உள்ள பொருள் கவர்வது தவிர.
2. வில் ஏர் உழவர் - வில் கொண்டு செய்யும் தொழிலையே உழவுத் தொழிலாகவுடைய மறவர்.
3. கூற்று உறழ் முன்பு - யமனை ஒத்த வலிமை.
4. வேற்றுப்புலம் - பகைவரது போர் முனை.
5. வெற்றம் - வெற்றி.
6. கழி பேர் ஆண்மைக் கடன் - தன்னையே உயிர்ப்பலியாக இடும் பலிக்கடன்.
7. விழி நுதல்; நுதல் விழிக் குமரி - நெற்றிக்கண்ணை யுடைய குமரி.
8. வான நாடி - துறக்க நாட்டையுடையவளான கொற்றவை.
9. ஐயைக் கோட்டம் - கொற்றவையின் கோயில்.

## ௰உ. வேட்டுவ வரி

கவுந்தியடிகளும் கோவலனும் கண்ணகியுமாகிய மூவரும் ஐயைக் கோட்டத்தில் ஒரு புறத்தே தங்கியிருந்தனர். அக் காலம் வேனிற்காலம். வெயிலவனது வெப்பம் தாங்குதற்கு அரிதாயிருந்தது. வழிப்பறி செய்யுங் கள்வர் கூட்டமும் வழிச்செல்வோர் இல்லாமையால் தத்தம் சேரியில் மடிந்து கிடந்தது. கள்வே புரிந்து வாழும் வேட்டுவர், தமக்குக் களவு வாய்க்காமையால் வறுமை மிக்கு வருந்துவாராயினர். அதுபோது,

[1] வழங்குவில் தடக்கை [2]மறக்குடித் தாயத்துப்
[3] பழங்கடன் உற்ற [4]முழங்குவாய்ச் சாலினி
தெய்வம் உற்று [5]மெய்ம்மயிர் நிறுத்துக்
கைஎடுத்து ஓச்சிக் கானவர் வியப்ப
[6] இடுமுள் வேலி எயினர்கூட்டு உண்ணும்
நடுவூர் மன்றத்து [7]அடிபெயர்த்து ஆடி,

---

வேட்டுவ வரி என்பது, வேட்டுவர் கொற்றவை, வள்ளி நாயகி முதலியோர் வேடம் பூண்டு கூத்தாடிப் பல பாட்டுப் பாடிப் பலி கொடுத்துப் பரவுவதைக் கூறுவது. இவ்வாறு வேற்றுருவம் தாங்கி ஆடும் கூத்து உள்வரி எனப்படும், அதனால் இக் காதை வேட்டுவ வரி எனப்பட்டது. அடியார்க்கு நல்லாரும் " இது கூத்தாற் பெற்ற பெயர் " என்று கூறுவர். வேட்டுவ வரி என்பதில் வரியாவது கண்கூடு வரி முதலாகக் கூறப்படும் வரிக் கூத்தையும் குறிக்குமாயினும், ஈண்டு உள்வரிக் கூத்தே குறித்து நிற்கிறது. கானல்வரி என்ற விடத்து வரி என்பது இசைத்தமிழ் வகையிற் கூறப்படும் வரிப் பாட்டுக்களைக் குறித்து நிற்பது.

1. வழங்கு வில் தடக் கை - அம்பைச் செலுத்தும் வில்லேந்திய பெரிய கை.

2. மறக்குடித் தாயம் - மறவர் குடியில் பிறந்த உரிமை.

3. பழங்கடன் - இன்னபடியே ஆயின் இன்ன பலி இடுவேம் என முன்பே நேர்ந்துள்ள கடன்.

4. முழங்கு வாய்ச் சாலினி - கொக்கரிக்கும் வாயையுடைய சாலினி. சாலினி - தெய்வ மருள் ஏறி ஆடுபவள் ; பூசாரிச்சி என்பர்.

5. மெய்ம்மயிர் நிறுத்து - மெய்ம்மயிர் சிலிர்த்து.

6. இடு முள்வேலி - முட்களைக்கொண்டு நட்டுவைத்த வேலி.

7. அடிபெயர்த்து ஆடி - தாளத்துக்கு ஒப்ப அடியிட்டு ஆடி. எயினரூர்நடுவே உள்ள மன்றத்து, சாலினி, கானவர் வியப்பக் கைஎடுத்து ஓச்சி அடிபெயர்த்து ஆடினள் என்க.

"எயினர்களே, ஆறலைத்தல், சூறையாடுதல், ஆகோடல் முதலிய உங்கட்கு முறைமையான தொழில்கள் இப்போது வாய்க்காமையால் நீவிர் வறுமையுற்றீர்கள். உங்கள் சிலைக்கு வெற்றி தந்த கலையூர் செல்விக்கு நீவிர் உயிர்ப்பலி தாரா தொழிந்தீர்கள். உங்களுடைய [1]களவேர் வாழ்க்கை முன்போல வளம் பெற வேண்டுமாயின், இப்போதே அவட்குரிய கடனைக் கொடுமின்" என்று சொன்னாள். அது கேட்ட எயினர் அதற்கு உடம்பட்டு, அச் சாலினியின் கூந்தலைச் சடையாகப் பின்னி, வெள்ளிய கயிற்றால் கட்டி, பன்றியின் கடைவாய்ப் பல்லைப் பிறைபோலச் சூட்டி, கழுத்திற்குப் புலிப்பல் கோத்த தாலி யணிந்து, புலித்தோலை மேகலையாக உடுத்து, வலிய வில்லொன்றை அவள் கையில் கொடுத்து, முறுக்குண்ட கொம்பையுடைய கலைமான்மீது ஏற்றி, கொட்டும், பறையும், கொம்பும், குழலும் முழங்கி, முன் செல்ல, அவர் நடுவே, அச் சாலினி, கலைமான்மீது ஏறிவர,

> [2]வண்ணமும் சுண்ணமும் தண்நறும் சாந்தமும்
> [3]புழுக்கலும் [4]நோலையும் [5]விழுக்குடை மடையும்
> பூவும் புகையும் மேவிய [6]விரையும்

எயினர் மகளிரான எயிற்றியர் ஏந்திக்கொண்டு பின்னே வர, ஐயைக்கோட்டம் அடைந்தனர். அங்கேயுள்ள பலி பீடிகையின் முன் அவளைக் கொணர்ந்து நிறுத்தித் தாம் கொண்டு போந்த பொருள்களை அப் பீடிகையில் வைத்து எயினர் அனைவரும் ஐயையைக் கைதொழுது ஏத்தினர். அப்போது, கலையேறி வந்த சாலினி, தெய்வ மருள்கொண்டு ஒருபுறத்தே இருந்த கண்ணகியைக் கண்டு, அங்கு நின்ற எயினர்க்குக் காட்டி,

---

1. களவு ஏர் வாழ்க்கை - களவு செய்தலையே தொழிலாகவுடைய வாழ்க்கை.

2. வண்ணம் - தோளிலும் மார்பிலும் நிறம் தீட்டும் வண்ணம்.(நிறம்).

3. புழுக்கல் - அவரை, துவரை, முதலியன (சுண்டல்).

4. நோலை - எள்ளுருண்டை.

5. விழுக்கு உடை மடை - நிணம் கலந்த சோறு. இஃது இக் காலத்தே வழங்கும் பிரியானி போல்வது.

6. விரை - நறுமணப் பொருள்.

இவளோ,

> [1] கொங்கச் செல்வி, [2]குடமலை யாட்டி
> [3] தென்தமிழ்ப் பாவை செய்ததவக் கொழுந்து,
> ஒருமா மணியாய் உலகிற்கு ஓங்கிய
> [4] திருமா மணி

என்று உரைத்தனள். அதனைக் கேட்டதும் கண்ணகி நாணி, [5]"பேதுறவு மொழிந்தனள் மூதறி வாட்டி" என்று தன் கணவனது பின்புறத்தே ஒடுங்கித் தலைகவிழ்ந்து புன்னகை செய்து நின்றாள். இனி, அச் சாலினியைச் சூழநின்ற எயினர் அவள் பூண்ட ஐயைக் கோலம் நன்கு பொருந்தி இருப்பக் கண்டு வியந்து, அவளை ஐயையாகவே கருதி, அச் செல்வியின் பலவகைப் புகழையும் எடுத்தோதி,

> [6] "வலம்படு கொற்றத்து வாய்வாள் கொற்றவை,
> [7] இரண்டுவேறு உருவின் திரண்டதோள் அவுணன்
> தலைமிசை நின்ற தையல், பலர்தொழும்
> அமரி, குமரி, கவுரி, சமரி,
> சூலி, நீலி, [8]மாலவற்கு இளங்கிளை,
> [9] ஐயை, செய்யவள், வெய்யவாள் தடக்கைப்

---

1. கொங்கச் செல்வி - கொங்கு நாட்டினை ஆளும் செல்வி.
2. குடமலையாட்டி - குடநாட்டையாளும் செல்வி.
3. தென் தமிழப்பாவை - தென் தமிழ் நாட்டையாளும் பாவை போல்வாள். செய்த தவக் கொழுந்து - இவ்வாறு இம் மூன்று நாட்டையும் ஆள்வதற்காக முற்பிறப்பிலே செய்த நல்வினைக்கண் முளைத்த கொழுந்து போல்பவள்.
4. திரு மா மணி - சீரிய பெரிய மணி.
5. பேதுறவு - தெய்வ மருளால் உண்டான மயக்கம்.
6. வலம்படு கொற்றம் - மேலான வெற்றி.
7. இரண்டு வேறு உருவின் திரண்ட தோள் அவுணன் - தலை வேறு, உடல் வேறாக உள்ள உருவமும் திரண்ட தோளும் உடைய அசுரன் ; இவனை விக்கிரமாசுரன், மயிடாசுரன என்றும் கூறுவர். தலை - எருமைத் தலை ; உடல் - மக்கள் உடல்.
8. மாலவற்கு இளங் கிளை - திருமாலுக்குத் தங்கை.
9. ஐயை - வெற்றித் திருமகள், செய்யவள் - செல்வத் திருமகள்.

5

[1] பாய்கலைப் பாவை, பைந்தொடிப் பாவை,
[2] ஆய்கலைப் பாவை, [3]அருங்கலப் பாவை

இவ்வெயின இளமகள்மீது எழுந்தருளி எமக்கு அருளினள்" என்று மிக்க வியப்போடு சொல்லிக்கொண்டனர். பின்பு அவர்கள் பல பாட்டுக்களைப் பாடலாயினர்.

## முன்றிற் சிறப்பு

[4] நாகம் நாறும் [5]நரந்தை [6]நிரந்தன ;
[7] ஆவும் ஆரமும் ஓங்கின ; எங்கணும்
[8] சேவும் மாவும் செறிந்தன ; கண்ணுதல்
பாகம் ஆளுடை யாள்பலி முன்றிலே.

[9] செம்பொன் வேங்கை சொரிந்தன ; சேயிதழ்
கொம்பர் நல்இல வங்கள் குவிந்தன ;
[10] பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கு ; இளம்
திங்கள் வாழ்சடை யாள்திரு முன்றிலே.

## [11] வள்ளிக் கூத்து

கொற்றவை கொண்ட [12]அணிகொண்டு நின்றஇப்
[13] பொற்றொடி மாதர் தவம்என்னை கொல்லோ

---

1. பாய்கலைப்பாவை-பாய்ந்து ஓடும் மான் ஊரும் பாவை. (மலைமகள்)
2. ஆய்கலைப் பாவை - அறிஞர் ஆராயும் அறுபத்து நான்கு கலைகளையு முடைய பாவை. (கலைமகள்)
3. அருங்கலப் பாவை - தொடி முதலிய அரிய அணிகலனகளை உடைய பாவை. (திருமகள்)
4. நாகம் - சுரபுன்னை.
5. நரந்தை ; நாரத்த மரம்.
6. நிரந்தன - வரிசையுற நின்றன.
7. ஆ - ஆச்சா மரம்.
8. சே - அழிஞ்சில்.
9. செம்பொன் - செவ்விய பொன்னின் நிறத்தை உடைய பூ.
10. பொங்கர் வெண்பொரி - கொம்புகளில் பூத்த வெண்மையான பொரி போன்ற பூ. புன்கு பொரி சிந்தின என்க.
11. வள்ளிக்கூத்து - வள்ளி நாயகியே போல் வேடம் புனைந்து குறமகளிர் ஆடும் கூத்து.
12. அணி - வேடம்.
13. பொற்றொடி மாதர் - பொன்னாலாகிய தொடி அணிந்த பெண்.

பொற்றொடி மாதர் பிறந்த குடிப்பிறந்த
வில்தொழில் வேடர் குலனே குலனும்.

பாய்கலைப் பாவை அணிகொண்டு நின்றஇவ்
[1] ஆய்தொடி நல்லாள் தவம்என்னை கொல்லோ,
ஆய்தொடி நல்லாள் பிறந்த குடிப்பிறந்த
[2] வேய்வில் எயினர் குலனே குலனும்.

### [3] முன்னிலைப் பரவல்

ஆனைத்தோல் போர்த்துப் [4]புலியின் உரிஉடுத்துக்
கானத்து [5]எருமைக் கருந்தலைமேல் நின்றாயால் ;
வானோர் வணங்க [6]மறைமேல் மறையாகி
ஞானக் கொழுந்தாய் [7]நடுக்கின்றி யேநிற்பாய்.

சங்கமும் சக்கரமும் தாமரைக் கையேந்திச்
[8] செங்கண் அரிமான் சினவிடைமேல் நின்றாயால் ;
கங்கை முடிக்குஅணிந்த கண்ணுதலோன் பாகத்து
மங்கை உருவாய் [9]மறைஏத்த வேநிற்பாய்.

இவ்வண்ணம் கொற்றவையைப் பரவிய எயினர், இனிக் கூத்து வகையால் அவளைப் பரவத் தொடங்கி [10] வென்றிக்கூத்து, [11] கூத்துள்படுதல் முதலியன பாடி, பின் வரும் கொற்றவைநிலை முதலியவற்றைப் பாடினர்.

---

1. ஆய்தொடி - அழகிய தொடி.
2. வேய் வில் - மூங்கிலால் சமைத்த வில்.
3. முன்னிலைப் பரவல் - பாடப்படுவோரைக் கேட்போர் போல முன்னிலைப் படுத்திப் பாடிப் பரவுதல்.
4. புலியின் உரி - புலியின் தோல்.
5. எருமைக் கருந்தலை - மயிடாசுரனது பசுந்தலை.
6. மறைமேல் மறையாகி - நான்கு மறைக்கும் மறைப் பொருளாய்.
7. நடுக்கின்றி நிற்பாய் - சலிப்பின்றி நிற்கும் நீ.
8. செங்கண் அரிமான் சினவிடை - சிவந்த கண்ணையுடைய அரிமாவாகிய சினம் பொருந்திய ஏறு. (ஆண் சிங்கம்)
9. மறை - நான்கு மறைகளும்.
10. வென்றிக் கூத்து - போர் செய்து பெற்ற வெற்றி குறித்து அப் போர்க்களத்தே ஆடும் கூத்து.
11. கூத்துள் படுதல் - கூத்து நிகழ்ச்சியில் நிகழ்வது செய்து அதற்கேற்ப ஆடிப் பாடுதல்.

## [1] கொற்றவை நிலை

[2] உட்குடைச் சீறூர் ஒருமகன்
ஆனிரைகொள்ள உற்ற காலை
வெட்சி மலர்புனைய [3]வெள்வாள்
உழத்தியும் வேண்டும் போலும்.
வெட்சி மலர்புனைய வெள்வாள்
உழத்தியும் வேண்டின், வேற்றூர்க்
கட்சியுள் [4]காரி கடியகுரல்
இசைத்துக் காட்டும் போலும்.

[5] கள்விலை யாட்டி மறுப்பப் [6]பொருமறவன்
கைவில் ஏந்திப்
[7] புள்ளும் வழிப்படரப் [8]புல்லார் நிரைகருதிப்
போகும் போலும்;
புள்ளும் வழிப்படரப் புல்லார்
நிரைகருதிப் போகும் காலைக்
கொள்ளும் கொடிஎடுத்துக் கொற்றவையும்
[9] கொடுமரம்முன் செல்லும் போலும்.

[10] கொடை என்னும்

## துறைப்பாட்டு மடை

[11] முருந்தேர் இளநகை காணாய், நின்ஐயர்
[12] கரந்தை அலறக் கவர்ந்த இனநிரைகள்

---

1. கொற்றவை நிலை—கொற்றவையைப் பரவிப் பாடுவது.
2. உட்கு - பகைவர்க்கு அச்சம் தரும்.
3. வெள் வாள் உழத்தி - வெள்ளிய வாட்படை ஏந்தும் கொற்றவை. வேற்றூர்க் கட்சி - பகைவர் ஊர் சூழ்ந்த காடு.
4. காரி - கரியன் என்னும் ஒருவகைப் புள்.
5. கள் விலையாட்டி - கள் விற்பவள்.
6. பொரு மறவன் - மானம் பொறுக்கமாட்டாத வீரன்.
7. புள்ளும் வழிப்படர - அவன் கருத்திற்கு ஏற்ப நற்குறி செய்ய.
8. புல்லார் நிரை - பகைவரது ஆனிரை.
9. கொடுமரம் - வில. வில்லின்முன் கொற்றவை செல்லும் போலும் என்க.
10. கொடை என்னும் துறைப்பாட்டு மடை - பகைவரிடத்தே கொண்ட ஆனிரைகளைப் பலர்க்கும் பகுத்து வழங்குவதைப் பொருளாகக் கொண்ட பாட்டுக்களை இடையே தொடுத்துப் பாடுதல்.
11. முருந்து - மயில் இறகின் அடி.
12. கரந்தை - நிரை மீட்க வந்த பகைவர்.

கள்விலை யாட்டிநல் [1]வேய்தெரி கானவன்
[2]புள்வாய்ப்புச் சொன்ன கணிமுன்றில் நிறைந்தன.

[3]கயமலர் உண்கண்ணாய், காணாய், நின்ஐயர்,
அயலூர் அலற எறிந்தநல் ஆனிரைகள்
[4]நயனில் மொழியின் [5]நரைமுது தாடி
எயினர் எயிற்றியர் முன்றில் நிறைந்தன.

## [6] அவிப்பலி

[7]சுடரொடு திரிதரும் முனிவரும் அமரரும்
இடர்கெட அருளும்நின் இணையடி தொழுதேம்
[8]அடல்வலி எயினர்நின் அடிதொடு கடன்இது
[9]மிடறுஉகு குருதிகொள் விறல்தரு விலையே.

துடியொடு சிறுபறை [10]வயிரொடு துவைசெய
[11]வெடிபட வருபவர் எயினர்கள் அரையிருள்
அடுபுலி அனையவர் குமரிநின் [12]அடிதொடு
படுகடன் இஃதொரு பலிமுக [13]மடையே.

---

1. வேய் - வேய் பார்த்தல்: அஃதாவது, பகைவர் செயலை மறைவாக அறிந்து வந்தோர் கூறுவது கேட்டல்.
2. புள் வாய்ப்புச் சொன்ன கணி - புள்ளின் நற்குறி கண்டு சொன்ன கணி கூறுவோன்.
3. கயமலர் - பெரிய பூ.
4. நயன் இல் மொழி - ஈரமில்லாத சொல்.
5. நரை முது தாடி - நரைத்து நீண்ட தாடி.
6. அவிப்பலி—செய்த சூள் பொய்யாதவாறு உயிர்ப்பலியிடுதல்.
7. சுடரொடு திரிதரும் முனிவர் - "ஞாயிற்றின் வெம்மையைப் பல்லுயிரும் பொறுத்தல் ஆற்றா என்று கருதித் தமது அருளினால், அந்த ஞாயிற்றோடு திரிந்து அவ் வெம்மையைப் பொறுக்கின்ற முனிவர்."
8. அடல் வலி எயினர் - கொலையையும் வலியையுமுடைய எயினர்.
9. மிடறு உகு குருதி - தமது கழுத்தைத் தாமே அறுத்தலால் சொரியும் குருதி. கொள் - கொள்வாயாக. விறல் - வெற்றி.
10. வயிர் - கொம்பு என்னும் ஊது கருவி.
11. வெடிபட - நிலம் பிளக்கும்படியாக முழங்க.
12. அடி தொடு படு கடன் - திருவடியைத் தொட்டுச் சூள் செய்த கடன்.
13. மடை - பலி உணவு.

### [1] பலிக்கொடை

துண்ணென் துடியொடு [2]துஞ்சூர் எறிதரு
[3] கண்ணில் எயினர் இடுகடன் உண்குவாய்;
[4] விண்ணோர் அமுதுண்டும் சாவ, ஒருவரும்
உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்குவாய்.

[5]பொருள் கொண்டு புண்செயின் அல்லதை யார்க்கும்
அருளில் எயினர் இடுகடன் உண்குவாய் :
[6] மருதில் நடந்துநின் மாமன் செய் [7]வஞ்ச
உருளும் சகடம் உதைத்தருள் செய்குவாய்.

இவ்வாறு கொற்றவையைப் பரவிய வேட்டுவர் முடிவில் தங்கள் பாண்டிநாட்டு வேந்தனை பாண்டியன், "வெட்சி சூடி மேம்படுவானாக" என வேண்டி நின்றனர்.

---

1. பலிக் கொடை - கொடுத்த பலியை உண்ணுமாறு வேண்டுதல்.
2. துஞ்சு ஊர் எறிதரும் - உறங்குகின்ற பொழுதில் பகைவர் ஊர்க்குள் நுழைந்து கொலை புரியும்.
3. கண் இல் எயினர் - இரக்கமில்லாத எயினர்.
4. விண்ணோர் . . . செய்குவாய் - விண்ணவர் சாவாமையைத் தரும் அமுதுண்டும் ஒருகால் சாகின்றவராக, உண்டபொழுதே உண்டார் உயிருண்பதால் எத்தகையோரும் உண்டற்காகாத நஞ்சை உண்டு எக்காலத்தும் அழிவின்றி இருந்து உயிர்கட்கு அருள் செய்குவாய்.
5. பொருள் கொண்டு புண் செயினல்லது - வழிப்போவார் பொருளைக் கைப்பற்றிக்கொண்டு, அவர்க்குத் தம் வாளால் புண்ணைக் கொடுப்பதன்றி.
6. மருதில் நடந்து - ஆயர்பாடியில் மருதமரங்களுக்கு இடையே தவழ்ந்து சென்று.மாமன் - கஞ்சன்.
7. வஞ்ச உருளும் சகடம் - வஞ்சனையால் உருண்டோடும் சகடமாய் வந்த அசுரன்.

# ௰௩. புறஞ்சேரி இறுத்த காதை

கொற்றவைக் கோலம் பூண்டு வேட்டுவ மகள் கூத்தாடிப் பல பாட்டுப் பாடி, வேட்டுவர் சூழ அக் கொற்றவையைப் பரவி நீங்கிய பின்பு, கோவலன் கவுந்தியடிகளை வணங்கி, "இக் கண்ணகி, கடுவெயில் நின்ற இவ் வேனில் வெப்பத்தைப் பொறாள் ; இவளுடைய மெல்லிய அடிகள் இத்தகைய வழிகளை நடந்தறியாதவை.

வெங்கானத்துக்
[1] கோள்வல் உளியமும் கொடும்புற்று அகழா ;
[2] வாள்வரி வேங்கையும் மான்கணம் மறலா ;
அரவும் [3]சூரும் இரைதேர் முதலையும்
[4] உருமும் சார்ந்தவர்க்கு உறுகண் செய்யா ;
செங்கோல் தென்னவர் காக்கும் நாடுஎன
[5] எங்கணும் போகிய இசையோ பெரிதே ;

ஆதலால், பகற்போதிற் செல்வதினும் இரவுப்போதிற் செல்வது நன்று" என்று இரந்து கூறினன். கவுந்தியடிகளும் அதற்கு இசைந்தனர். பகற்போது மெல்லக் கழிவதாயிற்று

---

1. கோள் வல் உளியம் - நேர்பட்டாரைக் கைக்கொள்ளுதல் வல்ல கரடி.

2. வாள் வரி வேங்கை - ஒளியும் நிறமும் பொருந்திய புலி. மறலா - மாறுபட்டுக்கொள்வது இல்லையாம்.

3. சூர் - உயிர்கட்கு வருத்தம் செய்யும் காட்டுத் தெய்வம் ; பேயுமாம்.

4. உரும் - இடி.

5. எங்கணும் போகிய இசை - எல்லா நாட்டினும் பரந்து விளங்கும் புகழ்.

குறிப்பு :—" இவற்றால், தென்னவன் ஆணையும் ஐவகை நிலத்திற்கு உரிமையும் கூறினார். ஐவகை நிலன் என்றது எவற்றாற் பெறுதும் எனின், —கானம் என்பதனால் முல்லையும், சூர், கரடி என்பவற்றால் குறிஞ்சியும், வேங்கை என்பதனால் பாலையும், உருமு என்பதனால் மருதமும், முதலை என்பதனால் நெய்தலும் பெறுதும். இவ் வகையால், இவன் நாட்டு இக் காலத்து வருவது இவ்வெயில் ஒன்றுமே என்பதாயிற்று"—அடியார்க்கு நல்லார்.

கொடுங்கோல் வேந்தன் குடிகள் போலப்
[1] படுங்கதிர் அமயம் பார்த்திருந் தோர்க்குப்
[2] பன்மீன் தானையொடு பால்கதிர் பரப்பித்
[3] தென்னவன் குலமுதல் செல்வன் தோன்றி
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
மலையத்து ஓங்கி மதுரையின் வளர்ந்து
புலவர் நாவில் பொருந்திய தென்றலொடு
பால்நிலா வெண்கதிர் [4] பாவைமேல் சொரிய

மூவரும் மதுரைக்கேகும் வழியைப்பற்றிச் செல்லத் தொடங்கினர். வழியில், கூகைகள் குழறின; கொடுவரிப் புலிகள் குழுமித்திரிந்தன. அவற்றிற்கு அஞ்சவேண்டா எனத் தகுவன கூறிக் கண்ணகியைத் தெருட்டி, கோவலன், கவுந்தியடிகள் அருளிய அறவுரைகளைக் கேட்டுக்கொண்டே இனிது சென்றனன். விடியற்போதில், மூவரும் பார்ப்பனர் உறையும் ஓர் ஊரின் புறத்தே இருந்த தக்க இடத்தை அடைந்து தங்கினர். அது நல்ல சேமமுள்ளதோர் இடமாதல் கண்டு தெளிந்த கோவலன், அவர்களை அவ்விடத்தே இருத்தி, தான்மட்டில் காலைக்கடன் கழிப்பது குறித்து, அவர் இருந்த இடத்தைச் சூழவிருந்த முள் வேலியை நீக்கிக்கொண்டு நீர் நிலையொன்றை நாடிச் சென்றான். அவன் சென்றவிடத்தே, கவுசிகன் என்னுமொரு பார்ப்பான் கோவலனைக் கண்டான். அவன் கோவலனைக் காவிரிப்பூம் பட்டினத்தே நன்கு அறிந்தவன்; மாதவியால் கோவலன் இருக்கை நாடி அறிந்துவரும் பொருட்டுச் செலுத்தப்பட்டவன். அவன் கோவலனைக் கண்டதும், அவனது மேனி வேறுபாட்டால் முதற்கண் மயங்கி, உண்மை அறிதல் வேண்டி, அங்கேயிருந்த மாதவிக் கொடியை நோக்கி, தான் சொல்வது அக் கோவலன் செவியிற் படுமாறு,

---

1. படுங்கதிர் அமயம் பார்த்திருந்தோர் - ஞாயிறு மறையும் பொழுதையும், திங்கள் எழும் பொழுதையும் எதிர்பார்த்துக்கொண்டிருந்த இவர்களுக்கு.

2. பல் மீன் தானை - பல விண்மீன்களாகிய தானையுடன்.

3. தென்னவன் குலமுதல் செல்வன் - பாண்டியர் குலத்துக்கு முதல்வனான திங்கட்செல்வன். மலையம் - பொதிய மலை.

4. பாவை - நிலமகளாகிய பாவை.

கோவலன் பிரியக் கொடுந்துயர் எய்திய
[1] மாமலர் நெடுங்கண் மாதவி போன்றுஇவ்
[2] அருந்திறல் வேனிற்கு அலர்களைந்து உடனே
வருந்தினை போலும், நீ, மாதவி !

என்று கூறினன். அது கேட்டு வியப்புக் கொண்ட கோவலன், "நீ யாது கூறினை?" என்றனன். எனவே, கோசிகன், கோவலனை உண்மைக் கோவலனே எனத் தெளிந்து, கோவலன் பிரிந்து வந்தபின் காவிரிப்பூம் பட்டினத்து நிகழ்ந்தது கூறலுற்று, கோவலனது பெற்றோர் துயர்நிலை, சுற்றத்தவர் நிலை, ஊரவர்நிலை, மாதவியின் துயர்நிலை ஆகிய இவற்றைக் கூறி, "வயந்தமாலையால் நின் பிரிவு அறிந்ததும், மாதவி [3]சேக்கைப் பள்ளியில் மயங்கி வீழ்ந்தாள். அதனைக் கேள்வியுற்ற யான் விரையச் சென்று அவள் திருவடி தொழுதேன்; 'கண்மணியனையாற்குக் காட்டுக' என்று முடங்கல் ஒன்று எழுதி என் கையில் தந்து நின்னிடம் சேர்க்க எனக் கொடுத்தாள்" என்று சொல்லி, அம் முடங்கலையும் கோவலன் கையில் நீட்டினன். அதன்பால் மாதவி இட்டிருந்த கூந்தற் பொறியால் அவளது மனத்தூய்மையை உணர்ந்து, கோவலன், அதனைக் கை நெகிழாது விரித்துக் காணலுற்றான். அதன்கண்,

அடிகள் முன்னர் யான்அடி வீழ்ந்தேன் ;
[4] வடியாக் கிளவி மனக்கொளல் வேண்டும் ;
[5] குரவர்பணி யன்றியும் [6]குலப்பிறப் பாட்டியோடு

1. மா மலர் நெடுங்கண் மாதவிபோன்று - "காமத் தீயால் துயரமுற்று அலரை (ஊரார் தூற்றிப்பேசும் அலரை)ப் பொறுது, அப்பொழுதே வருந்தி நின்ற மாதவியைப் போன்று."

2. அருந்திறல் வேனிற்கு - "இளவேனில் நீங்க அப்பொழுதே அதற்கு ஆற்றாது பொறுத்தற்கு அரிய வெம்மையையுடைய முதுவேனிற் காலத்து வெயிலால் துயரமுற்று." அலர் களைந்து - பூக்களைத் தாங்காது உதிர்த்து.

3. சேக்கைப் பள்ளி-பூக்களைச் சொரிந்து அமைத்த படுக்கைப்பள்ளி.

4. வடியாக் கிளவி - குற்றம் திருந்தாத சொற்கள்.

5. குரவர் பணி அன்றியும் - பெற்றோர்க்குச் செய்யும் பணிவிடையைக் கைவிட்டதே அன்றி.

6. குலப்பிறப்பாட்டி - நற்குலத்தில் பிறந்து கற்பை ஆளும் தன்மையுடைய கண்ணகி நல்லாள்.

இரவிடைக் [1]கழிதற்கு என்பிழைப்பு ; அறியாது
கையறும் நெஞ்சம்; [2]கடியல் வேண்டும்;
[3]பொய்தீர் காட்சிப் புரையோய் ! போற்றி

என்று மாதவி எழுதிய எழுத்து இருப்பக் கண்டு, "மாதவி சிறிதும் தீதிலள் ; யானே தீதுடையேன் ; மேலும், என் பெற்றோர்க்கு யான் எழுதவேண்டிய பொருளுரையும் இதன்கண் [4]பொருந்தியுளது ; இதனை இவர்பால் சென்று காட்டுக; மாசில் குரவர் மலரடி தொழுதேன்" என்றும் பிற தகுவனவும் சொல்ல, அக் கோசிகன் விடைபெற்று நீங்கினன். கோவலன் கண்ணகியும் கவுந்தியடிகளுமிருந்த சூழலுக்கு வந்தான். அவ்விடத்தே கொற்றவையைப் பரவிப் பாடும் அம்பணவர் என்னும் ஒருவகை இசைப்பாணர் வந்திருந்தனர். அவரோடு தானும் ஒருவனாக இருந்து, காந்தாரம் என்னும் பண்ணும் திறமும் பொருந்தப் பாடி, "இவ்விடத்திற்கு மதுரை இனியும் எத்துணைக் காவதம் ?" என்று வினவினன். அவர்கள், "மதுரை நகர்க்கண் அகில் சந்தனம் முதலியவற்றின் சேற்றில் படிந்து, சண்பகம், கழுநீர் முதலிய பூ விரித்த

---

1. கழிதற்கு என் பிழைப்பு - நீங்குவதற்கு உண்டான குற்றம் என்னை ? நெஞ்சம் அறியாது கையறும் என் நெஞ்சம் அதனை அறியாமையால் செயலற்றுவருந்துகிறது.

2. கடியல் வேண்டும் - என்னுடைய குற்றமாயினும் திருவுளம் கொள்ளாது அருளவேண்டும் ; இதுவேயுமன்றி. இவ்வாறு செல்வது நன்றன்று ; ஆதலால், அதனை விலக்கி மீளுதல் வேண்டும்.

3. பொய் தீர் காட்சிப் புரையோய் - குற்றம் தீர்ந்த நல்லறிவு உடைய உயர்ந்தோய், போற்றி - நின்புகழ்க்குக் குறைபாடு நிகழாது காப்பாயாக.

குறிப்பு :—இருவரது பெற்றோரும், ஏவலாளர் தாம தேடிக் காணாமையோ பிறிதோ கூறின் இறந்து படுவர் என்றும், ஆகவே, தேசுடைக் குலத்துக்கு மாசு வரும் என்றும், மாதவியாகிய தான் இறந்துபடின் சிறிது புகழே குறைபடு மென்றும் கூறினளாம்.

4. பெற்றோர்க்கும் பொருந்துமாறு ;—அடிகள் திருமுன் வணங்கினேன். குரவர் பணிவிடைகளைத் தவிர்ந்தது ஒரு தவறு ; அன்றியும், குலப் பிறப்பாட்டியாகிய கண்ணகியோடு இரவில் நகர் நீங்கி வந்தது ஒரு தவறு ; இவை இரண்டாலும் வரக்கூடிய துன்பத்தால் திருவுளத்தில் தளர்ச்சி சிறிது உண்டாயினும் அதனைக் கடிந்தருள்க ; இங்ஙனம் என் பிழையாகச் சொல்லிய இவற்றை "ஏரு விண்ணப்பமாகத் திருவுளம் பற்றுது ஒழிக ; பேதைமைச் சொல்லென்றே திருவுளம் பற்றல் வேண்டும் ; போற்றி."

பூவணையிற் பொருந்தி, அட்டிற்புகை, அங்காடியில் எழும் [1]மோதகப் புகை, மாட மாளிகைகளில் மைந்தரும் மகளிரும் எடுத்த தீம்புகை, ஆகுதிப் புகை முதலாய பல வேறு பூம் புகை விரவி, பாண்டியன் கோயிலில் கூட்டப்படும் கலவைச் சாந்தின் நறுமணங் கமழ்ந்து,

புலவர் செந்நாப் பொருந்திய [2]நிவப்பின்
பொதியில் தென்றல் போலாது, ஈங்கு,
மதுரைத் தென்றல் வந்தது, காணீர் !
நனிசேய்த் தன்றுஅவன் [3]திருமலி மூதூர் ;
[4] தனிநீர் கழியினும் தகைக்குநர் இல்"

என்று மொழிந்து நீங்கினர். அற்றைப் பகற்போதை அங்கே கழித்த இம் மூவரும் இரவில் செல்லத் தொடங்கினர். மதுரை மூதூரெல்லையைக் குறுகுங்கால், இரவும் குன்றத் தலைப்பட்டது. கடவுளர் கோயில், மன்னவன் கோயில் முதலிய பேரிடங்களில் ஓசை எழுவதாயிற்று. அந்தணர் ஓதும் நான்மறை முழக்கமும், மாதவரது மறைமொழி யோதையும், வாள்வீரர் எடுக்கும் முழவு முழக்கமும், யானை பரி என்ற இவற்றின் ஓசையும், [5]கிணைப்பொருநர் வைகறையிற் பாடும் [6]துயிலெடைப் பாட்டும் பிறவும் இம் மூவரையும் வரவேற்பன போல இருந்தன. இவற்றைக் கேட்டுக்கொண்டே இவர்கள் வையைக் கரையை அடைந்து,

கரைநின் றுஉதிர்த்த [7]கவிர் இதழ்ச் செவ்வாய்
அருவி முல்லை அணிநகை யாட்டி
[8] விலங்குநிமிர்ந்து ஒழுகிய கருங்கயல் நெடுங்கண்

---

1. மோதகப் புகை - அப்பம் சுடும் புகை.

2. நிவப்பு - சிறப்பு. போலாது - நிகராகாதபடி.

3. திருமலி மூதூர் - செல்வம் மிக்க பழைய ஊராகிய மதுரை.

4. தனி நீர் கழியினும் - உம்மைப் போல்பவரே அன்றி வேறுபட்ட தன்மையுடையராய் ஒருவர் சென்றாலும். தகைக்குநர் - நில்லென்று தடுப்பார்.

5. மருதப் பறைகொண்டு பாடியாடும் கூத்தர் கிணைப்பொருநர்.

6. துயிலெடைப் பாட்டு - திருப்பள்ளி எழுச்சி பாடுதல்.

7. கவிர் - முருக்கம் பூ.

8. விலங்கு .... நெடுங்கண் - குறுக்கே மறிந்தும் நெடுக வோடியும் திரிகின்ற கயல் மீனாகிய நெடிய கண்.

விரைமலர் நீங்கா [1]அவிர்அறல் கூந்தல்
உலகுபுரந்து ஊட்டும் உயர்பேர் ஒழுக்கத்துப்
[2]புலவர் நாவில் பொருந்திய பூங்கொடி
வையை என்ற பொய்யாக் குலக்கொடியைக்

கண்டனர் அவ் யாற்றின் அழகைக் கண்டு வியந்து கொண்டே சென்றவர்,

[3]பரிமுக அம்பியும் [4]கரிமுக அம்பியும்
[5]அரிமுக அம்பியும் [6]அருந்துறை இயக்கும்
பெருந்துறை மருங்கில் பெயராது, ஆங்கண்,
மாதவத் தாட்டியொடு [7]மரப்புணை போகி

அதன் தென்கரைக்கண் இருந்த நறும்பொழிலைச் சேர்ந்தனர். பின்பு, "இம் மதுரைமா நகர்க்கண் வானவர் உறைவர்; அதனால் இதனை வலங்கொண்டு போவது மிகவும் தக்கது" என்று கருதிக் காவற்காடும் அகழியும் சூழ்ந்த கரைவழியே சென்றனர். அங்கே,

[8]கருநெடுங் குவளையும் ஆம்பலும் கமலமும்
தையலும் கணவனும் [9]தனித்துறு துயரம்

---

1. அவிர் அறல் கூந்தல் - விளங்குகின்ற கருமணலாகிய கூந்தல்,

2. புலவர் நாவில் பொருந்திய பூங்கொடி - புலவர் பாடும் புகழ் படைத்த திருமகளை யொப்பவள்.

3. பரிமுக அம்பி - குதிரையின் முகம்போல முகமமைத்த ஓடம்.

4. கரிமுக அம்பி - யானை முகவோடம்.

5. அரிமுகம் - அரிமாவின் முகம்.

6. அருந்துறை இயக்கும் பெருந்துறை - ஓடக்கோல் நிலைக்காத ஆழமுடைய துறையில் செல்வோரைக் கொண்டு செலுத்தும் மக்கள் பலராகச் செல்லும் நீர்த்துறை. அருந்துறையில் பரிமுக அம்பி முதலியன இயக்கும் பெருந்துறை என முடிவு காண்க.

7. மரப்புணை - சிறு துறையில் செலுத்தப்படும் மரத்தோணி. (பரிசில் என்ப).

8. கரு நெடுங் குவளை - கரிய புற இதழையுடைய குவளைப் பூ.

9. தனித்து உறுதுயரம் - தனியாகப் பிரிந்து அடையவிருக்கும் மிக்க துன்பத்தை.

குறிப்பு :—செவ்வாயும், முல்லை நகையும், கயல் நெடுங்கண்ணும், அறல் கூந்தலும், உடைய பூங்கொடி ; வையை என்று பெயர் பெற்ற குலக்கொடி. காலந்தோறும் பொய்க்காது நீர்வளம் சுரப்பதால் வையையாற்றைப் பொய்யாக் குலக்கொடி என்றார்.

ஐய மின்றி அறிந்தன போல,
[1] பண்நீர் வண்டு பரிந்துஇனைந்து ஏங்கிக்
[2] கண்ணீர் கொண்டு [3] காலுற நடுங்கப்
போர்உழந்து எடுத்த ஆர்எயில் நெடுங்கொடி
[4] வாரல்என் பனபோல் மறித்துக்

கைகாட்டுபவைபோல இருந்தன. அதனை அவ்வாறு உணராத கோவலன் கண்ணகி தன்னைத் தொடர, கவுந்தியடிகளைப் பின்பற்றி,

காய்க்குலைத் தெங்கும், வாழையும், கமுகும்,
[5] வேய்த்திரட் பந்தரும் விளங்கிய இருக்கை
[6] அறம்புரி மாந்தர் அன்றிச் சேராப்
[7] புறஞ்சிறை மூதூர் அடைந்தான்.

---

1. பண் நீர் வண்டு - பாட்டிசைக்கும் தன்மையையுடைய வண்டு; நோதிறம் என்னும் அவலப் பண்ணைப் பாடும் வண்டு.

2. கண்ணீர், கண் + நீர் - கண்களிடத்துச் சொரியும் நீர்; கள் + நீர் - பூவில் தேனுகிய நீர்.

3. காலுற நடுங்க - காலில் மிதிப்புண்ணும்படி வீழ; காற்று அலைத்தலால் அசைந்து தாழ. ஆர் எயில் - பகைவர் பற்றுதற்கு அரிய நெடிய மதில்.

4. வாரல் - வாராது ஒழிக.

5. வேய்த்திரள் பந்தர் - கொறுக்கச்சித் தட்டால் சமைக்கப்பட்ட பந்தல். (கொறுக்கச்சி - கொறுக்கந்தட்டு என்றும் கூறுப.)

6. அறம்புரி மாந்தர் - தவம் செய்பவர்.

7. புறம் சிறை - நகர்க்குப் புறத்தே அதனைச் சேர உள்ளதொரு இடம். இதுவே "புறஞ்சேரி"* எனப்பட்டது.

## ௰௪. ஊர்காண் காதை

கவுந்தியடிகளுடன் கோவலனும் கண்ணகியும் மதுரை மூதூரின் புறஞ்சிறைப் பொழிலை யடுத்த மாதவர் உறையும் சேரியை அடைந்த அளவில் விடியல் வருவதாயிற்று. கூம்பி இருந்த தாமரைகள் பொதி அவிழத் தொடங்கின; சோலையிலும், கழனியிலும், பொய்கையிலும் புள்ளினம் எழுந்து ஆர்க்கத் தொடங்கின; செஞ்ஞாயிறு செங்கதிரைப் பரப்பிக் கீழைத் திசையில் எழத் தொடங்கினன். மதுரையில் உள்ள

[1] நுதல்விழி நாட்டத்து இறையோன் கோயிலும்,
[2] உவணச் சேவல் உயர்த்தோன் நியமமும்,
[3] மேழி வலன்உயர்த்த வெள்ளை நகரமும்,
கோழிச் சேவல் [4]கொடியோன் கோட்டமும்,
அறத்துறை விளங்கிய அறவோர் பள்ளியும்,
[5] மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்,
வால்வெண் சங்கொடு வகைபெற்று ஓங்கிய
காலை முரசம்

கனைகுரல் எடுத்து இயம்பின. கோவலன் கவுந்தியடிகளைத் தொழுது, " தவத்தீர், இல்லற நெறியிலிருந்து நீங்கியோர் கொள்ளும் தன்மையுடையேனாய், முன்னறியாத நாட்டிற்குப் பல வழிகளை நடந்து கடந்து, இம் மெல்லியல் நல்லாளைத் துன்புறுத்திச் சிறுமையுற்றேன். இந் நகர்க்கண் புகுந்து இங்குள்ள வணிகர்க்கு என் நிலைமையினை உணர்த்தி, யான்

1. நுதல் விழி நாட்டத்து இறையோன் - நெற்றியில் கண்ணையுடைய சிவபெருமான்.

2. உவணச் சேவல் - கருடப்புள். நியமம் - கோயில்.

3. மேழி வலன் உயர்த்த வெள்ளை - பலதேவன். மேழி - ஈண்டுக் கலப்பையை உணர்த்திற்று. வலன் - வெற்றிக்கொடி. நகரம் - கோயில்.

4. கொடியோன் - முருகன்.

5. மறத்துறை - வீரத்தின் துறைகள்; அவை வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை என இவை.

அறத்துறை - இல்லறம், துறவறம் என இவை. ஈண்டு அறவோர் என்றது துறவறத்தாரை.

மீண்டு வருங்காலும், இவள் தங்கள் திருவடிக் காப்பினை ளாதல்வேண்டும், இதனால் தங்கட்கு ஏதேனும் ஏத முண்டோ?" என வேண்டினன். அது கேட்ட கவுந்தியடி கள், "நீ முற்பிறப்பில் பெரிதும் நல்வினையே செய்து, சிறிது தீவினை செய்தனை; அதனால் இத் துயர் உழந்தாய். அன்றி யும் இதனைக் கேள்,

[1] மறத்துறை நீங்குமின் வல்வினை ஊட்டும்என்று
[2] அறத்துறை மாக்கள் திறத்தின் சாற்றி,
[3] நாக்கடிப் பாக வாய்ப்பறை அறையினும்
[4] யாப்பறை மாக்கள் இயல்பில் கொள்ளார்;
தீதுடை வெவ்வினை [5] உருத்த காலைப்
[6] பேதைமை கந்தாப் பெரும்பேது உறுவர்;
[7] ஒய்யா வினைப்பயன் உண்ணும் காலைக்
[8] கையாறு கொள்ளார் கற்றறி மாக்கள்;
பிரிதல் துன்பமும், புணர்தல் துன்பமும்,
[9] உருவி லாளன் ஒறுக்கும் துன்பமும்,
புரிகுழல் மாதர்ப் புணர்ந்தோர்க் கல்லது
[10] ஒருதனி வாழ்க்கை உரவோர்க்கு இல்லை;

---

1. மறத்துறை - தீவினை செய்தல்.

2. அறத்துறை - நல்வினை செய்தல்.

அறத்துறை மாக்கள், மறத்துறை நீங்குமின்; நீங்கீராயின், வல்வினை துன்பத்தை ஊட்டும் என்று சாற்றி என முடிக்க. திறத்தின் சாற்றி - கேட்போர் மனம் கொள்ளும் வகையில் எல்லாம் சொல்லி.

3. நா கடிப்பாக வாய் பறை அறையினும் - வாயைப் பறையாகவும் அதனை அடித்து முழக்கும் குச்சி நாவாகவும் கொண்டு உரைப்பினும்.

4. யாப்பு அறை மாக்கள் - நல்வினையாகிய உறுதித் துணை இல்லாத பேதைகள்.

5. உருத்த காலை - தோன்றித் துன்புறுத்தியபோது.

6. பேதைமை கந்தா - மடமையே பற்றுக்கோடாக.

7. ஒய்யா வினைப் பயன் - போக்கமுடியாத தீவினைப் பயனான துன் பம்.

8. கையாறு - செய்வதறியாது மயங்குதல். கையாறு கொள்ளார் எனவே, இது நாம் நுகரக்கடவதென்று கொள்வர் என்பதாம்.

9. உருவிலாளன் - காமன்.

10. ஒரு தனி வாழ்க்கை உரவோர் - முற்றத் துறந்து தனித்து வாழும் உயர்ந்தோராகிய முனிவர்.

பெண்டிரும் உண்டியும் இன்பம்என்று உலகில்
கொண்டோர் உறூஉம் [1]கொள்ளாத் துன்பம்
கண்டனராகிக் [2]கடவுளர் வரைந்த
காமம் சார்பாக் காதலின் உழந்துஆங்கு
[3]ஏமம் சாரா இடும்பை எய்தினர்
இன்றேயல்லால் [4]இறந்தோர் பலரால்,
[5]தொன்று பட வரூஉம் தொன்மைத்து,

என்று விரியக் கூறி, இவற்றிற்கு எடுத்துக் காட்டாக, காட்டில் தன் காதலியை இழந்து வருந்திய இராமன் கதை, சூதாடி நாடிழந்து அடவியில் நடுவியாமத்தே தன் காதலி யைக் கைவிட்டகன்ற நளன் கதை ஆகிய இவற்றை எடுத் தோதி, இந் நிகழ்ச்சிகளுள், நளன், தன் காதலியைக் கைவிட்டு நீங்கியதற்கு அடிப்படையாக இருப்பது

வல்வினை யன்றோ ! மடந்தைதன் பிழைஎனச்
[6]சொல்லலும் உண்டேல், சொல்லா யோநீ ;
[7]அனையையும் அல்லை ; ஆயிழை தன்னொடு
பிரியா வாழ்க்கை பெற்றனை அன்றே !

---

1. கொள்ளாத் துன்பம் - அளவு கொள்ளாத துன்பம்.

2. கடவுளர் ...... உழந்து - முனிவர்களால் நீக்கப்பட்ட காமமே சார்பாகப் பற்றிக் கடும்பறறுக்கொண்டு துயர்க்கடல் மூழ்கி.

3. ஏமம் சாரா இடும்பை - கரை காணப்படாத நோய்.

4. இறந்தோர் - கழிந்தவர். மண்ணுலகத்தே யன்றி விண்ணுலகத் தும் இவ்வாறு கழிந்தோர் உளர் என்றற்குப் "பலர்" என்றார்.

5. தொனறு பட வரூஉம் தொன்மைத்து - பழகிப் போந்த முறைமையுடையது.

6. சொல்லலும் நீ - சொல்லுதற்கு வேறு காரணமுண்டாயின் நீயே சொல்; இல்லை என்பது கருத்து.

7. நீ வல்வினையால் ஏவப்படலாலும், இராமனைத் தாதை ஏவுதலா லும், நளனைப் புட்கரன் ஏவுதலாலும், அறியாத் தேயத்து உழத்தலும், சிறுமையுறுதலும் ஒத்தலால் அவரோடு ஒப்பாய் எனினும், அவரைவிட நீ வேறுபட்ட பெரிய நன்மையையுடையை. அவர் தம் காதலியைப் பிரிந்து வாழ்ந்தனர் ; நீ பிரியா வாழ்க்கை பெற்றாய்.

குறிப்பு :—" பிரிதல் துன்பமும் " என்பது முதல் " தொன்மைத்து " என்பது ஈறாகவுள்ள பகுதிக்கு ஆசிரியர் அடியார்க்கு நல்லார் மிக அழகிய தொருபொருள் உரைத்துள்ளார் ; அதனை மூதனூலில் அவர் உரையிற் காண்க.

ஆதலால், நீ சிறு வருத்தமும் கொள்ளாது சென்று, பொருந்துவன செய்து கொண்டு ஈங்கு வருக" என்றனள். பின்பு அவர்பால் விடைபெற்றுப் பெயர்ந்த கோவலன், அகழியைக் கடந்து,

பெருங்கை யானை இனநிரை பெயரும்
[1] சுருங்கை வீதி மருங்கில் போகி,
கடிமதில் வாயில் [2]காவலில் சிறந்த
அடல்வாள் யவனர்க்கு [3]அயிராது புக்குஆங்கு
[4] ஆயிரம் கண்ணோன் அருங்கலச் செப்பு
வாய்திறந் தன்ன மதிலக வரைப்பில்
[5]குடகாற்று எறிந்து கொடிநுடங்கு மறுகில்

நடந்து சென்று, செழுங்குடிச் செல்வரும் காவலரும் வாழும் வீதியும், பரத்தையர் தெருவும், பல்வகை வண்டிகளும் தேர்களும் செல்லும் பெருவீதிகளும், பல வகை மருந்துகள் விற்கும் வீதிகளும்,

செம்பிற் செய்நவும் [6]கஞ்சத் தொழிலவும்
[7] வம்பின் முடிநவும் மாலையிற் புனைநவும்
[8] வேதினத் துப்பவும் [9]கோடுகடை தொழிலவும்

---

1. சுருங்கை வீதி - படைகள் மறைந்து செல்லும் வழி.

2. காவலில் சிறந்த - இளங்கோவடிகள் காலத்தும், அவர்க்கு முன்னும் இவ்விடத்தே காவல் தொழிற்கு யவனர்களே பெரிதும் ஆளப்பட்டனர் என்பது தமிழ் நாட்டு வரலாற்று முடிவு. அதனால் அவர் பயிற்சி மிகவுடையராய்ச் சிறந்து இருந்தனர் என்றற்குக் காத்தல் தொழிலில் மேம்பட்ட என்றார். "மெய்ப்பை புக்க வெருவரும் தோற்றத்து, வலிபுணர் யாக்கை வன்கண் யவனர், புலித்தொடர் விட்ட புனைமாண் நல்லில், திருமணி விளக்கம் காட்டித் திண்ஞாண், எழினி வாங்கிய ஈரறைப் பள்ளி" (முல்லை' 60-4) என வருதல் காண்க.

3. அயிராது - ஐயுறுதபடி.

4. ஆயிரம் கண்ணோன் - . . . செப்பு : இந்திரனது மணிக்கலன்கள் பெய்த அணிகலப் பெட்டி.

5. குடகாற்று - மேற்றிசைக் காற்று.

6. கஞ்சத் தொழில் - வெண்கலத்தால் கலம் முதலியவை செய்தல்.

7. வம்பின் முடிந - அல்லி நார், கற்றாழை நார் முதலிய நார்களைக் கொண்டு செய்தல். வம்பு - கயிறுமாம்.

8. வேதினத் துப்பு - ஈர்வாள் முதலிய படைக் கருவிகள்.

9. கோடு கடைதல் - யானைக்கோடு, சங்கு முதலியவற்றை அறுத்தலும் கடைதலும்.

புகையவும் சாந்தவும் [1]பூவில் புனைநவும்
வகைதெரிவு அறியா [2]வளம்தலை மயங்கிய
அரசுவிழை திருவின் அங்காடி வீதியும்

ஒன்பது மணிகளையும் ஆராய்ந்து குற்றம் களைந்து நலம் துணிந்து விற்பதோடு அவற்றின்,

[3] வகைதெரி மாக்கள் தொகைபெற்று ஓங்கிய
பகைதெறல் அறியாப் [4]பயம்கெழு வீதியும்,
சாத ரூபம் கிளிச்சிறை ஆடகம்
சாம்பூ நதமென ஓங்கிய கொள்கையின்
[5] பொலம்தெரி மாக்கள் [6]கலங்குஅஞர் ஒழித்துஆங்கு
இலங்குகொடி எடுக்கும் நலம்கிளர் வீதியும்,
[7] நூலினும் மயிரினும் நுழைநூல் பட்டினும்,
[8] பால்வகை தெரியாப் பல்நூறு அடுக்கத்து
நறுமடி செறிந்த அறுவை வீதியும்,
கால மன்றியும் [9]கருங்கறி மூடையொடு
[10] கூலம் குவித்த கூல வீதியும்

---

1. பூவில் புனைதல் - பூவால் மாலை, செண்டு முதலிய தொடுத்தல்.

2. வளம் தலைமயங்கிய - வளங்கள் மிக மலிந்துள்ள. அரசு விழை திரு - அரசரும் கண்டால் விரும்பத்தக்க செல்வம்.

3. வகை ;—**வயிரமணி**, குணத்தால் ஐந்தும், நிறத்தால் நான்கு மாகிய வகைப்படும் ; **மரகதமணி**, குணத்தால் எண்வகைப்படும் ; **மாணிக் கம்**, பதும முதலாக நால் வகையும், இவ்வாறே **புருடராகம்**, **வயிடூரியம்**, **நீலம்**, **கோமேதகம்**, **முத்து**, **பவளம்** என்ற இவற்றின் பிறப்பு முதல் சிறப்பு ஈறுகவுள்ள பல வேறு வகை.

4. பயம் கெழு வீதி - பயன் பொருந்திய மணி விற்கும் தெரு.

5. பொலம் - பொன் வகை.

6. கலங்கு அஞர் - எப் பொன் எவ்விடத்துக் கிடைக்குமோ என ஐயுற்று வருந்தும் வருத்தம்.

7. நூல் - பருத்தி நூல். மயிர் - எலி மயிர், நுழை நூல் - நுண்ணிய நூல்.

8. பால் வகை தெரியா பல் நூறு அடுக்கம் - அவ்வப்பகுதியைத் தெரிந்து எடுத்து, நூறு நூறுகப் பல அடுக்குகளாக அடுக்கி உள்ள.

9. கருங்கறி மூடை - பெரிய மிளகு மூட்டை.

10. கூலம் - எண்வகைக் கூலம். அவை, எள்ளு, கொள்ளு, பயறு, உழுந்து, அவரை, கடலை, துவரை, மொச்சை என்பன. இவற்றோடு நெல் முதலாக எட்டு வகைகளைக் கூறி, இரண்டையும் ஈரெண்கூலம் என்றும் சொல்லுவதுண்டு.

[1] பால்வேறு தெரிந்த நால்வேறு தெருவும்
[2] அந்தியும் சதுக்கமும் ஆவண வீதியும்
மன்றமும் [3]கவலையும் [4]மறுகும்

கண்டு பெருமகிழ்ச்சி எய்தி, மீண்டு, கவுந்தியடிகள் இருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தான்.

---

1. பால் வேறு தெரிந்த நால் வேறு தெரு - அந்தணர் முதலாக நால் வகை மரபினர் இருக்கும் நால்வகைத் தெரு. ஒவ்வொரு மரபினும் குல வகை பலவுண்டாதலால் "பால்வேறு தெரிந்த" என்றார்.

2. அந்தி - மூன்று தெருக்கள் கூடுமிடம். சதுக்கம் - நான்கு தெருக்கள் கூடுமிடம்.

3. கவலை - முடுக்கு வழி.

4. மறுகு - தேர் செல்லும் தெரு.

## ௰௫. அடைக்கலக் காதை

மதுரை மூதூரின் பல நலங்களையும் கண்டு போந்த கோவலன், கவுந்தியடிகளை நோக்கி, அந் நகரின் சிறப்பையும், அதன்கண் இருந்து ஆட்சி புரியும் பாண்டி வேந்தரின் கோலின் செம்மையும், குடையின் தண்மையும், வேலின் கொற்றமும் விளங்கக் கூறினன். அப்போது மாடலன் என்னும் மறையவன் ஒருவன் அங்கே வந்திருந்தான். அவன் காவிரிப்பூம் பட்டினத்துக்கருகிலுள்ள தலைச்செங்கானத்தைச் சேர்ந்தனன். அவன் பொதியில் மலைக்குச் சென்று அதனை வலங்கொண்டு, குமரியம் பெருந்துறைக்குச் சென்று நீராடி வந்துகொண்டிருந்தான். வழியில் நடந்து போந்த வருத்தம் நீங்க, அறவோர் வைகும் இப் பூம்பொழிலிடத்தே தங்கியிருந்தான். அவனைக் கோவலன் கண்டதும், அவனடியில் வீழ்ந்து வணங்கினன். மாடலன், கோவலனை வாழ்த்தி, "கோவல, நினக்கு மாதவி பயந்த மகளுக்கு மணிமேகலை என்று பெயரிட்ட காலை, நீ பெரும் பொருள் வழங்கினை ; அதுபோது அங்கு வந்த பெரு முது வேதியனை மதம் பட்ட யானையொன்று பற்றிக் கொள்ளக் கண்டு, அதனை அடக்கி, அவனை உயிர் காத்தாய். பார்ப்பனி ஒருத்தி அறியாது செய்த பிழைக்காக அவளைக் கைவிட்டு அவள் கணவன் செல்ல, அவனைப் பின் தொடர்ந்து வருந்திய அவள் பொருட்டுப் பெரும் பொருள் நல்கி, அவள் தன் கணவனுடன் அறம் பல புரிந்து இனிது வாழச் செய்தாய். பத்தினி ஒருத்தியின் பொருட்டுத் தீங்கு செய்த ஒருவனை அறி கரி பொய்த்தவரை அறைந்துண்ணும் பூதம் பற்றிக் கொள்ள, அவனது தாய் அது கண்டு மிக்க துயர் எய்துவதை நீ கண்டு அவன் பொருட்டு அப் பூதத்தின்பாற் சென்று, 'என் உயிரைக் கொண்டு இவன் உயிரைத் தருக" எனக் கேட்டனை ; நினக்கு, அது,

[1] நரகன் உயிர்க்கு நல்உயிர் கொண்டு
பரகதி இழக்கும் பண்பு [2]ஈங்கு இல்லை ;

என்று மறுத்து அவனைக் கொன்றுவிடினும், நீ அவன் தாய்க்கும் அவனுடைய சுற்றத்தோர்க்கும் மிக்க பொருள் நல்கிக் காத்து ஓம்பினை. இவ்வாறு பலரையும்

பல்லாண்டு புரந்த [3]இல்லோர் செம்மல் !
இம்மைச் செய்தன யான்அறி நல்வினை ;
[4] உம்மைப் பயன்கொல் ! ஒருதனி உழந்துஇத்
[5] திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது,

என்று மொழிந்தான். அவனுக்குக் கோவலன், தான் கண்டதொரு கனவைக் கூறலுற்று,

...... ஓர் [6]குறுமகன் தன்னால்,
காவல் வேந்தன் கடிநகர் தன்னில்,
நாறு [7]ஐங் கூந்தல் நடுங்குதுயர் எய்தக்
[8] கூறைகோட் பட்டுக் [9]கோட்டுமா ஊரவும்,
அணித்தகு புரிகுழல் ஆயிழை தன்னொடும்
[10] பிணிப்புஅறுத் தோர்தம் பெற்றி எய்தவும்,

---

1. நரகன் உயிர்க்கு-நரகத்திற்குரிய தீவினையைச் செய்த கீழ் மகன் உடம்பின் பொருட்டு. உயிர் ஈண்டு ஆகுபெயர்.

2. ஈங்கு - என்னிடம். பண்பு - முறை.

3. இல்லோர் செம்மல - இல்லிருந்து வாழ்வோர்க்குத் தலைவன் ; வறியவர்க்கு அருளும் தலைவன் என்றுமாம்.

4. உம்மை - முன்னைப் பிறப்பிற் செய்த வினை.

5. திருத்தகு மா மணிக் கொழுந்து - முழு மாணிக்கம் போன்ற கண்ணகி. அவளது இளமை குறித்து, " கொழுந்து " என்றார்.

6. குறுமகன் - கீழ்மகன். " குறுமை ஈண்டுப் பண்பன்று, சிறுமை யென்னும் பொருட்டாய்க் குலத்திற்கு அடையாய், அதன் உயர்பின்மை உணர்த்தி நின்றது " என்பர் அடியார்க்கு நல்லார்.

7. ஐங்கூந்தல் - ஐந்து வகை பெற வகுத்த கூந்தலையுடைய இக் கண்ணகி.

8. கூறை கோட்பட்டு - உடுத்த உடை பிறரால் கவரப்பட்டு.

9. கோட்டு மா - எருமைக் கடா.

10. பிணிப்பு அறுத்தோர் தம் பெற்றி - பற்றற்றோர் பெறும் பேறு. " பிணிப்பு, பற்று; அஃதாவது அன்பாகிய ஒரு தளை; அதனை அறுத்தோர் அருளுடையோர்; அவர் பெற்றியாவது, சுவர்க்கம் எனக் கொள்க "—அடி. நல்லார்.

மாமலர் வாளி வறுநிலத்து எறிந்து
காமக் கடவுள் கையற்று ஏங்க,
அணிதிகழ் [1]போதி அறவோன் தன்முன்
மணிமே கலையை மாதவி அளிப்பவும்,
நனவு போல [2]நள்ளிருள் யாமத்துக்
கனவு கண்டேன்,

என்று கூறினன். அது கேட்ட மாடலனும் கவுந்தியடிகளும், "கோவல, இவ்விடத்தே துறவு பூண்டோரல்லது பிறர் இருத்தலாகாது; நீவிர் நகர்க்குட் புகுந்து, நும் பெற்றோர் [3]பெயர் விளக்கம் கூறின், அங்குள்ள வணிகர் நும்மைத் தம் அக நகர்க்கண்ணே இருத்துவர்; கதிர் சென்று மறைவ தன்முன் செல்க" என்றனர். அக் காலத்தே, புறஞ்சிறைப் பள்ளியிலுள்ள [4]இயக்கிக்குப் பாற்சோறு படைத்து வழி பட்டுவந்த மாதரி என்னும் இடைச்சி அவ்வழியே வந்தாள். அவள் கவுந்தியடிகளைக் கண்டதும் அடிவணங்கி நிற்ப, அவ் வடிகள்,

ஆகாத்து ஓம்பி ஆப்பயன் அளிக்கும்
கோவலர் வாழ்க்கை ஓர் [5]கொடும்பாடு இல்லை;
தீதிலள்; [6]முதுமகள்; [7]செவ்வியள்; அளியள்;

---

1. போதி அறவோன் - புத்தன்.

2. நள்ளிருள் யாமம் - வைகறை யாமம். "நள், நளியென்னும் உரிச்சொல் ஈறு திரிபு; செறிவின்கண் வந்தது; எனவே, வைகறை யாமம் என்பதாயிற்று."—அடி. நல்லார்.

3. பெயர் விளக்கம் - பெயர், குடிப்பிறப்பு, வாணிபப் பரப்பு முதலியன.

4. இயக்கி - சைன சமயத்துத் தீர்த்தங்கரர் ஒவ்வொருவருக்கும் தொண்டு புரியும் ஒரு தேவதை; கணவன் இருக்கும்போதே துறவு பூண்ட பெண் துறவி என்றும் கூறுவர்.

5. கொடும்பாடு - கொடுமைப்பாடு. ஆப் பயன் - பால், நெய் முதலியன. அளிக்கும் கோவலர் - கன்று அருத்தி மிக்கதனை யாவருக்கும் அளித்து வாழும் கோவலர்.

6. முதுமகள் - யாண்டு முதிர்ந்தவள்.

7. செவ்வியள் - மனத்தில் கோட்டம் இல்லாதவள்; நேர்மையுடையவள். அளியள் - அளிக்கும் தன்மையுடையவள்.

குறிப்பு:—மாதரியின் முகத்தையும் பார்வையையும் கண்டு கவுந்தியடிகள், அவளது மனப் பண்பை அறியும் திறம் காண்க.

மாதரி தன்னுடன் மடந்தையை இருத்துதற்கு
ஏதம் இன்று,

என எண்ணி, அம் மாதரியை நோக்கி,

மாதரி, கேள் : இம் மடந்தைதன் கணவன்
தாதையைக் கேட்கின், [1]தன்குல வாணர்
அரும்பொருள் பெறுநரின் விருந்தெதிர் கொண்டு
கருந்தடங் கண்ணியொடு [2]கடிமனைப் படுத்துவர்.
[3] உடைப் பெருஞ் செல்வர் மனைப்புகும் அளவும்
[4] இடைக்குல மடந்தைக்கு அடைக்கலம் தந்தேன்.
மங்கல மடந்தையை நன்னீ ராட்டிச்
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் தீட்டித்
தேமென் கூந்தல் சின்மலர் பெய்து
[5] தூமடி உடீஇத் [6]தொல்லோர் சிறப்பின்
ஆயமும் காவலும் ஆயிழை தனக்குத்
தாயும் நீயே ஆகித் தாங்கு,

என்று மொழிந்து, மீட்டும் கூறலுற்று,

இன்துணை மகளிர்க்கு, இன்றி யமையாக்
[7] கற்புக் கடம்பூண்ட இத்தெய்வம் அல்லது
பொற்புடைத் தெய்வம் யாம்கண் டிலமால்.
[8] "வானம் பொய்யாது, வளம்பிழைப்பு அறியாது,

---

1. தன குலவாணர் - இவனது குலத்தவரான வணிகர். அரும் பொருள் பெறுநரின் - பெறுதற்கரிய உயர்ந்த பொருள் ஒன்றைப் பெற்ற வரைப்போல.

2. கடி மனைப் படுத்துவர் - காவலையுடைய தங்கள் மனையகத்தே வைத்துக் கொள்வார்கள்.

3. உடைப்பெருஞ் செல்வர் - வழி வழியாகச் செல்வம் இடையறுது வந்த பெருஞ் செல்வர்.

4. இடைக்குல மடந்தைக்கு - இடையர் குலத்து மங்கையே! உனக்கு.

5. தூ மடி உடீஇ - தூய மடிப்புடைவை உடுத்து.

6. தொல்லோர் சிறப்பின் ஆயம் - பழையோராகச் சிறப்பித்துச் சொல்லப்பட்ட ஆய மகளிர்.

7. கற்புக் கடம் பூண்ட - கற்பையே உயிர்க்கடனாகக்கொண்டு ஒழுகு கின்ற.

8. வானம் - மழை.

நீள்நில வேந்தர் கொற்றம் சிதையாது,
பத்தினிப் பெண்டிர் இருந்த நாடு," என்னும்
அத்தகு நல்உரை அறியா யோ, நீ,

எனச்சொல்லி, தான் சொல்லும் இதனைக் கடைப்பிடித்தால் அம் மாதரிக்கு வரக்கடவதொரு பயன் கூறுவாளாய்,

தவத்தோர் அடைக்கலம் தான்சிறி தாயினும்
மிகப்பே ரின்பம் தரும்; அது கேளாய்,

என்று முன் மொழிந்து, இதற்கு எடுத்துக்காட்டாக, சாயலன் என்னும் வணிகன் வரலாற்றினையும் உரைத்தார். மாதரி, அவ்வண்ணமே அடிகளின் நல்லுரையை ஏற்றுக் கண்ணகியையும் கோவலனையும் அழைத்துக்கொண்டு நீட்டியாது சென்று,

[1] மிளையும், கிடங்கும், [2] வளைவிற் பொறியும்,
[3] கருவிரல் ஊகமும், கல்உமிழ் கவணும்.
[4] பரிவுறு வெந்நெயும், [5] பாகடு குழிசியும்,
[6] காய்பொன் உலையும், கல்லிடு கூடையும்,
[7] தூண்டிலும் [8] தொடக்கும் [9] ஆண்டலை யடுப்பும்,
[10] கவையும் கழுவும் [11] புதையும் [12] புழையும்

---

1. மிளை - காவற்காடு. கிடங்கு - அகழி.
2. வளை விற் பொறி - வளைந்து தானே அம்பை எய்யும் எந்திர வில்.
3. கருவிரல் ஊகம் - கரிய விரலையுடைய கருங்குரங்குபோல இருந்து நெருங்கினரைக் கடிக்கும் பொறி.
4. பரிவுறு வெம் நெய் - காய்ந்து இறைத்தலால் சேர்ந்தாரை வருத்துவதாய நெய்.
5. பாகு அடு குழிசி - செம்பை நீராக உருக்கும் மிடா.
6. காய் பொன் உலை - உருகக் காய்ச்சி எறிவதற்காக அமைந்துள்ள உலைகள்.
7. தூண்டில் - மதிலைப் பற்றுவாரைக் கோத்து வலிக்கும் கருவி.
8. தொடக்கு - கழுக்கோல் போலக் கழுத்தில் பூட்டி முறுக்கும் சங்கிலி.
9. ஆண்டலை அடுப்பு - உச்சியைக் கொத்தி மூளையைக் கடிக்கும் பொறி வரிசை.
10. கவை - கவைமுள். கழு - கழுக்கோல்.
11. புதை - அம்புக் கட்டு.
12. புழை - அம்பு செலுத்தும் அறைகள்.

[1] ஐயவித் துலாமும் [2]கைபெயர் ஊசியும்
சென்றெறி [3]சிரலும் [4]பன்றியும் [5]பணையும்
[6] எழுவும் சீப்பும் முழுவிறல் கணையமும்
[7] கோலும் [8]குந்தமும் வேலும் [9]பிறவும்
[10] ஞாயிலும் சிறந்து [11]நாள்கொடி நுடங்கும்

வாயில் கழிந்து தன் வளமனையை அடைந்தாள்.

---

1. ஐயவித் துலாம - சிற்றம்புகள் வைத்து எறியும் எந்திரம்.
2. கை பெயர் ஊசி- பற்றினர் கையைப் பொதுக்கும் ஊசிப் பொறி.
3. சிரல் - கண்ணைக் கொத்தும் சிச்சிலிப் பொறி.
4. பன்றி - பன்றிப் பொறி.
5. பணை - மூங்கில்போல் இரும்பால் செய்த பொறி.
6. எழுவும் சீப்பும் - கதவுக்கு வலியாக உட்புறத்தே மேலும் கீழு மாக விடப்பட்ட மரங்கள்.
7. கோல் - விட்டேறு.
8. குந்தம் - சவளம் என்னும் கருவி.
9. பிறவாவன, தள்ளிவெட்டி, நூற்றுவரைக் கொல்லி, அரிநூல் முதலியன.
10. ஞாயில் - மதிலின் உறுப்புக்கள்.
11. நாள் கொடி - நாடோறும் வெற்றி குறித்து நாட்டிய கொடி.

## ௧௩. கொலைக்களக் காதை

கண்ணகியை அடைக்கலமாகப் பெற்ற மாதரி, அவளைக் கோவலனுடன் தன் சேரிக்குக் கொண்டுசென்று, தனித்த தொரு காவல் நன்கு அமைந்த குடியிருக்கை நல்கி, அதன் கண் இருந்துவர விடுத்தாள். கண்ணகியும் அங்கே தனக் குத் துணையாக வந்த இடையர் மகளிருடன் நீராடி, நல்லுடை உடுத்து, அழகிய அணி பூண்டு விளங்கினள். மாதரிக்கு ஐயை என்றொரு மகள் உள்ளாள். அம் மகளை மாதரி கண்ணகிக்கு அடித்தொழில் செய்யப் பணிக்க, கண்ணகியும் அவளைத் தன்னுடன் இருக்கவென வைத்துக்கொண்டனள். கோவலனும் கண்ணகியும் சாவக நோன்பிகளாதலால், இரவு வரின் உணவு கொள்ளார் என்று கொண்டு, உரிய காலத்தே அடிசில் ஆக்குவதற்கு, மாதரியின் குறிப்புப்படியே, அட்டி லுக்கு வேண்டும் கலங்களும் பிறவும் ஐயை கொணர்ந்து உதவினள். அவற்றோடு அமையாது, உணவின்பொருட்டு,

[1] கோளிப் பாகல் கொழுங்கனித் திரள்காய்
[2] வாள்வரிக் கொடுங்காய், மாதுளம் பசுங்காய்,
மாவின் கனியொடு வாழைத் தீங்கனி
[3] சாலி யரிசி தம்பால் பயனொடு
கோல்வளை மாதே! கொள்கெனக் கொடுப்ப,

கண்ணகியும் மகிழ்ச்சியுடன் ஏற்று, தன் கணவனுக்கு இனிய உணவைச் சமைப்பாளாயினள். காய் கறிகளைப் பாகம் பண்ணுமிடத்து அவளது மெல் விரல்கள் சிவந்தன; புகை யால் திருமுகம் வியர்த்தது; செவ்விய கண்களும் சிவந்தன. இவ் வண்ணம் உணவு சமைத்தானபின், கோவலனை உண்டற் கழைப்ப, அவன் போந்து ஆங்கே மகளிரால் தொடுக்கப்

---

1. கோளிப் பாகல் - பலா. கோளி - பூவாது காய்க்கும் மரம். கொழுங்கனித் திரள்காய் - கொழுவிய கனிக்காய்.

2. வாள் வரிக் கொடுங்காய் - வெள்ளரிக்காய்; வாள் - வளைந்த. மாதுளங்காய் கூறினர், புளித்த கறி பண்ணுதற்கு.

3. சாலியரிசி - செந்நெல்லரிசி. பால் பயன் - பாலும் அதன் பயனாகிய தயிரும் நெய்யும். கோல் வளை - நேரிய வளையல்.

பெற்ற பனந்தடுக்கு ஒன்றனை விரிப்பாகக்கொண்டு அதன் மேல் அமர்ந்தனன். கண்ணகி,

> கடிமலர் அங்கையில் காதலன் அடிநீர்
> [1] சுடுமண் மண்டையில் தொழுதனள் மாற்றி
> மண்ணக மடந்தையை [2]மயக்குஒழிப் பனள்போல்
> தண்ணீர் தெளித்துத் தன்கையால் தடவி,
> குமரி வாழையின் குருத்துஅகம் விரித்து ஈங்கு
> அமுதம் உண்க, அடிகள் !

என வேண்டினள். கோவலனும் இனிது அவ்வுணவை உண்டனன். இவர்தம் நல்லொழுக்கத்தைக் கண்ட ஐயை முதலாயினோர் மிக்க வியப்புக் கொண்டு,

> ஆயர் பாடியில் அசோதைபெற் றெடுத்த
> [3] பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ
> நல்அமு துண்ணும் நம்பி ; ஈங்கு,
> பல்வளைத் தோளியும், பண்டுநம் குலத்துத்
> [4] தொழுநை யாற்றினுள் தூமணி வண்ணனை
> [5] விழுமம் தீர்த்த விளக்குக் கொல் !

என விம்மிதத்தோடு விளம்பி மகிழ்ந்தனர். இதற்குள் உணவு கொண்ட கோவலன் இனிதிருப்பக் கண்ணகி, "அம்மென் [6]திரையலோடு அடைக்காய் ஈந்தனள்." அவள்

---

1. சுடுமண் மண்டை - மண்கலம். சுடுமண் மண்டை என்றதனால் புதுக்கலம் என்று அறிகின்றோம். "இதனை மண்டை என இழித்துக் கூறினார், முன்னர்ப் பொன் வெள்ளி முதலியன வழங்கினாராதலின்". மண்டை - இழிந்த மக்கள் கையாளுவது. இஃது இக் காலத்தும் பனையோலையால் செய்யப்படும் தொன்னைக்குப் பெயராய் வழங்குகின்றது. இத் தொன்னை கூழ் குடிப்பதற்காகச் செய்யப்படுவது. இம் மட்டை, நடுநாட்டில் மடக்கு என்று சொல்லப்படுகிறது.

2. மயக்கு ஒழிப்பனள்போல் - மண்மகள் தங்களுக்கு நேர இருப்பதை அறிந்து மயங்க, அம் மயக்கத்தை ஒழிப்பவளைப் போல.

3. பூவைப் புதுமலர் - காயாம் பூவின் புதிய பூ.

4. தொழுநை - யமுனை.

5. விழுமம் - வேட்கையால் கொண்ட வருத்தம். விளக்கு - விளக்குப் போன்ற நப்பின்னை.

6. திரையல் - வெற்றிலை; அடைக்காய் - பாக்கு.

செய்யும் அரும்பணிகளைக் கண்ட கோவலன் நெஞ்சு கலங்கி, பலபட நினைந்து, அவளைத் தன் அருகில் அழைத்து இருத்தி, "நல்லாய், கல்லும் முள்ளும் காடும் செறிந்த அரு வழிகளைக் கடத்தற்கு நின் மெல்லடிகள் பொருந்துவன அல்ல; இருப்பினும் நீ என்னுடன் இந்த நெடுவழி வந்த தற்கு எம் முதுகுரவர் எத்துணைத் துயரம் எய்தினரோ! இவ்வளவிற்கும் காரணம் தெரியேன்; மாயமோ, அன்றி வல்வினையோ, யான் யாவதும் அறியேன், யான் இது காறும் [1]பொச்சாப்புண்டு, பொருளுரை இகழ்ந்து, தேற்று ஒழுக்கத்தால் தீ நெறிப்பட்டேன்; எனக்கு இனி நன்னெறி யுண்டோ?

இருமுது குரவர் ஏவலும் பிழைத்தேன்;
[2] சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையும் செய்தேன்;
[3] வழுவெனும் பாரேன்; மாநகர் மருங்கீண்டு
எழுகஎன எழுந்தாய்; [3]என்செய்தனை!

எனக் கலங்கிக் கூறினுகை, அவற்குக் கண்ணகி நல் லாளும் தான் சிறு தடையும் நிகழ்த்தாது உடன்போந்தற் குக் காரணம் கூறுவாளாய்,

அறவோர்க் களித்தலும் [4]அந்தண ரோம்பலும்
துறவோர்க்கு எதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்துஎதிர் கோடலும் இழந்த என்னை,

தங்கள் பெற்றோர் அன்பு சிறந்து அருள்மொழியாற் கலந்து பாராட்டினர். அவர்கட்கு வருத்தமுண்டாகாவாறு யானும் தங்கள் பிரிவால் உளதாய வருத்தத்தைப் புறத்தே சிறிதும் காட்டாது கரந்து ஒழுகினேன். அது தானும்

1. பொச்சாப்புண்டு - நல்லறத்தை மறந்து.

2. சிறு முதுக் குறைவி - சிறு வயதிலே பெரிய அறிவைப் பெற்ற வள்.

3. வழு எனும் பாரேன் - இவ்வொழுக்கம் பழிப்பாம் என்பது சிறிதும் பார்த்திலேன். எனும் - சிறிதும். எழுக என எழுந்தாய் - எழுக என்று சொன்னவுடனே மறுக்காமல் ஒருப்பட்டு எழுந்தாய்.

4. அந்தணர் - முனிவர். அறவோர் - இல்லிருந்து நல்லறம் செய்து வாழும் மக்கள். துறவோர் - துறவறத்தில் இருப்பவர்.

அவர்கட்கு வருத்தமே தந்தது. நீவிரும்[1]போற்றா ஒழுக்கமே புரிந்து ஒழுகினீர். தங்கள்பால் மாற்றாத உள்ளமுடையேனாதலால், யான் உடன்பட்டுப் போந்தேன்" என்றாள். என்றதும் கோவலன் தன் போற்றா வொழுக்கத்தின் புன்மையும், கண்ணகியின் மாற்றா உள்ளத்தின் மாண்பையும் நினைந்து,

> [2] குடிமுதற் சுற்றமும் குற்றிளை யோரும்
> [3] அடியோர் பாங்கும் ஆயமும் நீங்கி,
> நாணமும் மடனும் நல்லோ ரேத்தும்
> [4] பேணிய கற்பும் பெருந்துணை யாக
> என்னொடு போந்து என்துயர் களைந்த
> பொன்னே! கொடியே! புனைபூங் கோதாய்!
> [5] நாணின் பாவாய்! [6]நீள்நில விளக்கே!
> கற்பின் கொழுந்தே! [7]பொற்பின் செல்வி!

நீ நின் காற் சிலம்புகளுள் ஒன்றைக் கொடு; அதனைக் கொண்டு போய் யான் விற்றுவருவேன்; அதுவரையில் நீ சிறிதும் மயங்கற்க" என்று கூறினன். கண்ணகியும் உடனே அதனை அவன் கையிற் கொடுப்ப, அவன் அதனைக் கொண்டு அரிதிற் பிரிந்து போயினன். அவனை அறியாதே நெஞ்சு கலங்கிற்று; கண்களில் நீர் ததும்பிற்று. அதனைக் கண்ணகியோ, பிறரோ, அறியாதபடி மறைத்துக்கொண்டு சொல்லத் தொடங்கிய கோவலன், ஆய்ச்சியர் தெருவே போகின்றவன், வழியில், [8]இமில் ஏறு ஒன்று எதிரே தன்னைப் பாய வரக் கண்டு விலகிச் சென்றான். அது தீக்குறி என்பது இடையர் வழக்கு. அதனால், வணிகனாகிய கோவலன்

1. போற்றா ஒழுக்கம் - கொள்ளாத புறவொழுக்கம்.
2. குடிமுதல் சுற்றம் - தாய் தந்தை முதலியோர்.
3. அடியோர் பாங்கு - செவிலித்தாய் முதலிய தாயர் ஐவர்.
4. பேணிய கற்பு - சான்றோரால் மிகச் சீரிதாக விதந்து விரும்பப் படும் கற்பு. நல்லோர் என்றது மகளிரையுமாம்.
5. நாணின் பாவாய் - நாணம் என்னும் நற்பண்பு மிகவுடைய பாவையே.
6. நீள் நில விளக்கே - நெடிய நிலவுலகத்து மகளிர்க்கு எல்லாம் தலைவியாம் பண்பால் விளங்கி நிற்பவளே.
7. பொற்பின் செல்வி - அழகையுடைய செல்வியே.
8. இமில் ஏறு - உயர்ந்த கொண்டையையுடைய எருது.

அதனைப் பொருட்படுத்தாது ஆயர் சேரி கடந்து, பல்வேறு தெருக்களைத் தாண்டிப் பீடிகைத் தெருவை அடைந்தான். அங்கே, நுண்வினைக் கொல்லர் ஒரு நூறு பேர் பின் வர, பொற்கொல்லன் ஒருவன் வரக் கண்டான் கோவலன். அவனை அணுகி, "ஐய, காவலன் தேவிக்குத் தகுதியாயதொரு காற் சிலம்பு என்பால் உளது; அதனை நீ விலையிட்டுத் தருவையோ?" என்று கோவலன் கேட்க, அக் கொல்லன், "அடியேன் அறியேன்; ஆயினும், யான் வேந்தர் [1]முடி முதற் கலன்கள் சமைப்பேன்" என்று கைகூப்பித் தொழுது ஏத்திக் கூறினன். கோவலன், தான் கொண்டுசென்ற சிலம்பைக் காட்டினன்.

சித்திரச் சிலம்பின் செய்வினை யெல்லாம்
பொய்த்தொழிற் கொல்லன் [2]புரிந்துடன் நோக்கிக்
கோப்பெருந் தேவிக்கு அல்லதை இச்சிலம்பு
[3] யாப்புற வில்லை எனமுன் போந்து,
விறல்மிகு வேந்தற்கு விளம்பியான் வர, என்
சிறுகுடில் அங்கண் இருமின் நீர்என

மொழிந்தான். கோவலனும் அவ்வாறே சென்று, அவனது மனைக்கருகிருந்த [4]கோயிலில் இருந்தான். பொற்கொல்லன், சிலம்பு கொண்டு செல்லும்போது தனக்குள்ளே,

கரந்துயான் கொண்ட [5]காலணி, ஈங்குப்
பரந்து வெளிப் படாமுன்னம், மன்னற்குப்
[6] புலம்பெயர் புதுவனில் போக்குவன், யான்,

---

1. முடி முதற் கலன்கள் - மணிமுடி, மார்பணி, தோளணி முதலிய அணிகலன்கள்.

2. புரிந்துடன் நோக்கி - ஆர்வத்தோடு பார்த்து; வேலைப்பாடும் விலையும் நோக்காது, களவுப்பழி சுமத்துதற்கு ஏற்ற வகையைப் பார்த்து என்றும் கூறுவர்.

3. யாப்புறவு - பொருத்தம்.

4. பொற்கொல்லன் மனைக்கு அருகே கோயில் இருந்ததனால், ஆங்கே தங்கினன் கோவலன்.

5. காலணி - சிலம்பு. யான் கரந்து கொண்ட காலணி என்னிடத்தே உளது என்பது வெளிப்படா முன்னம் என இயைக்க.

6. புலம் பெயர் புதுவன் - வேறொரு நாட்டிலிருந்து வந்துள்ள இப் புதியவனாகிய கோவலன்.

என்று எண்ணமிட்டுக்கொண்டே அரசன் அரண்மனைக்குச் சென்றான். ஆங்கே, அரசன் தேவி,

கூடல் மகளிர் [1]ஆடல் தோற்றமும்,
[2]பாடல் பகுதியும், [3]பண்ணின் பயங்களும்,
காவலன் உள்ளம் கவர்ந்தன, என்று, தன்
ஊடல் உள்ளம் [4]உள்கரந்து ஒளித்து,
[5]தலைநோய் வருத்தம் தன்மேல் இட்டு,

புலந்து நீங்கினள். அதனை ஆற்றாத அரசன் அமைச்சர் குழுவிலிருந்து நீங்கி, ஏனை மகளிர் புடைசூழ அரசியின் இருக்கைக்குச் சென்று அதன் வாயிலை யடைந்தான். அந் நிலையில் பொற்கொல்லன் புகுந்து, அரசன் திருவடியில் வீழ்ந்து வணங்கி,

[6]கன்னகம் இன்றியும் [7]கவைக்கோல் இன்றியும்
[8]துன்னிய மந்திரம் துணையெனக் கொண்டு
வாயி லாளரை [9]மயக்குதுயில் உறுத்துக்
கோயிற் சிலம்பு கொண்ட கள்வன்
கல்லென் பேரூர்க் காவலர்க் கரந்துஎன்
[10]சில்லைச் சிறுகுடில் அகத்திருந் தான்

என்று கூறினன். அதனைக் கேட்டதும்,

---

1. ஆடல் தோற்றம் - ஆடுங்கால் பிறக்கும் முகத்தோற்றம், ஆடல் வகை முதலியன.

2. பாடல் பகுதி - வேறு வேறு பாட்டுகள்.

3. பண்ணின் பயங்கள் - யாழிசையின் பயன்கள்.

4. உள் கரந்து - மனத்தே மறைத்து.

5. தலைநோய் வருத்தம் தன்மேல் இட்டு - தனக்குத் தலைநோய் வந்ததாகத் தன்மேல் தானே இட்டுக்கொண்டு. (பாசாங்கு கொண்டு என்றபடி.)

6. கன்னகம் - கன்னக்கோல்.

7. கவைக்கோல் - சுவரிலுள்ள கற்களைப் பறிக்கும் கருவி.

8. துன்னிய - பயின்ற.

9. மயக்கு துயில் - உணர்வு அறவே ஒழிந்த தூக்கம்.

10. சில்லைச் சிறுகுடில் - இழிந்த சிறுகுடிசை. விற்க வந்து அகப்பட்டான் என்பது தோன்ற என் "சிறுகுடில் அகத்திருந்தான்" என்றான்.

வினைவினை கால மாதலின், யாவதும்
[1]சினையலர் வேம்பன் தேரா னாகி
ஊர்காப் பாளரைக் கூவி, ஈங்குஎன்
தாழ்பூங் கோதை தன்காற் சிலம்பு
[2]கன்றிய கள்வன் கைய தாகின்
கொன்று அச்சிலம்பு கொணர்க ஈங்கு

என்று கட்டளையிட்டான். பொற்கொல்லன், ஊர் காப்பாளர் பின்வர, கோவலன் இருந்த இடத்திற்குப் போந்து, அவனுக்கு அவர்களைக் காட்டி, "இவர்கள் மன்னவன் ஏவலால் சிலம்பு காண வந்தவர்" என்றான். கோவலன் சிலம்பினைக் காட்டி அதன் செய்திகளையும் கூறினன். வந்தவருள், சிலர், கோவலனது தோற்றமும், மொழியும், ஒழுக்கமும் கண்டு, "[3]இலக்கண முறைமையின் இருந்தோன், கொலைப்படு மகன் அலன்" என்று இயம்பினர். உடனே பொற்கொல்லன், நகைத்து, அவர்கள் மனம் கொள்ளுமாறு தக்க சான்றுகளால் உண்மை காட்டி உறுதி செய்ய முற்பட்டுப் பல கூறலுற்றான்: முதலில்,

மந்திரம், தெய்வம், மருந்தே, நிமித்தம்,
தந்திரம், இடனே, காலம், கருவிஎன்று
எட்டுடன் அன்றே, [4]இழுக்குடை மரபின்
கட்டுண் மாக்கள், துணையெனத் திரிவது,

எனப் பொதுவாகக் கள்வருக்குரிய எண்வகை இயல்புகளைத் தொகுத்துக் கூறி, பின் ஒவ்வொன்றாகச் சொல்லத் தொடங்கி,

---

1. சினையலர் வேம்பன் - கொம்பிடத்தே அலர்ந்த வேப்பமாலையை உடைய பாண்டியன்.

2. கன்றிய கள்வன் - நன்கு பயின்ற திருடன்.

3. இலக்கண முறைமையின் இருந்தோன் கொலைப்படு மகன் அலன்- இங்கே இருந்த இவன் இலக்கணத்தாலும் (மெய் வடிவாலும்) முறைமையாலும் கள்வனென்று சொல்லப்படுவானுமல்லன்; கொல்லப்படுவானுமல்லன்.

4. இழுக்குடை மரபின் கட்டு உண்மாக்கள் - பொல்லா ஒழுக்கத்தினால் களவு செய்து வாழும் மக்கள். கட்டு - களவுசெய்து.

குறிப்பு:—"இனி என் கோதை தன் காற்சிலம்பு கள்வன் கையதாயின் கொன்று கொணர்க எனினும் தன்கண் கொடுங்கோன்மை இன்மை யுணர்க" என்றொரு நயம் காட்டுவர் அடியார்க்குநல்லார்.

மந்திரம் நாவிடை வழுத்துவ ராயின்
[1] இந்திர குமரரின் யாம்காண் குவமோ !
தெய்வத் தோற்றம் [2]தெளிகுவ ராயின்,
கையகத்து உறுபொருள் காட்டியும் பெயர்குவர் ;
மருந்தின் நம்கண் மயக்குவ ராயின்,
[3] இருந்தோம் பெயரும் இடனுமார் உண்டோ ?
நிமித்தம் வாய்த்திடின் அல்லது [4]யாவதும்
புகற்கிலர் அரும்பொருள் வந்துகைப் புகுதினும் ;
[5] தந்திர கரணம் எண்ணுவ ராயின்,
இந்திரன் மார்பத்து ஆரமும் [6]எய்துவர் ;
இவ்விடம் இப்பொருள் கோடற்கு இடம்எனின்,
அவ்விடத்து அவரை யார்காண் கிற்பார் ?
காலம் கருதி அவர்பொருள் கையுறின்
[7] மேலோ ராயினும் விலக்கலும் உண்டோ ?
[8] கருவி கொண்டுஅவர் அரும்பொருள் கையுறின்
இருநில மருங்கில் யார் காண்கிற்பார் ?
இரவே பகலே என்றுஇரண்டு இல்லை ;
[9] கரவிடம் கேட்பின்ஓர் புகலிடம் இல்லை ;

என்று முறையாகச் சொல்லி, கள்வரது அருஞ்செயற்குச் சான்றாக, தென்னவன் தம்பியாகிய இளங்கோ வேந்தன் தோளிலணிந்த வயிர ஆரத்தை ஒரு கள்வன் திருடியதாகப் பொய் புனைந்து கேட்போர் உட்கும் வியப்பும் கொள்ளு மாறு கூறினன். இவற்றை உடனிருந்து கேட்டோருள் ஒருவன், தானும் ஒரு களவு நிகழ்ச்சி கூறி,

---

1. இந்திர குமரர் - தேவர் மக்கள். இந்திரர் - தேவர்.
2. தெளிகுவராயின் - மனத்தே தெளிந்து நினைப்பாராயின்.
3. இருந்தோம் - இருந்த நாம். பெயருமிடம் - புடை பெயருமிடம்.
4. யாவதும் புகற்கிலர் - எளியவிடத்திலும் விரும்பிச் செல்லுவதிலர்.
5. தந்திர கரணம் - களவு நூலில் கூறப்படும் தொழில்கள்.
6. எய்துவர் - எண்ணியவாறே பெறுவர்.
7. மேலோர் - வினை செயல் வகையில் மிக மேம்பட்டோர்.
8. கருவி - கன்னகம், கவைக்கோல், கப்பணம் முதலியன.
9. கரவிடம் - களவின் வகை. ஒருசொல் ; கரவு இடம் எனக் கொள்ளின், "இக்களவு நூலை நாம் கேட்பின் ஓடி ஒளிக்கலாம் இடம் இல்லை என்றுமாம்."

அரிதுஇவர் செய்தி ; அலைக்கும் வேந்தனும் ;
உரியதுஒன்று உரைமின் [1]உறுபடை யீர்என

வினவினன் ; அப்போழ்தில், கல்லாக் களிமகனொருவன் தன் கை வாளை உருவி வீசினன் ; அது கோவலனது கழுத்தில் குறுக்கே வீழ்ந்து ஊடறுத்தது ;

புண்ணுமிழ் குருதி பொழிந்து[2]உடன் பரப்ப,
மண்ணக மடந்தை [3]வான்துயர் கூரக்
காவலன் செங்கோல் [4]வளைஇய வீழ்ந்தனன்
கோவலன்.

" காதலியைக் கொண்டு, கவுந்தியொடு கூடி,
மாதரிக்குக் காட்டி, மனையின் அகன்றுபோய்க்,
கோதில் இறைவனது கூடற்கண், கோவலன்சென்று
ஏதம் உறுதல்[5] வினை "
—தொல். சொல். தெய்வ. மேற்கோள்.

1. உறுபடையீர் - மிக்க வாட்படையை உடையவர்களே.
2. உடன் பரப்ப - எங்கும் பரவ.
3. வான் துயர் கூர - மிக்க துயரத்தை அடைய.
4. வளைஇய - வளைய.
5. காரணம் காரியமாக உபசரிக்கப்பட்டது.

## ௰எ. ஆய்ச்சியர் குரவை

### கருப்பம்

பாண்டியன் கோயிலில் காலை முரசு முழங்கிற்று; அது கேட்ட மாதரி, "இன்று அரண்மனைக்கு நெய்யளக்கும் முறை நமக்கு வந்துளது; ஆதலால் விரைய வருக" எனத் தன் மகள் ஐயையை அழைத்துக்கொண்டே கடைகயிறும் மத்தும் கொண்டுவந்தாள். வந்தவள் பிரையிட்ட குடப்பால் தோயாமல் இருப்பதையும், வெண்ணெய் உருகாமையும் கண்டு அஞ்சி, "நிகழ்வது ஏதோ ஒன்று உண்டு" என்று சொன்னாள். அதன்மேல்,

### [1] கொளு

குடத்துப் பால் உறையாமை(யாலும்), [2] குவி இமிலேற்றின் மடக்கண்ணீர் சோர்த(லாலும்), உறியில் வெண்ணெய் உருகாமை(யாலும்), [3]மறி முடங்கி ஆடாமை(யாலும்), மான் மணி நிலத்து அற்று வீழ்த(லாலும்), வருவதோர் துன்பம் உண்டு என (மாதரி தன் மகள் ஐயைக்குச் சொல்லி, அவளை நோக்கி) மனம் மயங்காதே; மண்ணில் மாதர்க்கு அணியாகிய கண்ணகியும் காண, ஆயர்பாடியில் எரு மன்றத்து மாயவனுடன் [4]தம்முன் ஆடிய வால சரிதை நாடகங்களில், வேல் நெடுங்கண் பிஞ்ஞையோடு ஆடிய குரவை ஆடுதும் யாம், கறவை கன்று துயர் நீங்குக என, என்றாள் (மாதரி).

---

ஆயர் மகளிர் குரவைக்கூத்து அயரும் பகுதி. ஆய்ச்சியர் குரவை எனப் பெயர் பெற்றது. குரவை என்பது எழுவரேனும் ஒன்பதின்மரேனும் கை கோத்தாடும் கூத்து. இங்கே எழுவர் கைகோத்து ஆடுகின்றனர். இப் பகுதியும் கூத்தாற் பெற்ற பெயர் பெற்றது; ஆதலால்தான் அடியார்க்கு நல்லாரும் "இது கூத்தாற் பெற்ற பெயர்" என்றார்.

1. கொளு ;—குரவைக்கூத்து ஆடுவோரது கருத்து. இக் கருத்து எழுவதற்கு வேண்டிய ஏது நிகழ்ச்சி கூறுவது **கருப்பம்** எனப்படும்.

2. குவி இமில் ஏறு - குவிந்த கொண்டையையுடைய எருது.

3. மறி - கன்று.

4. தம்முன் - முன்பிறந்தோனாகிய பலதேவன்.

## [1]எடுத்துக்காட்டு—சுட்டு.

[2] நெற்றிச் செகிலை அடர்த்தாற்கு உரிய,இப்
பொற்றொடி மாதராள் தோள்.

[3] நுண்பொறி வெள்ளை அடர்த்தாற்கே ஆகும், இப்
பெண்கொடி மாதர்தன் தோள்.

வென்றி மழவிடை ஊர்ந்தாற்கு உரியள்இக்
[4] கொன்றையம் பூங்குழ லாள்.

## [5] பெயரிடு

ஆய மகளிர் எழுவரை நிறுத்தி, இவ்வேற்றை ஊர்ந்தானுக்கு இம் மகள் உரியள் என எடுத்துக் காட்டியதற்கேற்ப, அவர் எழுவரையும் வட்டமாக நிறுத்தி, மேற்கிலிருந்து, ஒவ்வொருத்திக்கும் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனப் பெயரிட்டனர். இவ்வாறு பெயர் பெற்ற மகளிருள் குரல் என்பாளை மாயவன் என்றும், இளி என்பாளைப் பலதேவன் என்றும், துத்தம் என்ற பெயருடையாளைப் பின்னை என்றும் கொண்டனர். அதன் பின், மாயவன் பக்கத்தே பின்னையான துத்தமும் தாரமும் நின்றனர்; பலதேவனைச் சேர, உழையும் விளரியும் நின்றனர்; கைக்

---

1. **எடுத்துக்காட்டு** ;-கொல்லேறுகளையும், மகளிரையும் காட்டி, இவ்வேறுகளுள் இதனைத் தழுவினவனுக்கு, இம் மகளிருள் இவள் உரியளாவள் என்று எடுத்து மொழிதல். இது சுட்டிக் கூறலும் சுட்டாது மொழிதலும் என இருவகைப்படும். இங்கே வருபவை சுட்டு. "கொல்லேற்றுக் கோடஞ்சுவானை மறுமையும், புல்லாளே ஆய மகள்" (கலி. 103) என்பது போல்வன சுட்டாது வருவன.

2. நெற்றிச் செகில் - நெற்றியொழிந்த செகில். செகில் - சிவந்த சுட்டி. நெற்றியொழிந்த ஏனை உடற்பகுதி சிவந்திருக்கும் எருதுகளை இக் காலத்தில் செகில் என்று வழங்குகின்றனர்; சில நாடுகளில் இச் சொல் "செகிலை மாடு, செவலை மாடு, செவல் மாடு" எனச் சிதைந்தும் வழங்குகிறது.

3. நுண்பொறி வெள்ளை - நுண்ணிய வெள்ளைப் புள்ளிகளையுடைய எருது.

4. கொன்றையம் பூங்குழல் - கொன்றைப் பழம் போலும் கூந்தல்.

5. **பெயரிடு** - கூத்தாடற்கு நின்ற மகளிர் எழுவருக்கும் பாடும் பாட்டிற் கேற்ப இசையால் பெயர் இடுதல்.

கிளை பின்னைக்கு இடப்பக்கத்தும், விளரி தாரத்துக்கு வலப் பக்கத்தும் நின்றனர். இவ்வாறே யாழிடத்தும் எழுவகை நரம்புகளும் இயைக்கப்பெற்றன. இந் நிலையில் பின்னையின் இடத்தே மாதரி நின்று, தன்னையே பின்னை எனக் கருதி வியப்புற்றாள்.

## [1]கூத்துள் படுதல்

பின்னர், இம் மகளிர் எழுவரும் வட்டமாகக் கைகோத்து நிற்ப, குரலிடத்தே நின்ற மாயவனாகிய ஆய மகள்,

கொல்லைப் புனத்துக் [2]குருந்தொசித்தாற் பாடும்
[3] முல்லைத்தீம் பாணி என்றாள்.

இனி, இவருள், பாட்டெடுப்பவள் குரல் மந்த சுரமாக வும், இளி சம சுரமாகவும் நிற்க, துத்தம் வலிய சுரமாகப் பாடினள். விளரி மந்த சுரமாக எடுத்து, துத்தமாகியவட் குத் துணையாய்ப் பற்றிப் பாடினள். இவர்கள் பாடிய பாட்டு.

## பாட்டு

கன்று [4] குணிலாக் கனிஉதிர்த்த மாயவன்
இன்றுநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
[5] கொன்றையம் தீங்குழல் கேளாமோ தோழீ.

கொல்லையம் சாரல் குருந்தொசித்த மாயவன்
எல்லைநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
[6] முல்லையம் தீங்குழல் கேளாமோ தோழீ.

## குரவை மகளிர் கூற்று

இவ்வாறு பாடி ஆடிய மகளிர் பின்னைப்பிராட்டியின் சிறப்பை எடுத்து ஓதுதற்கு முற்பட்டுச் சில பாடினர்.

---

1. கூத்துள் படுதல் - கூத்துத் தொடங்கி ஆடலுறுதல்.
2. குருந்து - குருந்த மரம்,
3. முல்லைத் தீம் பாணி - முல்லையாகிய இனிய பண்.
4. குணில் - குறுந்தடி, மரப்புள்ளு.
5. கொன்றையம் தீங்குழல் - ஒருவகை ஊது கருவி.
6. முல்லையம் தீங் குழல் - இதுவுமது.

வஞ்சம் செய்தான் [1]தொழுனைப் புனலுள்
நெஞ்சம் கவர்ந்தாள் நிறை[2]என் கோயாம்;
நெஞ்சம் கவர்ந்தாள் நிறையும் வளையும்
வஞ்சம் செய்தான் வடிவுஎன் கோயாம்.

தையல் [3]கலையும் வளையும் இழந்தே
[4]கையில் ஒளித்தாள் முகம்என் கோயாம்;
கையில் ஒளித்தாள் முகம்கண்டு அழுங்கி
[5]மையல் உழந்தான் வடிவுஎன் கோயாம்.

### [6]ஒன்றன் பகுதி

[7]கதிர்திகிரி யால்மறைத்த கடல்வண்ணன் இடத்துளாள்,
[8]மதிபுரையும் நறுமேனித் தம்முனோன் வலத்துளாள்,
[9]பொதிஅவிழ் மலர்க்கூந்தல் பின்னைசீர் புறங்காப்பார்,
[10]முதுமறைதேர் நாரதனார் முந்தைமுறை நரம்புஉளர்வார்.

### [11]ஆடுநர்ப் புகழ்தல்

மாயவன் [12]தம் முன்னினொடும்
வரிவளைக்கைப் பின்னையொடும்
கோவலர்தம் சிறுமியர்கள்
குழற்கோதை [13]புறஞ்சோர,

---

1. தொழுனை - யமுனை யாறு.
2. என்கோ யாம் - என்று புகழக் கடவேமோ யாம்.
3. கலை - புடைவை.
4. கையில் ஒளித்தாள் முகம் - இரு கையையும் விரித்து முகத்தை மறைத்துக் கொண்டாள்.
5. மையல் - வேட்கையால் எய்தும் மயக்கம்.
6. **ஒன்றன் பகுதி** - ஒற்றைத் தாளத்திற் பாடும் பகுதி.
7. கதிர் - ஞாயிறு. திகிரி - ஆழிப்படை.
8. மதி புரையும் மேனி - திங்களைப்போல வெண்ணிறமுடைய உடம்பு. தம்முனோன் - பலதேவன்.
9. பொதி - அரும்பு. பின்னை சீர் புறம் காப்பார் - பின்னையின் தாளத்தை ஒற்றறுத்துத் துணையாகப் பாடுவது குறித்து.
10. முதுமறை - பழைய மறை. முந்தை முறை நரம்பு - முதல் நரம்பைப் பின்னையின் ஒற்றைத் தாளப் பண்ணுக்குத் துணையாக நாரதர் நரம்பிசைக்கின்றார் என்பதாம்.
11. **ஆடுநர்ப் புகழ்தல்** - கூத்தாடுபவரைப் புகழ்தல்.
12. தம் முன்னினொடும் - பலதேவனோடும்.
13. புறம் சோர - முதுகிலே கிடந்தசைய.

ஆய்வளைச் சீர்க்கு அடிபெயர்த்திட்டு
அசோதையார் தொழுதேத்தத்
[1] தாதெருமன் றத்தாடும்
குரவையோ தகவுடைத்தே.

இவ்வாறு ஆடியபின், அம் மகளிர் அனைவரும், "இனி நாம், [2]உள்வரிப் பாணிகொண்டு அம் மாயவனைப் போற்றுவோம், வம்மின்" என்று கூறிக்கொண்டு, அதனைப் பாடினர்.

## [3]உள்வரி வாழ்த்து

[4] கோவா மலையாரம், [5]கோத்த கடலாரம்
தேவர்கோன் பூணாரம் தென்னர்கோன் மார்பினவே;
தேவர்கோன் பூணாரம் பூண்டான் [6]செழுந்துவரைக்
[7] கோகுல மேய்த்துக் குருந்து ஒசித்தான் என்பரால்.

பொன்[8]இமயக் கோட்டுப் புலிபொறித்து மண்ணாண்டான்
மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன்
மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன்
பொன்னம் திகிரிப் பொருபடையான் என்பரால்.

[9] முந்நீரினுள் புக்கு
[10] மூவாக் கடம்புஎறிந்தான்

---

1. தாது எரு மன்றம் - நுண்ணிய புழுதி படிந்த மன்றம்.

2. உள் வரிப் பாணி - உள்வரிப் பாட்டு. உள் வரி யாடுவோர் பிறிதோர் உருவம் கொண்டும் கொள்ளாதும் ஆடுவர்; ஈண்டு இவ் வாயர் மகளிர் வேறுருவம் கொள்ளாது நின்றே ஆடி மாயவனை வாழ்த்துகின்ற பாட்டு.

3. **உள்வரி வாழ்த்து**-"உள்வரிப்பாணி" என்றவிடத்துக் கூறினும்.

4. கோவா மலையாரம் - பொதியில் மலையிடத்துப் பெற்ற கோக்கலாகாத சந்தனம்; ஆரம் - சந்தனம்.

5. கோத்த கடல் ஆரம் - கோக்கக்கூடிய கடலிற் பெற்ற முத்து.

6. செழுந்துவரை - வளம் மிக்க துவரை நகர்.

7. கோகுலம் - ஆநிரை.

8. இமயக் கோடு - இமயவரையின் உச்சி.

9. முந்நீர் - கடல். மண்ணைப் படைத்தலும், அழித்தலும், காத்தலும் செய்யும் கடற்கு ஆகுபெயர்.

10. மூவாக் கடம்பு வஞ்சத்தால் நிற்கின்றதாகலின், மூத்தலின்றி ஒருநாள்போல நின்ற கடம்பு.

மன்னர்கோச் சேரன்
[1] வளவஞ்சி வாழ்வேந்தன்
மன்னர்கோச் சேரன்
வளவஞ்சி வாழ்வேந்தன்,
[2] கன்னவில்தோள் ஓச்சிக்
கடல்கடைந்தான் என்பரால்.

### [3] முன்னிலைப் பரவல்

[4] வடவரையை மத்தாக்கி
வாசுகியை நாணாக்கிக்
கடல்வண்ணன் பண்டு ஒருநாள்
கடல்வயிறு கலக்கினையே;
கலக்கியகை, அசோதையார்
கடைகயிற்றால் கட்டுண்கை,
[5] மலர்க்கமல உந்தியாய்,
மாயமோ, மருட்கைத்தே.

திரண்டு அமரர் தொழுதேத்தும்
திருமால்நின் செங்கமல
இரண்டடியால் மூவுலகும்
[6] இருள்தீர நடந்தனையே;
நடந்தஅடி, பஞ்சவர்க்குத்
தூதாக நடந்தஅடி,

---

1. வளவஞ்சி - வளம் மிகுந்த வஞ்சிமா நகர்.
2. கல்நவில் தோள் - மலையென்று சொல்லப்பட்ட தோள்.
3. **முன்னிலைப் பரவல்**—மேல் உள்வரி வாழ்த்தில் மாயவனைத் தமிழ் வேந்தரோடு இயைபு படுத்திப் படர்க்கையில் வைத்து வாழ்த்தி, இனி அம் மாயவனை முன்னிலைப்படுத்திப் பரவுவது.
4. வடவரை - மேருமலை.
5. மலர்க்கமல உந்தி - தாமரைப் பூப்போலும் கொப்பூழ்.
6. இருள் - துன்பமாகிய இருள்.

குறிப்பு: இவ்வுள்வரி வாழ்த்தினுள், "சேரனை முற்கூறாது பாண்டியனை முற்கூறியது என்னையெனின், இது மதுரைக்காண்ட மாதலானும், இக் காப்பியம் செய்தவர் விழைவு வெறுப்பற்ற சேரமுனியாதலானும், முடி கெழு வேந்தர் மூவர்க்கும் உரியது எனச் சாத்தர் கூறினமையானும் என்க" என்பர் அடியார்க்குநல்லார்.

[1] மடங்கலாய் மாறு அட்டாய்,
　　மாயமோ, மருட்கைத்தே.

### படர்க்கைப் பரவல்

மூவுலகும் ஈரடியால்
　　[2] முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசேவடி [3]சேப்பத்
　　தம்பியொடும் கான்போந்து
[4] சோவரணும் போர்மடியத்
　　தொல்இலங்கை [5]கட்டழித்த
சேவகன்சீர் கேளாத
　　செவி என்னசெவியே;
திருமால்சீர் கேளாத
　　செவிஎன்ன செவியே.

[6] மடந்தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப்
[7] படர்ந்து ஆரணம் முழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாஎன்ன நாவே;
நாராயணா என்னா நாஎன்ன நாவே.

இவ்வண்ணம் குரவை பாடிய ஆயமகளிர், ஒன்றுகூடி, நின்று,

யாம்,

[8] கோத்த குரவையுள் ஏத்திய தெய்வம்நம்

---

1. மடங்கலாய் மாறு அட்டாய் - நரசிங்கமாய் மாறுபட்ட இரணியனைக் கொன்றவனே.

2. முறை நிரம்பாவகை - ஓர் அடி குறைபடும்படியாக.

3. சேப்ப - சிவக்க.

4. சோ அரண் - வாணனது சோ என்னும் அரண்.

5. கட்டு - காவல்.

6. மடம் தாழும் - அறிவின்மை பொருந்திய. அறிவின்மை தனக்கே யுரிய இடமாகத் தங்கிய.

7. படர்ந்து - பின்னே தொடர்ந்து.

8. கோத்த குரவை - தொடுத்த குரவைக் கூத்து.

[1] ஆத்தலைப் பட்டதுயர் தீர்க்க; [2]வேந்தர்
மருள வைகல் வைகல்மாறு அட்டு
வெற்றி விளைப்பது மன்னே; கொற்றத்து
[3] இடிப்படை வானவன் முடித்தலை உடைத்த
[4] தொடித்தோள் தென்னவன் கடிப்பு இகும் முரசே

என்று பாவி நீங்கினர்.

1. ஆ தலைப்பட்ட துயர் - ஆனிரைகளைப்பற்றிய பிணி.

2. வேந்தர் மருள - பகையரசர் அறிவு மயங்க. வைகல வைகல் - நாடோறும்.

3. இடிப்படை வானவன் - இடியைப் படையாகவுடைய இந்திரன்.

4. தொடித்தோள் தென்னவன் - தொடியணிந்த தோளையுடைய பாண்டியன்.

## ௰அ. துன்ப மாலை

இவ்வண்ணம், ஆனிரைகட்குண்டாய தீக்குறி கண்டு, குரவையாடிய ஆய்ச்சியர் வையைக்கு நீராடப் போயினர்; மாதரியும் நீராடிப், பூவும் புகையும் கொண்டு திருமாலின் திருவடி பரவப்போனாள். அப்போது அந் நகர்க்குச் சென்றிருந்த ஆயர்மகள் ஒருத்தி, கோவலனுக்குற்ற தீங்கு கண்டு அதனைத் தெரிவிக்க மிக்க விரைவாக வந்தாள். வரும்போது, ஆய்ச்சியர் கூட்டத்தே கண்ணகி இருப்ப, அவளது அழகும் இளமையும், தனிமையும் கண்டு நெஞ்சழிந்து ஆற்றாது, வாயாற் சொல்லமாட்டாது, நீராடிப் போந்த மகளிர்க்குக் குறிப்பாகக் கூறினள். அதன் உண்மை கண்ணகிக்குத் தெரிந்தது. உடனே,

[1] எல்லாவோ,
காதலற் காண்கிலேன், கலங்கி[2] நோய் கைம்மிகும்;
[3] ஊதுலை தோற்க உயிர்க்கும் என்நெஞ்சு, அன்றே;
ஊதுலை தோற்க உயிர்க்கும் என்நெஞ்சு ஆயின்,
[4] ஏதிலார் சொன்னது எவன் வாழியோ, தோழீ.

[5] தஞ்சமோ தோழீ, தலைவன்வரக் காணேன்;
வஞ்சமோ உண்டு,மயங்கும் என்நெஞ்சு அன்றே;
வஞ்சமோ உண்டு,மயங்கும் என்நெஞ்சு, ஆயின்,
[6] எஞ்சலார் சொன்னது எவன்வாழியோ, தோழீ.

என்று கண்ணகி கதறிக் கூறினள். அது கேட்ட அவ்வாயர் மகள் பேரவலம் உற்று,

---

1. எல்லா - ஏடீ தோழி. ஓ - இரக்கக் குறிப்பு.
2. நோய் கைம்மிகும் - நோய் மிகுகின்றது.
3. ஊதுலை தோற்க - கொல்லன் உலையில் ஊதும் துருத்தியும் தோற்கும்படி.
4. ஏதிலார் - இந்த ஆய்ச்சியர். சொன்னவளையும் கேட்கின்ற ஏனை ஆய்ச்சியரையும் ஏதிலார் என்கின்றாள். நெஞ்சு கலங்கி, நோய் கைம்மிகும்; உயிர்க்கும் என்று முடிக்க.
5. தஞ்சமோ - எளிதன்று. தோழி என்றது ஐயையை.
6. எஞ்சலார் - அயலார்.

அரசுறை கோயில் அணியார் [1]ஞெகிழம்
[2] கரையாமல் வாங்கிய கள்வனும் என்றே ;
கரையாமல் வாங்கிய கள்வனும் என்றே
[3] குரைகழல் மாக்கள் [4]கொலைகுறித் தனரே ;

என்று சொன்னாள். அதனைக் கேட்டாளோ இல்லையோ, கண்ணகி,

பொங்கி எழுந்தாள், விழுந்தாள், [5]பொழிகதிர்த்
திங்கள் முகிலோடும் சேண்நிலம் கொண்டெனச்
செங்கண் சிவப்ப அழுதாள் ; தன் [6]கேள்வனை
[7] எங்கணு என்று இனைந்து ஏங்கி [8]மாழ்குவாள்.

இன்புறுதம் கணவா
[9]இடர்எரி அகம்மூழ்கத்
துன்புறுவன நோற்றுத்
துயர்உறு மகளிரைப்போல்
[10] மன்பதை அலர்தூற்ற
மன்னவன் தவறிழைப்ப
அன்பனை இழந்தேன்யான்
[11]அவலம்கொண்டு அழிவலோ.

---

1. ஞெகிழம் - சிலம்பு.
2. கரையாமல் - சிறிதும் வருத்தமின்றி ; ஓசை செய்யாமல். வாங்கிய - தனதாக்கிக்கொண்ட.
3. குரைகழல் மாக்கள் - ஒலிக்கும் வீரக்கழலையுடைய படை வீரர்.
4. கொலை குறித்தனர் - கொலை செய்யக் குறித்துவிட்டார்கள். கொன்றார்கள் எனின் இவளுயிர்க்கு இறுதி பயக்கும் என்று கருதி இவ்வாறு கூறினள்.
5. முகத்திற்கும் குலைந்த கூந்தலுக்கும் திங்களும் முகிலும் உவமை. சேண்நிலம் - பெரிய நிலம்.
6. கேள்வனை - கொழுநனை.
7. எங்கணு - எவ்விடத்தில் உள்ளாய்.
8. மாழ்குவாள் - மயங்குபவள்.
9. இடர் எரி - துன்பத்தைச் செய்யும் தீ.

துன்புறுவன - கைம்பெண்கள் மேற்கொள்ளும் நோன்புகள்: பழைய சோறு, எட்சாந்து, புளிச்சோறு, வேளைக்கீரை இவை உணவாக. பரல்கள் பரப்பிப் பாய் இன்றித் துயில்வது முதலாயின.

10. மன்பதை - நன்மக்கள்.
11. அவலம் - துன்பம்.

தம்முறு பெருங்கணவன்
தழல்எரி அகமூழ்கக்
[1] கைம்மைகூர் துறைமூழ்கும்
[2]கவலைய மகளிரைப்போல்,
[3] செம்மையின் இகந்தகோல்
தென்னவன் தவறிழைப்ப,
இம்மையும் [4]இசைஒரீஇ
இணைந்து ஏங்கி அழிவலோ.

இவ்வண்ணம் வாய்விட்டுக் கதறிப் புலம்பிய கண்ணகி, ஏனைமகளிர் அனைவரையும் அழைத்து, "ஆயர்மகளிரே, கேண்மின்" என்று சொல்லி, வானத்தைச் சுட்டிப் பகலவனை அழைத்து,

[5] பாய்திரை வேலிப் படுபொருள் நீ அறிதி ;
[6] காய்கதிர்ச் செல்வனே ! கள்வனோ என்கணவன் ?

என்றாள். உடனே, அங்கே இருந்தவர் அனைவரும் தெளியக் கேட்கும்படியாக,

கள்வனோ அல்லன் ; கருங்கயல்கண் மாதராய் !
[7] ஒள்ளெரி உண்ணும் இவ்வூர்

என்று வானத்தே ஒரு குரல் எழுந்து இசைத்தது.

---

1. கைம்மை - கைம்பெண்கட்குரிய நோன்புகள்.

2. கவலைய மகளிர் - கவலையையுடைய மகளிர்.

3. செம்மை - நடுவுநிலைமை.

4. இசைஒரீஇ - நல்ல பெயர் (புகழ்) நீங்கி. இம்மையும் - இப் பிறப்பின்கண்ணும் ; இசைஒரீஇ எனவே வசைபெற்று அஃதாவது கள்வன் மனைவி என்றும், கைம்பெண் என்றும் இப்பெயர் படைத்து.

5. பரந்த கடலை எல்லையாகவுடைய உலகில் உண்டான பொருள் எல்லாம்.

6. காய்கதிர்ச் செல்வன் - ஞாயிறே.

7. ஒள் எரி - நின் ஏவல் கேட்கும் எரி. இவ்வூர் - இது சொன்ன ஊர்.

## ௰௯. ஊர்சூழ் வரி

இவ்வண்ணம் பகலோன், "நின் கணவன் கள்வன் அல்லன்" என்று சொன்னது கேட்டதும், கண்ணகி, அவ்விடத்து நில்லாது, தன்னிடத்தே இருந்த மற்றைச் சிலம்பைக் கையில் ஏந்திக்கொண்டு,

முறையில் அரசன்தன் ஊர்இருந்து வாழும்
நிறையுடைப் பத்தினிப் பெண்டிர்காள், [1]ஈதுஒன்று ;
பட்டேன் படாத துயரம் ; படுகாலை
உற்றேன் [2]உறுதது உறுவனே, ஈதுஒன்று ;
கள்வனோ அல்லன் கணவன், என் காற்சிலம்பு
கொள்ளும் விலைப்பொருட்டால்[3]கொன்றாரே, ஈதுஒன்று ;

என்று அரற்றிப் பின்னும் கூறுவாள், "இம் மகளிர் கண்ணெதிரே யான் இப்போதே சென்று என் காதற்கணவனைக் காண்பேன் ; கண்டு, அவன் வாயால் தான் தீதிலன் என்ற நல்லுரையைக் கேட்பேன் ; கேளாது போவேனேல், நீவிர், நும்மை யான் வறிதே பழிதூற்றினேன் என்று என்னை இகழ்மின்" என்று சொல்லிப் புலம்பினாள். இவ்வாறு அழுது செல்லும் இவளை மதுரை நகரத்து மக்கள் கண்டு கழிபேர் இரக்கம் கொண்டு,

[4] களையாத துன்பம்
இக்காரிகைக்குக் காட்டி

---

ஊர் சூழ்வரி - இதனகண் வரும் வரி, கூத்தன்று ; இசைத்தமிழ் வகையிற் கூறப்படும் வரிப்பாட்டு.

1. ஈது ஒன்று - இது அதன் இணைச்சிலம்பு.

2. உறுதது - இன்னும் எய்தாத சாவு நோய்.

3. கொன்றாரே - கொன்றாரே எனப் பன்மையால் கூறினாள், அரசனோடு அமைச்சரையும் கருதி. ஈண்டு உரைகாரர் ஏகாரத்தின் இசையாற்றலால் (தொனி) பொருள் கூறும் திறம் உணர்க.

"என்காற் சிலம்பு என்றாள் : தான் அரசன், யான் ஒரு வணிகன் மனைவி, என் காலணியின் ஒன்று பெற்ற விலை தராமல் கள்வன் என்று ஒரு பெயரிட்டுக் கொன்றார்களே, இஃதோர் அநியாயம், காண்மின்".—அடி. நல்லார்.

4. களையாத - நீங்காத.

வளையாத செங்கோல்
வளைந்தது இதுஎன்கொல்?
மன்னவர் மன்னன்
[1] மதிக்குடை வாள்வேந்தன்
தென்னவன் [2]கொற்றம்
சிதைந்தது இதுஎன்கொல்?
செம்பொன் சிலம்புஒன்று
கையேந்தி நம்பொருட்டால்
[3] வம்பப் பெருந்தெய்வம்
வந்தது இதுஎன்கொல்?
[4] ஐயரி உண்கண்
அழுதேங்கி அரற்றுவாள்
தெய்வம் உற்றுள்போலும்
[5] தகையள் இது என்கொல்

என்பன பல சொல்லி ஏங்கி வருந்தினர். கண்ணகி, தன் கணவன் உடலைக் காண்டற்குச் செல்ல, சிலர் அவட்கு அவன் வெட்டுண்டு கிடந்த இடத்தையும், அவனது உடலையும் காட்டினர். கண்ணகி அதனைக் கண்டாள்; செங்கதிரோன் மேலைத் திசையில் மறைந்தான்; மெல்லிய இருள் பரந்தது. கோவலன் வீழ்ந்து கிடந்த இடம், அவன் உடலிலிருந்து ஒழுகிய குருதியால் நனைந்து கிடந்தது. காலையில் தன் கணவனைத் தழுவி, அவன் தந்த மாலையைத் தன் கூந்தலில் சூடிக்கொண்ட கண்ணகி, அன்று மாலையில் மெய்யெல்லாம் குருதிவார வெட்டுண்டிருந்த அவனைக் கண்டு காணுக் கடுந் துயரம் கண்டாள். பின்பு, அவனைத் தழுவி, ஓவெனக் கதறி,

---

1. மதிக்குடை - திங்கள் போன்ற வெண்குடை.
2. கொற்றம் - வெற்றி.
3. வம்பப் பெருந்தெய்வம் - புதுமையையுடைய பெரிய தெய்வம்; கற்புக் கடவுள்.
"ஒன்று கையேந்தி" என்றது, இஃது அதன் இணைபோலும் என்பது கருத்து.
4. ஐ அரி உண் கண் — வியப்புண்டாகுமாறு செவ்வரி பரந்த மையுண்ட கண்ணையுடைய இவள்.
5. தகையள் - தகைமையுடையவள்.

என்உறு துயர்கண்டும் [1]இடர்உறும் இவளெனனீர்,
[2]பொன்னுறு நறுமேனி [3]பொடிஆடிக் கிடப்பதோ!
[4]மன்னுறு துயர்செய்த [5]மறவினை அறியாதேற்(கு)
[6]என்உறு வினைகாணு இதுஎன உரையாரோ!

யாரும்இல் மருள்மாலை இடர்உறு தமியேன்முன்,
[7]தார்மலி மணிமார்பம் தரைமூழ்கிக் கிடப்பதோ!
பார்மிகு பழிதூற்றப் பாண்டியன் தவறிழைப்ப,
[8]ஈர்வதோர் வினைகாணு இதுஎன உரையாரோ!

இவ்வாறு புலம்பினவள், நாட்டில் செங்கோல் பிழையா தாயின் அந் நாட்டில் நிறையுடைய பெண்டிரும், சான்றோரும் தெய்வமும் இருப்பர்; இந் நாட்டில் அவர்கள் இல்லையோ அல்லது உண்டோ என்பாள்போலப் "பெண்டிரும் உண்டு கொல்? சான்றோரும் உண்டு கொல்? தெய்வமும் உண்டு கொல்" எனச் சொல்லி அழுதாள். பின்பு, அவன் உடலை எடுத்துத் தன் மார்போடு தழுவினபோது, அவன் உயிர் பெற்றான்போலத் தெளிந்து நின்று, அவள் முகத்தைத் தடவி, "மிகவும் [9]கன்றியது" என அவள் கண்ணீரைக் கையால் துடைத்தான். கண்ணகி அவன் திருவடியில் வீழ்ந்து வணங்கி, அவன் அடிகளைக் கையால் பற்றினள். அவன் தான் இருந்த உடலிலிருந்து நீங்கிச் சூழ நின்ற இறையவரோடு தான் ஓர் இறையவனாய் நின்று, "உண் கண்ணாய், நீ ஈண்டே இருக்க" எனச் சொல்லிவிட்டுப் போனான். கண்ணகி ஆற்றாளாய்,

---

1. இவள் இடர் உறும் - இவள் துன்ப முறுவாள். என்னீர் - என்று நினைக்கின்றிலீர்.

2. பொன்னுறுமேனி - பொன்போன்ற மேனி.

3. பொடி ஆடி - புழுதிபடிந்து.

4. மன்உறு - மன்னனால் செய்யப்பட்ட.

5. மறவினை - கொலைச் செயல்.

6. இது காணு என் உறுவினை என உரையாரோ - யான் எய்தும் இத் துயரைக்கண்டு இதுயான் முற்பிறப்பில் செய்த தீவினைப் பயன் என்று சொல்லமாட்டார்களோ.

7. தார்மலி மணிமார்பம் - மாலையணிந்த அழகிய மார்பு.

8. ஈர்வதோர் வினை - வெட்டுவிப்பதொரு தீவினை.

9. கன்றியது - கசங்கி வாடியது.

மாயம்கொல், மற்றுஎன்கொல்,
[1] மருட்டியதோர் தெய்வம்கொல்
போய்எங்கு நாடுகேன்;
[2] பொருளுரையோ, இதுஅன்று;
[3] காய்சினம் தணிந்தன்றிக்
கணவனைக் கைகூடேன்;
[4] தீவேந்தன் தனைக்கண்டு
இத்திறம்கேட்பல் யான்என்றாள்.

என்று இவ்வகையில் தனக்குள் சொல்லியவள் எழுந்து நின்றாள். முன்பு காவிரிப்பூம் பட்டினத்துத் தான் கண்ட கனவு அவள் நினைவிற்கு வந்தது. தன் கண்ணீரை மீட்டும் துடைத்துக்கொண்டு அவள் பாண்டிவேந்தன் கோயில் வாயிலை யடைந்தாள்.

---

1. மருட்டியது - மயக்கியது; இருதுண்டாகிய உடல்கூடி உயிர்பெற்றது பற்றி "தெய்வம் கொல்" என்கின்றாள்.

2. பொருளுரையோ அன்று - தன் பின் வா என்று சொல்லாமையால் பொருளாகக் கொள்ளக்கூடிய உரையன்று என்றபடி.

3. காய் சினம் - மிக்க சினம்.

4. தீ வேந்தன் - கொடிய வேந்தன்.

## உ௬. வழக்குரை காதை

கோப்பெருந்தேவி அன்றிரவு ஒரு தீக்கனாக் கண்டாள். அதன்கண், அரசர் பெருமானது செங்கோலும் வெண்குடையும் நிலத்திலே மறிந்து வீழ்ந்தன; அரசவாயிலில் உள்ள மணியோசை கேட்க உள்ளம் நடுங்கிற்று; நான்கு திசையும் அதிர்ந்தன; இரவில் வானவில்லிட்டது; பகலில் விண்மீன்கள் தோன்றின. ஆகவே, இதனால் வருவதோர் துன்பம் உண்டு என அரசமாதேவி உணர்ந்து, இதனை வேந்தனுக்கு உணர்த்த வேண்டும் என்றாள். என்றதும்,

> [1] ஆடி ஏந்தினர் கலன் ஏந்தினர்
> [2] அவிர்ந்து விளங்கும் அணி இழையினர்;
> [3] கோடி ஏந்தினர், பட்டு ஏந்தினர்;
> [4] கொழுந் திரையலின் செப்பு ஏந்தினர்;
> [5] வண்ணம் ஏந்தினர், சுண்ணம் ஏந்தினர்,
> [6] மான்மதத்தின் சாந்து ஏந்தினர்,
> கண்ணி ஏந்தினர், [7]பிணையல் ஏந்தினர்,
> கவரி ஏந்தினர், தூபம் ஏந்தினர்;

இவ்வண்ணம் மங்கலமகளிர் மங்கலம் ஏந்திவர, வேறு பலர், "ஈண்டு நீர் வையம் காக்கும் பாண்டியன் பெருந்தேவி வாழ்க" என வாழ்த்தி இயம்ப, ஆயத்தாரும் காவலரும் அவள் திருவடி பரவிவர,

> கோப்பெருந்தேவி சென்றுதன்
> தீக்கனாத் திறம்உரைப்ப,
> [8] அரிமான் ஏந்திய அமளிமிசை இருந்தனன்,
> [9] திருவீழ் மார்பின் தென்னவர் கோவே.

---

1. ஆடி - கண்ணாடி.
2. அவிர்ந்து - ஒளிவிட்டு.
3. கோடி - துகில்.
4. கொழுந் திரையல் - வெற்றிலைச் சுருள். செப்பு - தட்டு.
5. வண்ணம் - வண்ணப் பொடி (மஞ்சட் பொடி)
6. மான்மதம் - கத்தூரி.
7. பிணையல் - பூமாலை.
8. அரிமான் ஏந்திய அமளி - அரியாசனம்.
9. திருவீழ் மார்பின் தென்னவர் - திருமகள் விரும்புகின்ற மார்பினையுடைய பாண்டியர்.

இஃது இங்ஙனம் இருக்க, வேந்தன் கோயில் வாயிலில் வந்து நின்ற கண்ணகி, வாயிலோனை நோக்கி,

> வாயிலோயே, வாயிலோயே,
> [1] அறிவு அறைபோகிய [2]பொறிஅறு நெஞ்சத்து
> [3] இறைமுறை பிழைத்தோன் வாயிலோயே.
> [4] இணையரிச் சிலம்புஒன்று ஏந்திய கையள்,
> கணவனை இழந்தாள், கடையகத்தாள், என்று
> அறிவிப்பாயே அறிவிப்பாயே

என்று சொன்னாள். அது கேட்ட வாயிலோன் அரசன் திருமுன் சென்று, அடி வணங்கி நின்று,

> வாழிஎம் கொற்கை வேந்தே வாழி,
> [5] 'தென்னம் பொருப்பின் தலைவ வாழி
> செழிய வாழி தென்னவ வாழி,
> பழியொடு படராப் [6]பஞ்சவ வாழி

எனப் பலமுறையும் வணங்கி வாழ்த்தி, கண்ணகியின் தோற்றம் அவன் நெஞ்சில் கொற்றவையை நினைப்பித்தமையின், உருண்டு தெளிந்து,

> [7] செற்றனள் போலும் செயிர்த்தனள் போலும்
> பொன்தொழிற் சிலம்பு ஒன்று ஏந்திய கையள்,
> கணவனை இழந்தாள் [8] கடையகத்தாளே,
> கணவனை இழந்தாள் கடையகத்தாளே

---

1. அறிவு அறைபோகிய - அறிவு கீழற்றுப்போன.
2. பொறிஅறு - நல்வினையில்லாத.
3. இறை முறை - அரசுமுறை,
4. இணையரிச் சிலம்பு - இரண்டாகிய அரியிட்ட சிலம்புகளுள். இணையரி - இணைந்த அரிகளையிட்ட சிலம்பு என்றுமாம்.
5. தென்னம் பொருப்பு - தெற்கில் உள்ள மலை ; பொதியில் மலை.
6. பஞ்சவ - பாண்டியனே.
7. செற்றனள் - முகக் கோட்டம் உடையள். செயிர்த்தனள் - மனத்தே சினம் உடையவள் ;

"செற்றனள் போலும் செயிர்த்தனள் போலும் - மாற்சரிய முடையாள் போலும் ; மிக்க கோபமுடையாள் போலும் என்றுமாம்."—பழைய வுரை.

8. கடையகத்தாள் - வாயிற் கடையில் வந்துள்ளாள்.

என்று தெரிவித்தான். அற்றேல், அவளை ஈண்டுவர விடு விக்க என அரசன் பணித்தனன். வாயிலோன் வந்து, கோயிலைக் காட்டினன். கண்ணகி அரசன் திருமுன் சென்று சேர்ந்தனள். அவளது அழுகைக் கோலத்தைக் கண்ட அரசர் பெருமான்,

[1] நீர்வார் கண்ணை எம்முன் வந்தோய்,
யாரையோ நீ [2] மடக்கொடியோய், என

வினவினன். அதுகேட்ட கண்ணகி, சினம் மாறாது,

[3] தேரா மன்னா! செப்புவது உடையேன் :
[4] எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப்
[5] புள்ளுறு புன்கண் தீர்த்தோன் ; அன்றியும்,
வாயில் கடைமணி நடுநா நடுங்க
[6] ஆவின் கடைமணி உகும்நீர் நெஞ்சுசுடத் தான்தன்
அரும்பெறல் புதல்வனை [7] ஆழியில் மடித்தோன்
[8] பெரும்பெயர்ப் புகார் என்பதியே ; அவ்வூர்
[9] ஏசாச் சிறப்பின் இசைவிளங்கு பெருங்குடி
மாசாத்து வாணிகன் மகனை யாகி,
வாழ்தல் வேண்டி, [10] ஊழ்வினை துரப்ப,
சூழ்கழல் மன்னா! நின்நகர்ப் புகுந்து இங்கு
என்காற் சிலம்பு [11] பகர்தல் வேண்டி நின்பால்

---

1. நீர்வார் கண்ணை - நீர் சொரியும் கண்களையுடையாய்,
2. மடக்கொடியோய் - இளைய கொடிபோல்பவளே.
3. தேரா மன்னா - மெய்ம்மையை ஆராயாத மன்னனே.
4. எள் அறு சிறப்பு - குற்றமற்ற சிறப்பு.
5. புள் - புறு. புன்கண் தீர்த்தோன் - துன்பத்தைத் தீர்த்த சிபி மன்னன்.
6. ஆவின் கடைமணி - பசுவின் கண்ணின் மணிக்கடை.
7. ஆழியில் மடித்தோன் - தேராழியின் கீழ்ப்படுத்திக் கொன்று நீதி செய்த மனுவேந்தன்.
8. பெரும் பெயர்ப் புகார் - மிக்க சிறப்பினையுடைய புகார். என் பதி - எனக்குப் பதி.
9. ஏசாச் சிறப்பு - வசையில்லாத புகழ்.
10. ஊழ்வினை துரப்ப - முன்செய்துள்ள ஊழ்வினை செலுத்த.
11. பகர்தல் வேண்டி - விற்றல்வேண்டி வந்து.

கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
கண்ணகி என்பது என் பெயரே

என்று மொழிந்தாள். அம் மொழியின் திட்பமும் பெண்மை நலமும் உள்ளவாறு உணர்ந்த பாண்டியன், மீட்டும், அவளை நோக்கி,

......பெண் அணங்கே,
கள்வனைக் [1]கோறல் கடுங்கோல் அன்று,
[2]வெள்வேல் கொற்றம் காண்

என்றான். அச் சுடுசொல் செவிப்புலம் புகுதலும் உளம் வெதும்பிய கண்ணகி,

[3]நல்திறம் படராக் கொற்கை வேந்தே
என்கால் பொற்சிலம்பு மணியுடை அரியே

என்றாள். உடனே அரசன் மருண்டு,

தேமொழி! உரைத்தது [4]செவ்வை நன்மொழி!
[5]யாம்உடைச் சிலம்பு முத்துடை அரியே

எனச் சொல்லி அதனைக் கொணர்ந்து தருக என ஏவலாளரைப் பணித்தான். சிறிதுபோதில் அச் சிலம்பு கொணர்ந்து வைக்கப்பட்டது. கண்ணகி தன் சிலம்பை எடுத்து நிலத்தில் எறிந்து உடைத்தாள். அதனுள் இருந்த மணி தெறித்து அரசன் வாய்முதல் பட்டு விழுந்தது. கண்டான் அரசன். வெண்குடை தாழ, செங்கோல் தளர, தமிழேழ மொழியும் தன் வாயைத் திறந்து,

பொன்செய் கொல்லன் தன்சொல் கேட்ட
யானோ அரசன்? யானே கள்வன்;
[6]மன்பதை காக்கும் தென்புலம் காவல்

---

1. கோறல் - கொல்லுதல்.
2. வெள்வேல் கொற்றம் - வெள்ளிய வேலேந்தும் அரசரது நீதி முறை.
3. நல்திறம் படரா - நல்ல நீதியின் பக்கத்தில் செல்லாத; நல்ல நீதியின் பகுதியை நினையாத என்றுமாம்.
4. செவ்வை நன்மொழி - செவ்விய நல்ல சொல்லாகும்.
5. யாம் உடைச் சிலம்பு - எம்முடைய சிலம்பு. முத்துடை அரி - முத்துக்களைப் பரலாக உடையது.
6. மன்பதை - மக்கள். தென்புலம் - தமிழ்நாடு.

[1]என் முதல் பிழைத்தது; கெடுக என் ஆயுள் என மயங்கி வீழ்ந்தான். அது கண்ட கோப்பெருந்தேவி உள்ளம் குலைந்து நடுநடுங்கி, [2]"கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்" என்று தன் கணவன் திருவடியிணைகளைத் தொழுது சோர்ந்து வீழ்ந்தாள்.

1. என் முதல் - என்னைத் தொடங்கி.

2. கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல் - தந்தை தாய் முதலாயினாரை இழந்தோர்க்குப் பிறர்தம்மைத் தந்தையென்றோ தாய் என்றோ சொல்லித் தேற்றலாம்; கணவனை இழந்தோர்க்கு அவ்வாறு கூறலாகாது; அதனால் காட்டுவது யாதும் இல்லை என்பதாம்.

## உக. வஞ்சின மாலை

மன்னவன் மயங்கி வீழக்கண்டு சோர்ந்து வீழ்ந்த கோப்பெருந்தேவி ஒருவாறு தெளிவடைந்தாள். அவளைக் கண்ட கண்ணகி,

கோப்பெருந் தேவி, [1]கொடுவினை யாட்டியேன்
யாவும் தெரியா இயல்பினேன்; ஆயினும்,
[2] முற்பகல் செய்தான் பிறன் கேடு, தன்கேடு
பிற்பகல் காண்குறூஉம் பெற்றியகாண்

என்று சொல்லி, பின்பு தான் பிறந்த காவிரிப்பூம் பட்டினத்துக் கற்புடைய மகளிர் எழுவர் வரலாற்றுக் குறிப்பினை யுரைத்து,

[3] மட்டார் குழலார் பிறந்த பதிப்பிறந்தேன் ;
[4] பட்டாங்கு யானும்ஓர் பத்தினியே யாமாகில்,
[5] ஒட்டேன், அரசோடு ஒழிப்பேன் மதுரையும்,என்
[6] பட்டிமையும் காண்குறுவாய் நீ

என்றாள். அதனாலும், சீற்றம் தணியாது, மதுரை நகரத்து மக்களை நோக்கிக் கண் சிவந்து,

[7] நான்மாடக் கூடல் மகளிரும் மைந்தரும்
வானக் கடவுளரும் மாதவரும் [8]கேட்டீமின் ;

---

1. கொடுவினையாட்டியேன் - தீவினையால் ஆளப்படுவேனாகிய யான் (கண்ணகி).

2. முற்பகல் செய்தான் பிறன் கேடு - முற்பகலில் பிறனுக்குக் கேடு செய்தவன். காண்குறூஉம் பெற்றிய - காணலுறும் தன்மையுடையன.

3. மட்டு ஆர் குழலார் - பூவின் தேன் பொருந்திய கூந்தலையுடைய மகளிர்.

4. பட்டாங்கு - உண்மையாக.

5. ஒட்டேன் - இனிதிருக்க இசையேன்.

6. பட்டிமை - படிறு ; அடங்காச் செயல்.

7. நான்மாடக் கூடல் - மதுரை; கன்னி, கரியமால், ஈசன், காளி என்ற நால்வரும் காக்கும் கடிமதில் சூழ்ந்த மதுரை.

8. கேட்டீமின் - கேள்மின்.

[1]யான்அமர் காதலன் தன்னைத் தவறுஇழைத்த
கோநகர் சீறினேன் ; குற்றம்இலேன், யான்

என்று தன் இடமார்பைக் கையால் திருகி, மதுரையை வலமாக மும்முறை வந்து, சுழன்று, அம் மார்பினையும் உருட்டி நகர்மீது விட்டெறிந்தாள். எறிந்ததும், அழற்கடவுள், நீலமேனியும், முறுக்கிய சடையும், வெள்ளிய பற்களும் உடைய ஒரு பார்ப்பன வடிவுதாங்கி அவள் எதிரே வந்து நின்று,

மாபத் தினிநின்னை [2]மாணப் பிழைத்தநாள்
பாய்எரி இந்தப் பதிஊட்டப், பண்டே ஓர்
[3]ஏவல் உடையேனால்,

என்று சொல்லி இறைஞ்சி நிற்பவன், மறுபடியும், அக் கண்ணகியை நோக்கி, "அன்னாய், இனி இந் நகரை எரியூட்டுங்கால் விலக்குதற் குரியார் யாவர்?" என்று கேட்க, அவள்,

பார்ப்பார் [4]அறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்
மூத்தோர் குழவி எனும்இவரைக் கைவிட்டுத்
[5]தீத்திறத்தார் பக்கமே சேர்க

என்றாள். அவ்வண்ணமே,

பொற்றொடி ஏவப் புகையழல் மண்டிற்றே
[6]நல்தேரான் கூடல் நகர்.

---

1. யான் அமர் காதலன் - யான் விரும்பும் கணவன்.
2. மாணப் பிழைத்த நாள் - திண்ணிதாகப் பிழைசெய்து துன்புறுவித்த காலத்து.
3. ஏவல் உடையேன் - கட்டளை உடையேனாதலால்.
4. அறவோர் - துறவுபூண்டவர்.
5. தீத்திறத்தார் - தீவினைப் பகுதிகளைச் செய்வோர்.
6. நல்தேரான் - நல்ல தேர்ப் படையையுடைய பாண்டியன்.

# உஉ. அழற்படு காதை

இவ்வாறு கண்ணகியின் ஏவல் பெற்றுப் போந்த அழற் கடவுள், மதுரை நகரைப் பற்றியதும் எங்கும் எரி எழுந்து கொழுந்துவிட்டு எரியலுற்றது. நகரைக் காக்கும் காவற் கடவுளர் தத்தம் காவல் தொழிலை விட்டு நீங்கினர்; அரசர் கோமானுன பாண்டியன் நெடுஞ்செழியன், தன் தேவியுடன் அரசு கட்டிலில் துஞ்சினன் என்பதை அறியாமல்,

ஆசான், [1]பெருங்கணி, [2]அறக்களத்து அந்தணர்,
[3] காவிதி, [4]மந்திரக் கணக்கர் தம்மொடு
[5] கோயில் மாக்களும், [6]குறுந்தொடி மகளிரும்

ஓவியம்போல உரையாடாது இருந்து விட்டனர். [7] காழோரும், [8] வாதுவரும், தேரூர்பவரும், வாள் மறவரும் செய்வதறியாது மயங்கி அரசர் கோயிலைத் தீப்பற்றக் கண்டு தாம் நீங்கி யேகினர். அக் காலை அந்தணர் மரபைக் காக்கும் கடவுட்பூதம்,

விரிகுடை தண்டே குண்டிகை காட்டம்
பிரியாத் தருப்பை பிடித்த கையினன்,
[9] நாவினும் மார்பினும் நவின்ற நூலினன்,

---

1. பெருங்கணி - கணித விவர்த்தகன்.
2. அறக்களத்து அந்தணர் - தன்மாசனத்துக் கருத்தாக்கள்; நீதி மன்றத் தலைவர்கள்.
3. காவிதி - வரியிலார்.
4. மந்திரக் கணக்கர் - அரசனது ஆராய்ச்சிக் களத்து ஓலை எழுதுபவர்.
5. கோயில்மாக்கள் - அரசன் கோயிலில் இருக்கும் அரச சுற்றத்தினர்.
6. குறுந்தொடி மகளிர் - அரசனுடைய உரிமை மகளிர்.
7. காழோர் - யானையைச் செலுத்தும் பரிக்கோற்காரர்.
8. வாதுவர் - குதிரைப்பாகர்.
9. நாவினும் மார்பினும் நவின்ற நூலினன் - நாவின் நவின்ற நூலினன்; மார்பில் நவின்ற நூலினன். நாவின் நவின்ற நூல் - நாவால் மொழிந்த நூல்; மார்பில் நவின்ற நூல் - பூணூல்.

முத்தீ வாழ்க்கை முறைமையின் வழாஅ
[1] வேத முதல்வன் வேள்விக் கருவியோடு

வந்து நின்றது; அதற்பின், அரசர் மரபுகாக்கும் பூதம்,

எண் அரும் சிறப்பின் மன்னரை ஓட்டி,
[2] மண்ணகம் கொண்டு, செங்கோல் ஓச்சி
கொடுந்தொழில் கடிந்து, [3]கொற்றம் கொண்டு,
நடும்புகழ் வளர்த்து, நால்நிலம் புரக்கும்
உரைசால் சிறப்பின் நெடியோன் அன்ன

இயல்புதாங்கி அருகே வந்து நின்றது. பின்னர், வணிகர் மரபு காக்கும் கடவுட் பூதம்,

நாஞ்சிலம் படையும் [4]வாய்ந்துறை துலா[5]முன்
சூழ் ஒளித் தாலும யாழும் ஏந்தி
விளைந்து [6]பதம் மிகுந்து விருந்து பதம் தந்து
மலையவும் கடலவும் [7]அரும்பலம் கொணர்ந்து
விலைய வாக வேண்டுநர்க்கு அளித்து ஆங்கு
உழவு தொழில் உதவும் பழுதில் வாழ்க்கைக்
கிழவன் என்போன் [8]கிளரொளிச் சென்னியின்
இளம்பிறை சூடிய இறையவன்

வடிவுகொண்டு வந்து நின்றது. இறுதியாக,

[9] ஆடற்கமைந்த அவற்றொடு பொருந்திப்
பாடற்கு அமைந்த [10]பலதுறை போகி,

---

1. வேத முதலவன் - பிரமன். வேள்விக்கருவி - சுருக்கு, சுருவம், சமிதை முதலியன.

2. மண்ணகம் கொண்டு - மண்ணுலகத்தை வென்றுகொண்டு.

3. கொற்றம் - தீவினை கடிந்து நல்வினையாற்றிப் பெறும் வெற்றிச் சிறப்பு.

4. வாய்ந்து உறை துலாம் - பொருளை நிறுப்பதற்கு முன்னும் பின்னும் சமம் அமைந்து நிற்கும் துலாக்கோல்.

5. முன் சூழ் ஒளித் தால் - நிறுக்கும் பொருளின் சமநிலையை முன் அறிதற்கு நேர் நின்று விளக்கும் துலாத்தின் நாக்கு.

6. பதம் - உணவுப்பொருள்.

7. அரும்பலம் - பெறுதற்கரிய உயரிய பொருள்கள்.

8. கிளர் ஒளிச் சென்னி - விளங்குகின்ற ஒளிபொருந்திய சடையையுடைய தலை. இறையவன் - சிவன்.

9. ஆடற்கு அமைந்த அவை - கூத்துக்களையாடற்கு வேண்டும் வாச்சியங்கள்.

10. பல துறை - பண்ணும் திறமும்.

கலிகெழு கூடல் பலிபெறு பூதத்
தலைவன் என்போன் தானும்

வந்து நின்று கண்ணகியைக் கண்டு, "இந் நகர்க்கண் அரசு முறை கெடும்போது, இதனைத் தீயுண்ணும் என்பதனை யாம் நெறியாக அறிந்தனம்; ஆதலால், யாம் இப்போது இந் நகரை விட்டு நீங்குவது இயல்பு" என்று சொல்லிவிட்டு நீங்கியது. ஏனைப் பூதங்களும் இவ்வண்ணமே நீங்கின.

கூல மறுகும் கொடித்தேர் வீதியும்
[1] பால் வேறு தெரிந்த நால்வேறு தெருவும்
[2] உரக்குரங்கு உயர்த்த ஒண்சிலை உரவோன்
[3] கா எரி யூட்டிய நாள்போல் கலங்க
அறவோர் மருங்கின் [4]அழல்கொடி விடாது,
[5] மறவோர் சேரி மயங்குஎரி மண்டக்
கறவையும் கன்றும் கனல் எரி சேரா,
[6]அறவை யாயர் அகன்தெரு அடைந்தன;
மறவெங் களிறும் மடப்பிடி நிரைகளும்
விரைபரிக் குதிரையும் புறமதில் பெயர்ந்தன;

இனி, இல்லிருந்து நல்லறம் புரியும் நங்கையர் தெருவில் கண்ணகியின் செயலைப் பாராட்டி, அழற்கடவுளை அந்த நங்கையர் பரவினர்; விலைமாதர் தெருவில், அத் தீ வெதுப்பக் கண்ட அம் மடந்தையரில் முதியோர், ஆடரங்கும், நாடகக் கருவியும், பிறவும் அழலால் கெடுவது கண்டு,

எந்நாட்டாள் கொல்? யார்மகள் கொல்லோ?
இந்நாட்டு இவ்வூர் [7]இறைவனை இழந்து,

---

1. பால்வேறு தெரிந்த நால்வேறு தெரு - சிலப். ஊர்காண் காதை காண்க.

2. உரக்குரங்கு - வலிய குரங்கின் உருவெழுதிய கொடி. உரவோன் - அருச்சுனன்.

3. கா - காண்டாவனம்.

4. அழல்கொடி விடாது - அழற்கொழுந்து செல்லாது.

5. மறவோர் - தீவினையாளர்.

6. அறவை யாயர் - அறத்தையுடைய ஆயர். அறவை X மறவை. கானல் வரி காண்க.

7. இறைவன் - கணவன்.

[1] தேரா மன்னனைச் சிலம்பின் வென்று இவ்
ஊர்தீ மூட்டிய ஒருமகள்

எனப் பேசிக் கொண்டனர். நகரில்,

அந்தி விழவும், ஆரண ஓதையும்,
செந்தீ வேட்டலும், தெய்வம் பரவலும்
மனைவிளக் குறுத்தலும், மாலை அயர்தலும்,

முரசு முழக்குதலும் பிறவும் இலவாயின. கண்ணகிக்குத் தன் காதலனை இழந்ததனால் உண்டாய துன்பத்தால் உள்ளம் கொதித்தது; அதனால் அவள் வெய்துயிர்த்து மறுகிடை மறுகினள்; கவலையில் கவன்றாள்; இயங்கியும் மயங்கியும் எல்லை யில்லாத் துயரமுற்றாள். இவ்வாறு திரியும், அவள்பால், மதுராபதி என்னும் நகர தேவதை வந்து நின்றாள்.

1. தேரா மன்னனை - உண்மை யறியானாகிய பாண்டியனை.

# உ௲. கட்டுரை காதை

தெருவில் அலமந்து திரியும் கண்ணகிபால் வந்த மதுரா பதி, அவள் முந்நெதிர் தோன்ற நாணி, பின்னே இருந்து கொண்டு, "திருமாபத்தினி, நங்காய், என் குறையைக் கேள்" என்றாள். எனவே, கண்ணகி "என் பின்னே வரும் நீ யார்? என் துயர் நிலை அறிவாயோ?" என்று கேட்க, மதுராபதி,

> [1] ஆரஞர் எவ்வம் அறிந்தேன், அணியிழாய்!
> மாபெருங் கூடல் மதுராபதி என்பேன் ;
> [2] கட்டுரை யாட்டியேன் ; யான்நின் [3]கணவற்குப்
> பட்ட கவற்சியேன், பைந்தொடி, கேட்டி,

என்று தொடங்கி, பாண்டியன் செங்கோல் வளைந்ததும், கோவலனுக்குத் தீது வந்ததும் ஊழ்வினையால் ஆயின என்று சொன்னாள். அதன்பின் பாண்டியனது செம்மைப் பண்பு கூறலுற்று, "எம் கோமானாகிய பாண்டியன்

> [4] மறைநா ஓசை அல்லது [5]யாவதும்
> மணிநா ஓசை கேட்டதும் இலனே ;
> அடிதொழுது [6]இறைஞ்சா மன்னர் அல்லது,
> குடிபழி தூற்றும் கோலனும் அல்லன்

என்று சொன்னாள். பின்னர், பொற்கைப் பாண்டியன் வரலாறும், தங்கால் என்னுமிடத்து வார்த்திகன் என்னும் மறையவன் புதல்வனைக் காவலர் அறியாது சிறையிட்டதனைப் பின்னர் அறிந்து அது குறித்து, அவனை யடைந்து

---

1. ஆர் அஞர் எவ்வம் - பொறுத்தற்கரிதாகிய மிக்க துன்பம்.
2. கட்டுரையாட்டியேன் - சொல்லொன்று சொல்லுதலை யுடையேன்.
3. கணவற்குப்பட்ட கவற்சியேன் - கணவனுக்கு நேர்ந்தது கண்டு வருந்தும் மனக்கவலையுடையேன்.
4. மறைநா ஓசை - மறையோதுவார் நாவில் எழும் மறையோசை.
5. யாவதும் - ஒருபோதும்.
6. இறைஞ்சா மன்னர் - பகை மன்னர்.

அறியா மாக்களின் [1]முறைநிலை திரிந்தஎன்
இறைமுறை பிழைத்தது ; பொறுத்தல் நும் கடன் எனத்
தடம்புனல் கழனித் [2]தங்கால் தன்னுடன்
[3] மடங்கா விளையுள் வயலூர் நல்கி,
கார்த்திகை கணவன் வார்த்திகன் முன்னர்
[4] இருநில மடந்தைக்குத் திருமார்பு நல்கிஅவள்
தணியா வேட்கையும் சிறிது

தணித்த பாண்டியனது மாலையும் எடுத்தோதினள். முடிவில், கோவலன் கண்ணகி என்ற இருவரது பழம் பிறப்புக் கூறலுற்று, முதற்கண்,

ஆடித் திங்கள் பேரிருள் பக்கத்து
[5] அழல்சேர் குட்டத்து அட்டமி ஞான்று
வெள்ளி வாரத்து ஒள்எரி உண்ண,
உரைசால் மதுரையொடு அரைசுகேடுறும் எனும்
[6] உரையும் உண்டே, [7]நிரைதொடி யோயே,

என்று மொழிந்து, பின்னர்க் கூறுவாள் : “கலிங்கநாட்டில் சிங்கபுரத்தே வசு என்பானும், கபிலபுரத்தே குமரன் என்பானும் ஆட்சிபுரிகையில் இருவர்க்கும் பகைமை யுண்டாயிற்று ; அதனால் இருவர் நாட்டினும் தேசிய முறையில் போக்கு வரவு இல்லையாயின. அந்நாளில் நின் கணவனாகிய கோவலன் பரதன் என்னும் பெயருடன் சிங்கபுரத்தரசன் பால் தொழில் பூண்டிருந்தான். அந்நாளில் சங்கமன் என்னும் வணிகனொருவன் தன் மனைவி நீலி யென்பவளுடன் வந்திருப்ப, அவனைக் கபிலபுரத்து ஒற்றன் எனக் காட்டி

1. முறை நிலை திரிந்த - அரசுமுறை நடுநிலை திரிந்த.

2. தங்கால் - வார்த்திகன் வாழ்ந்த ஊர்.

3. மடங்கா விளையுள் வயலூர் - குன்றாத விளைநிலத்தையுடைய வயலூர் என்னும் ஊர்.

4. இருநில மடந்தைக்கு ....நல்கி - நிலத்தில் மார்புற வீழ்ந்து வணங்கி, நிலமகளை அரசர்க்கு மனைவியாகக் கூறல் கவிமரபாதலின், ஈண்டுப் பாண்டியன் நிலத்தில் வீழ்ந்து வணங்குவதை, நிலமகளின் வேட்கை தணிய அவளுக்கு அவன் தன் விரிந்த மார்பு தந்ததாகக் கூறுகின்றார்.

5. அழல்சேர் குட்டம் - கார்த்திகை பரணி.

6. உரை - சோதிடமொழி.

7. நிரைதொடியோய் - வரிசையுற அணிந்த வளைகளையுடையாய்.

அப் பரதன் கொலைபுரிவித்தான். அவன் பிரிவாற்றாது அலமந்த அவன் மனைவி நீலி, பதினான்கு நாள்காறும், பல விடங்களிலும் திரிந்து, ஒரு மலை மீதேறித் தன் கணவனொடு விண்ணுலகு புகுந்தாள். அக் காலத்தே,

எம்முறு துயரம் செய்தோர், யாவதும்
[1] தம்முறு துயரம் இற்றாகுக என்றே
[2] விழுவோள் இட்ட வழுவில் சாபம்
பட்டனிர்;

ஆதலால், நீவிர் இத் துயரம் உற்றீர்; இனி, நீ பதினான்கு நாள் கழிந்தபின் நின் கணவனை வானவர் வடிவில் கண்டு கூடுவை" என்று இவ்வாறு அம் மதுராபதி கூறிவிட்டு, நகரைப் பற்றி எரியும் அழற்கு [3]வீடுபெற்றுச் சென்றாள். கண்ணகி, தன் கை வளையை ஐயை கோயில் வாயிலில் உடைத்தெறிந்து விட்டு,

கீழ்த்திசை வாயில் கணவனொடு புகுந்தேன்
மேற்றிசை வாயில் [4]வறியேன் பெயர்கென

இரவும் பகலும் நடந்து திரிந்து, வையையாற்றின் கரை வழியே சென்றாள். செல்லுங்கால்,

[5] அவல என்னாள் அவலித்து இழிதலின்;
[6] மிசைய என்னாள் மிசைவைத்து ஏறலின்;
கடல்வயிறு கிழித்து மலைநெஞ்சு பிளந்துஆங்கு
அவுணரைக் கடந்த சுடர்இலை நெடுவேல்
[7] நெடுவேள் குன்றம் [8]அடிவைத்து ஏறிப்

---

1. தம்முறு துயரம் இற்று - தமக்கு உண்டாகும் துன்பமும் இத் தன்மைத்தாகுக,

2. விழுவோள் - உயிர்விட்டு விழுபவள்.

3. வீடு - தணிப்பு.

4. வறியேன் - கணவனையின்றித் தனித்துள்ள யான்.

5. அவல - பள்ளங்கள். அவலித்து - அவலமுற்று.

6. மிசைய - மேடுகள். என்னாள் - என்று கருதிலள்.

7. நெடுவேள் குன்றம் - திருச்செங்கோடு.

8. "அடிவைத்து ஏறி என்றார், அதற்கு முன்பு வருத்தத்தால் கால் நிலத்துப் பாவாமையால்."

[1] பூத்த வேங்கைப் பொங்கர்க் கீழ்

நின்றாள். அங்கிருந்தோர், "நீவிர் யார்" என்று வினவ, அவர்கட்கு "யான் ஒரு [2] தீத்தொழிலாட்டியேன்" என்று செப்பினள். இதற்குள் பதினான்குநாள் எல்லை கழிந்தது. பகற்போது கழிய இரவும் வந்தது. அப்போது,

[3] பீடுகெழு நங்கை பெரும்பெயர் ஏத்தி,
[4] வாடா மாமலர் மாரிபெய்து, ஆங்கு,
[5] அமரர்க்கு அரசன்தமர் வந்து ஏத்தக்
[6] கோநகர் பிழைத்த கோவலன் தன்னொடு

கண்ணகி நல்லாளும் வானவூர்தி ஏறிச் சென்று விண்ணக மாதர்க்கு விருந்தாயினாள்.

வெண்பா

[7] தெய்வம் தொழாஅள், கொழுநன் தொழுவாளைத்
தெய்வம் தொழுந்தகைமை திண்ணிதால்—தெய்வமாய்
மண்ணகமா தர்க்கு அணியாய கண்ணகி
விண்ணகமா தர்க்கு விருந்து.

மதுரைக் காண்டம்

முடிந்தது.

---

1. பூத்த வேங்கைப் பொங்கர் - பூத்துத் தழைத்த வேங்கை மரத்தின் கீழ்.

2. தீத்தொழிலாட்டியேன் - தீத்தொழிலைச் செய்பவள்; தீயை நகர்க்கு வைத்து வருபவள்.

3. பீடு - பெருமை.

4. வாடா மாமலர் - வானவர் சொரிந்த வானுலகத்துப் பூ வாடுவதில்லையாதலால், அவர் சொரிந்த பூவை "வாடா மாமலர்" என்றார்.

5. அமரர்க்கு அரசன் - இந்திரன்.

6. கோநகர் பிழைத்த கோவலன் - மதுரை நகர்க்கண் தீதாகக் கொலையுற்றுத் தன்னை நீங்கிய கோவலனுடன்.

7. கண்ணகி விருந்தானாள்; அதனால் தெய்வம் தொழுகை திண்ணிது என்க.

# ௩. வஞ்சிக் காண்டம்

## உச. குன்றக் குரவை

யாங்கள் முன்னைநாள் [1]நெடுவேள் குன்றத்துக்குச் சென்று, அங்கே தங்கிக் [2]"குருவியோப்பியும், கிளி கடிந்தும், அருவியாடியும், [3]சுனைகுடைந்தும்" வந்துகொண்டிருந்தேம்; அதுபோது, அம் மலையிடத்தே ஒரு வேங்கை மரத்தின்கீழ் ஒரு நங்கை நிற்கக் கண்டேம்; அவளை அணுகி, [4]"வள்ளி போல்வீர், நும்மைக் கண்ட எம் மனம் நடுங்க, முலையிழந்து நிற்கின்ற நீவிர் யாவிரோ?" என வினவினேம். அவள், எம்மைச் சிறிதும் முனியாது,

"மணமதுரையோடு அரசு கேடுற
வல்வினை வந்து உருத்த காலை,
கணவனை அங்கு இழந்து போந்த
கடுவினை யேன்,யான்"

என்றாள். இது கேட்டதும் யாங்கள் மிகவும் அஞ்சி, இரு கையும் கூப்பி வணங்கி நின்றேம். அக்காலையில், வானவர் போந்து மலர்மாரி பொழிந்து, குன்றவர் அனைவரும் கண்டு வியந்து நிற்ப, அவளை அவளுடைய கொழுநனுடன் வானுலகு கொண்டு போயினர். "இவள் போலும் ஒரு பெரிய தெய்வம் நம் குலத்துக்கு இல்லை; ஆதலால், இவளை இவ்வேங்கையின் கீழே [5]தெய்வம் கொள்ள வேண்டும்"

1. நெடுவேள் குன்றம் - சேரநாட்டு மலைப்பகுதிகளுள் ஒன்று; இதனைத் திருச்செங்கோடு என்று கருதுவாரும் உண்டு.
2. குருவி யோப்பி - குருவிகளை யோட்டி.
3. சுனை குடைந்தும் - சுனைநீரில் மூழ்கி விளையாடியும்.
4. முருகவேள் மனையாட்டியாகிய வள்ளி நாய்ச்சியார்.
5. தெய்வம் கொள்ள - தெய்வமாகப் பண்ணிக்கொண்டு பரவ.

என்று எண்ணி, எம் சிறு குடியில் வாழ்வார்க்கு எம் எண்ணத்தைத் தெரிவித்தேம்.

சிறு குடியீரே, சிறு குடியீரே,
தெய்வம் கொள்ளுமின், சிறு குடியீரே.
நறுஞ்சினை வேங்கை நல்நிழற் கீழ்ஓர்
தெய்வம் கொள்ளுமின், சிறுகுடி யீரே.
[1] தொண்டகம் தொடுமின் [2] சிறுபறை தொடுமின்,
[3] கோடுவாய் வைம்மின், [4] கொடுமணி இயக்குமின்
[5] குறிஞ்சி பாடுமின், நறும்புகை எடுமின்,
பூப்பலி செய்ம்மின் [6] காப்புக்கடை நிறுமின்,
பரவலும் பரவுமின்; விரவுமலர் தூவுமின்
ஒருமுலை இழந்த நங்கைக்குப்
பெருமலை [7] துஞ்சாது வளம்சுரக்க எனவே.

கொளுச் சொல்.

ஆங்குஒன்று காணாய்,
அணியிழாய், ஈங்கிதுகாண்,
[8] அஞ்சனப் பூழி
அரிதாரத்தின் இடியல்,
[9] சிந்துரச் சுண்ணம்
செறியத்தாய்த் தேங்கமழ்ந்து

---

1. தொண்டகம் - ஒருவகைத் துடி.

2. சிறுபறை - குறிஞ்சி நிலத்துப் பறைகளுள் ஒன்று. தொண்டகச் சிறுபறை என்று கூறலும் உண்டு (முருகு 197).

3. கோடு - கடமாக் கொம்பு; ஊது கொம்புமாம். வாய்வைம்மின் - வாயில் வைத்து ஊதுமின்.

4. கொடுமணி - ஓசை கடிதான மணி.

5. குறிஞ்சி - குறிஞ்சிப்பண்.

6. காப்புக்கடை நிறுமின். காப்பு-சுற்றுமதில்; கடை-வாயில். காப்பும் கடையும் செய்ம்மின் என்பதாம். பரவலும் பரவுமின் - இனிய பாட்டுக்களைச் சொல்லிப் பணிமின்.

7. துஞ்சாது - குன்றாது.

8. அஞ்சனப்பூழி - அஞ்சனத்துக்கு வேண்டும் பொருள்களின் தூள்; வேங்கைமரத்தின் தூள்; வரகின நொய்; இவை நறுங்கு முதலியன. இடியல் - இடித்த மா.

9. சிந்துரச் சுண்ணம் - சிந்துரத்தால் செய்த சுண்ணப்பொடி.

[1] இந்திரவில்லின் எழில்
கொண்டு இழும்என்று
வந்திங் கிழியும்
மலையருவி ஆடுதுமே,
ஆடுதுமே தோழி
ஆடுதுமே தோழி
[2] அஞ்சல் ஓம்பென்று
நலன்உண்டு நல்காதான்
[3] மஞ்சு சூழ் சோலை
மலையருவி ஆடுதுமே.

(புறுப்புனல்)

யாதொன்றும் காணேம் புலத்தல், அவர்மலைப்
[4] போதாடி வந்த புதுப்புனல்;
போதாடி வந்த புதுப்புனல் [5] மற்றையார்
மீதாடின் நோம் தோழி நெஞ்சன்றே.

பாட்டு மடை

உரைஇனி; மாதராய், [6] உண்கண் சிவப்பப்
[7] புரைதீர் புனல்குடைந் தாடினோ மாயின்,
[8] உரவுநீர் மாகொன்ற வேல்ஏந்தி, ஏத்திக்
[9] குரவை தொடுத்தொன்று பாடுகம் வாதோழி.

(வேல் பாடுதல்)

சீர்கெழு செந்திலும் [10] செங்கோடும் [11] வெண்குன்றும்

1. இந்திரவில் - வானவில்.
2. அஞ்சல் ஓம்பு - அஞ்சுதலை நீக்கு.
3. மஞ்சு - மேகம்.
4. போது ஆடி - பூக்களைச் சுமந்துகொண்டு.
5. மற்றையார்மீது ஆடின் - தன்னை யொழியத் தனக்கு முற்பட ஆடினவர்மீது தோயுமானால்.
6. உண்கண் - மைதீட்டிய கண்.
7. புரைதீர் புனல் - குற்றமில்லாத, கலக்கமின்றித் தெளிந்த நீர்.
8. உரவு நீர் - பரந்த நீர் மிக்க கடல். மா - சூரபன்மா; அவனுக்குத் துணையாய் இருந்த மாமரமுமாம்.
9. குரவை தொடுத்து - குரவைக் கூத்தாடி.
10. செங்கோடு - திருச்செங்கோடு.
11. வெண்குன்று - சுவாமிமலை.

ஏரகமும் நீங்கா [1]இறைவன்கை வேல்அன்றே :
[2]பார்இரும் பௌவத்தின் உள்புக்குப் பண்டொருநாள்
சூர்மா தடிந்த [3]சுடர்இலைய வெள்வேலே.

பாட்டு மடை.

[4] இறைவளை நல்லாய்!
இது நகையாகின்றே ;
[5]கறிவளர் தண்சிலம்பன்
செய்த நோய்தீர்க்க
அறியாள் மற்றன்னை ;
[6] அலர்கடம்பன் என்றே
[7] வெறியாடல் தான்விரும்பி
வேலன் வருகஎன்றாள்.

(வெறிவிலக்குப் பாடல்)

செறிவளைக்கை நல்லாய்! இதுநகை யாகின்றே ;
[8] வெறிகமழ் வெற்பன் நோய்தீர்க்க வரும்வேலன்,—
வேலன் மடவன்; அவனினும் தான்மடவன் ;
[9] ஆலமர் செல்வன் புதல்வன் வருமாயின்.

பாட்டு மடை

வேலனார் வந்து வெறியாடும் [10]வெங்களத்து

---

1. இறைவன் - முருகன்.
2. பார்இரும் பௌவம் - பாராகிய நிலத்தைச் சூழ்ந்த கரிய கடல்.
3. சுடர் இலைய வெள்வேல் - ஒளிர்கின்ற இலைபோலும் முகத்தை யுடைய வெள்ளிய வேல்.
4. இறைவளை - சந்து பொருந்திய வளை.
5. கறி - மிளகுக் கொடி.
6. அலர் கடம்பன் - கடப்ப மாலையையுடைய முருகன்.
7. வெறியாடல் - இப்பெண்ணுக்கு இவ்வேறுபாடு முருகனால் நேர்ந்ததென்று, அது நீங்குவதற்காக அவனுக்கு அவனது வேலையேந்தி யாடும் வேலனைக் கொண்டு பரவுக்கடன் செய்தல்.
8. வெறி - நறியமணம்.
9. ஆலமர் செல்வன் - சிவன்.
10. வெம் களம் - கண்டார்க்கு அச்சம் பிறப்பிக்கும் இடம். "முரணினர் உட்க முருகாற்றுப்படுத்த" உருகெழு வியன் களம் ஆதலால், "வெங்களத்தில்" என்றாள்.

[1] நீலப் பறவைமேல் நேரிழை தன்னோடும்
ஆலமர் செல்வன் புதல்வன் வரும்;வந்தால்,
[2] மால்வரை வெற்பன் மணவணி வேண்டுதுமே.

(மணம் பாடுதல்)

கயிலைநன் மலை இறை மகனை,நின் மதிநுதல்
மயில் இயல் மடவரல் [3]மலையர்தம் மகளார்
[4] செயலைய மலர்புரை திருவடி தொழுதேம்
[5] அயல்மணம் ஒழி ; அருள் அவர்மணம் எனவே.

பாட்டு மடை

என்று யாம்பாட [6]மறைநின்று கேட்டருளி
[7] மன்றலங் கண்ணி மலைநாடன் போவான்முன்
சென்றேன், அவன்றன் திருவடி கைதொழுது
நின்றேன் உரைத்தது கேள், வாழி, தோழி.

[8] கடம்பு சூடி உடம்பிடி ஏந்தி
மடந்தை பொருட்டால் வருவது இவ்வூர் ;
அறுமுகம் இல்லை ; அணிமயில் இல்லை ;
குறமகள் இல்லை ; [9]செறிதோள் இல்லை ;
[10] கடம்பூண் தெய்வ மாக நேரார்,
[11] மடவர் மன்றஇச் சிறுகுடி யோரே.

பாட்டு மடை

என்று ஈங்கு,

---

1. நீலப்பறவை - மயில்.

2. மால்வரை - பெரியமலை ; திருமால் போல் நீண்டு உயர்ந்த கரிய மலை.

3. மலையர்தம் மகள் - மலைவாணரான குறவர்தம் மகள் (வள்ளி)

4. செயலை - அசோகு.

5. அயல் மணம் ஒழி - பிறர் (ஏதிலார்) மணந்து கொள்ளாதவாறு தவிர்க.

6. மறைநின்று - சிறைப்புறமாக மறைந்து நின்று.

7. மன்றல் - நறுமணம்.

8. கடம்பு - கடம்பு மாலை.
உடம்பிடி - வேல்.

9. செறிதோள் - பன்னிரண்டாய்ச் செறிந்த தோள்.

10. கடம்பூண் தெய்வம் - பரவுக் கடனை ஏற்கும் குலதெய்வம்.

11. மடவர் - மடமையுடையர் ; அறியாதவர்.

[1] அலர்பாடு பெற்றமை யான் உரைப்பக் கேட்டுப்
[2] புலர்வாடு நெஞ்சம் [3]புறங்கொடுத்துப் போன
மலர்தலை வெற்பன் வரைவானும் போலும்.

முலையினால் மாமதுரை [4]கோளிழைத்தாள் காதல்
தலைவனை, [5]வானோர் தமராரும் கூடிப்
பலர்தொழு பத்தினிக்குக் காட்டிக் கொடுத்த
நிலையொன்று பாடுதும் யாம்.

பாடுகம் வா,வாழி தோழி, யாம்பாடுகம் ;
பாடுகம் வா,வாழி தோழி யாம்பாடுகம்
[6] கோமுறை நீங்கக் கொடிமாடக் கூடலைத்
[7] தீமுறை செய்தாளை ஏத்தியாம் பாடுகம் ;
தீமுறை செய்தாளை ஏத்தியாம் பாடுங்கால்
மாமலை வெற்பன் மணவணி வேண்டுதுமே.

[8] பாடுற்று

[9] வானக வாழ்க்கை அமரர் தொழுதேத்தக்
கான நறுவேங்கைக் கீழாளோர் காரிகையே ;
கான நறுவேங்கைக் கீழாள் கணவனொடும்
வானக வாழ்க்கை [10]மறுதரவோ இல்லாளே;

---

1. அலர்பாடு - ஊரார் அலர் கூறப்படுதல்.

2. புலர்வாடு நெஞ்சம் - புலர்ந்து வாட்டமுறும் நெஞ்சம் ; புலர் வாடும் என்பதை ஒரு சொல்லாகக் கொண்டு புலரும் நெஞ்சம் என்றும் கூறுப.

3. புறங்கொடுத்துப் போன - தன் பின்னே கிடக்கச் சென்ற.

4. கோள் இழைத்தாள் - தீயூட்டித் தீத்திறத்தாரை இறப்பித்தாள்.

5. வானோர் தமராரும் கூடி - வானோராய நமர் எல்லாரும் கூடி. நிலை - தன்மை.

6. கோமுறை - அரசு முறை.

7. தீ முறை செய்தாள் - தீ யூட்டித் தவறிய அரசு முறையை நேர்மையில் நிறுத்தினாள்.

8. பாடு உற்று - பெருமையுற்று.

9. வானக வாழ்க்கை - வானுலகத்தில் வாழும் வாழ்க்கை.

10. மறுதரவோ இல்லாள் - வானக வாழ்க்கை பெற்றுளாதலால், இனி, இம் மண்ணுலகில் வாழ்தற்கு மீண்டு வருவதிலள் ; மீட்டும் பிறவாள் என்றபடி.

மறுதரவு இல்லாளை ஏத்தி நாம்பாடப்
பெறுகதில் அம்ம [1]இவ் வூரும் ஓர்பெற்றி.

பெற்றி யுடையதே, பெற்றி யுடையதே
[2]பொற்றொடி மாதர் கணவன் மனம்காணப்
பெற்றி யுடையது இவ்வூர்.

இவ்வாறு யாம் நம் தலைவர் விரைய வரையும் பொருளை யுட்கொண்டு, பாடியாடும் குரவையைக் கண்டு, [3]"வில் லெழுதிய இமயத்தொடு கொல்லி யாண்ட குடவர்கோ" [4]ஆறாது உண்டு மகிழ்ந்து பல்லாண்டு வாழ்வானாக எனா, அவர் தின்னை வரைதற்கு வந்தனர்காண் என்று தோழி தலைமகட்குக் கூறுகின்றாள்.

---

1. இவ்வூரும் ஓர் பெற்றி - இவ்வூரும ஒரு விரதம் பெறுக.

2. பொன் தொடி மாதர் - பொன்னால் ஆகிய வளையணிந்த பெண் என்றது தலைமகளை. தலைவன் ஒருவன் தலைவி ஒருத்தியுடன் நட்புற்று, விரைய வரைந்து (மணந்து) கொள்ளாமல் களவு ஒழுக்கத்தை நீட்டித்து வந்தான்; அதனால் தோழி அவன் தெருண்டு வரைவது குறித்துப் பல் வேறு வகையால் களவினால் வரும் ஏதத்தை வெளிப்படையாகவும், குறிப் பாகவும் அறிவுறுததும் குறிப்பால், இங்கே காட்டியவாறெல்லாம் தலைவி யொடும் ஏனை ஆயத்தாரொடும் கூடியாடிப் பாடுகின்றாள்.

3. வில் எழுதிய இமயம் - சேரர் குறியாகிய வில் பொறிக்கப்பட்ட இமயமலை.

4. ஆறாது - குறைவில்லாமல்.

# உரு. காட்சிக் காதை

[1] மாநீர் வேலிக் கடம்பெறிந்து [2] இமயத்து
வானவர் மருள மலைவில் பூட்டிய
வானவர் தோன்றல்

சேரன் செங்குட்டுவன், வஞ்சிமா நகரத்தே இலவந்தி வெள்ளி மாடத்தின்கண் தன்தேவி இளங்கோ வேண்மாளுடன் இனிதிருக்கும் ஒருநாள், "மஞ்சுசூழ் சோலை மலை வளம் காண்குவம்" எனக் கருதி உரிமை மகளிரும், ஐம்பெருங்குழுவும் எண்பேராயத்தவரும் ஒருபுடையே சூழ்ந்துவர, படைவீரரும் பிறரும் மற்றொருபுடையே அணிபெறவர, வஞ்சி நகரத்தை விட்டு நீங்கிச் சென்றனன். அச் செலவு,

வளமலர்ப் பூம்பொழில் வானவர் மகளிரொடு
விளையாட்டு விரும்பிய [3] விறல்வேல் வானவன்
[4] பொலம்பூங் காவும் புனல்யாற்றுப் பரப்பும்
இலங்குநீர்த் [5] துருத்தியும் இளமரக் காவும்
[6] அரங்கும் பள்ளியும் ஒருங்குடன் பரப்பி

---

1. மாநீர் வேலி - கரியநீர் மிக்க கடல் சூழ்ந்த ஒரு தீவு.
கடம்பெறிந்தது. இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் மேலைக் கடற்கரைக்கண் உள்ள ஒரு தீவில் இருந்துகொண்டு குறும்பு செய்த பகைவரை வென்று அவர்தம் காவல் மரமான கடம்பு மரத்தைத் தடிந்தான்.

2. இமயத்து வானவர் - இமயமலையில் வாழ்பவர். (முனிவருமாம்) குறிப்பு :—மலைவாழ்பவருட் சிறந்த மக்களை வானவர் என்றும் கூறுப போலும். சேரரையும் தமிழ்நாட்டவர் வானவர் என்று வழங்குதலும் இக் குறிப்புக்குச் சான்று பகருகின்றது. வானவர் தோன்றல் - சேரர்குலத் தோன்றல்.

3. விறல் வேல் வானவன் - விறல் பொருந்திய வேலேந்திய இந்திரன்.

4. பொலம் பூங்கா - பொற்பூக்களையுடைய கற்பகச் சோலை.

5. துருத்தி - ஆற்றிடைக் குறை.

6. அரங்கு - நாடகசாலை ; பள்ளி - மண்டபம்.

ஒருநூற்று நாற்பது யோசனை விரிந்த
[1]பெருமால் களிற்றுப் பெயர்வோன் போன்று

இருந்தது. இவ்வாறு சென்ற குட்டுவன் மலைச்சாரலில், திருமாலின் மார்பில் விளங்கும் முத்துமாலை போலக் கிடந்து தன் தெளிந்த நீரால் இனிய காட்சி வழங்கும் பேரியாற்றின் மணல் பரந்த அடைகரையை அடைந்தான். ஆங்கு, நாகம், சந்தனம் முதலிய பலவகை மரங்கள் செறிந்திருந்தன. நறு மணம் கமழும் பூக்கள் தேன்மிக்குத் திகழ்ந்தன. அத் தேனை யுண்ணும் வண்டும், ஞிமிறும், மதுகரமும் மொய்த்து இனிது பாடின. மேலும்,

குன்றக் குரவையொடு [2]கொடிச்சியர் பாடலும்,
வென்றிச் செவ்வேள் [3]வேலன் பாணியும்,
[4]தினைக்குறு வள்ளையும், புனத்துஎழு [5]விளியும்,

[6]நறவுக்கள் நொடைத்த குறவர் ஓதையும்,
[7]பறையிசை அருவிப் பயங்கெழும் ஓதையும்
புலியொடு பொரூஉம் [8]புகர்முக ஓதையும்,
கலிகெழு மீமிசைச் [9]சேணோன் ஓதையும்
[10]பயம்பில் வீழ்யானைப் பாகர் ஓதையும்

நாலவகைப் படைகளும் இயங்கும் ஓதையும் எனப் பல வகை ஓதை யாங்கணும் ஒலித்தன. இன்ன இன்பக் காட்சியும் இனிய ஓதையும் எங்கும் விளங்கக் கேட்டும் கண்டும் இனிதிருந்த வேந்தர் பெருந்தகையின் திருமுன், குன்றங்

---

1. பெருமால் களிறு - அயிராவதம் என்னும் வெள்ளை யானை.
2. கொடிச்சியர் - குறவர் மகளிர்.
3. வேலன் பாணி - முருகனது வேலேந்தியாடும் வேலனது பாட்டு.
4. தினைக்குறு வள்ளை - தினையிடிப்போர் பாடும் உலக்கைப்பாட்டு.
5. விளி - ஆலோலவோசை.
6. நறவுக்கள் நொடைத்த குறவர் - நறவாகிய கள்ளை விற்கும் குறவரது ஓதை.
7. பறையிசை அருவி - பறைபோல முழங்கும் அருவி.
8. புகர்முகம் - புள்ளி பொருந்திய முகத்தையுடைய யானை.
9. சேணோன் - பரணின்மேல் இருப்பவன்.
10. பயம்பு-யானையைப் படுக்கும் குழி.

களில் உள்ள குறிச்சிகளில் வாழ்ந்த குறவர்கள், தங்கள் அரசர் பெருமானைக் காண்பது குறித்து,

யானை வெண்கோடும், அகிலின் [1]குப்பையும்,
மான்மயிர்க் கவரியும், மதுவின் குடங்களும்,
[2]சந்தனக் குறையும், சிந்துரக் கட்டியும்,
அஞ்சனத் திரளும், அணி யரிதாரமும்,
[3]ஏல வல்லியும், இருங் கறி வல்லியும்,
[4]கூவை நூறும், கொழுங் கொடிக் [5]கவலையும்;
தெங்கின் பழனும், தேமாங் கனியும்,
[6]பைங்கொடிப் படலையும், பலவின் பழங்களும்,
[7]காயமும், கரும்பும், பூமலி கொடியும்,
கொழுந்தாட் கமுகின் கொழுங்குலைத் தாறும்,
பெருங்குலை வாழையின் இருங்கனித் தாறும்;
[8]ஆளியின் அணங்கும், அரியின் குருளையும்,
[9]வாள்வரிப் பறழும், [10]மதகரிக் களபமும்,
குரங்கின் குட்டியும் [11]குடாவடி உளியமும்
வரையாடு [12]வருடையும் மட[13]மான் மறியும்
[14]காசறைக் கருவும் ஆசறு [15]நகுலமும்
பீலி மஞ்ஞையும் [16]நாவியின் பிள்ளையும்
கானக் கோழியும் தேன்மொழிக் கிள்ளையும்

---

1. அகிலின் குப்பை - அகிற்கட்டையின் திரள்.
2. சந்தனக் குறை - சந்தனக் கட்டை.
3. ஏலவல்லி - ஏலக்கொடி.
4. கூவை நூறு - கூவைக் கிழங்கின் பொடி. (மா)
5. கவலை - கவலைக்கிழங்கு.
6. பைங்கொடிப் படலை - பச்சிலைமாலை.
7. காயம் - வெள்ளுள்ளிக்கிழங்கு.
8. ஆளியின் அணங்கு - ஆளியின் குட்டி.
9. வாள்வரிப் பறழ் - புலிக்குட்டி.
10. மதகரிக் களபம் - யானையின் கன்று.
11. குடாவடி உளியம் - பிள்ளைக்கரடி, கரடிக்குட்டி யென்றுமாம்.
12. வருடை - ஒருவகை மான்.
13. மான் மறி - மான் கன்று.
14. காசறைக் கரு - கத்தூரிக் குட்டி.
15. நகுலம் - கீரி.
16. நாவியின் பிள்ளை - புழுகுப் பூனைக் குட்டி.

ஆகிய இவற்றைத் தம் தலைமேல் சுமந்துவந்து, அவன் திருவடியில் வைத்து, நிலத்தே வீழ்ந்து வணங்கி, "ஏழ் பிறப்படியேம், வாழ்கநின் கொற்றம்" என வழிபட்டு நின்றனர். அவர்களை அருளொழுக நோக்கிய செங்குட்டுவன், இனிய சொற்களை வழங்கினன். பின்பு, அக் குறவர்கள் கண்ணகி வானநாடு சென்ற செய்தியைத் தெரிவிக்கலுற்று,

கான வேங்கைக் கீழோர் காரிகை
தான்முலை இழந்து தனித்துயர் எய்தி
வானவர் போற்ற [1]மன்னொடும் கூடி
வானவர் போற்ற வானகம் பெற்றனள் !
எந்நாட் டாள்கொல் ? யார்மகள் கொல்லோ ?
நின்னாட்டு யாங்கள் நினைப்பினும் அறியேம் ;
பன்னூ ராயிரத் தாண்டு வாழியர்,

என்று மொழிந்தனர். அப்போழ்து, அரசன் அருகே தண்டமிழ் ஆசானாகிய சாத்தனார் வந்து அவனது ஆட்சி நலத்தைக் கண்டு பெரு மகிழ்வு கொண்டு உடனிருந்தார். அவர், இக் குறவர் தெரிவித்ததைக் கேட்டு அரசன் வியந்து நோக்கக் கண்டு, கண்ணகி தன் காதலனுடன் மதுரைக்குப் போந்ததும், ஆங்கே சிலம்பு காரணமாகக் கோவலன் கொலையுண்டதும், கண்ணகி பாண்டியன்முன் தன் செவ்விய சிலம்பு காட்டி வழக்குரைத்து வஞ்சினம் சாற்றியதும், மதுரை மூதூர் தீக்கிரையானதும், பிறவும் கூறி,

"அரிமான் ஏந்திய அமளிமிசை யிருந்த
[2] திருவீழ் மார்பின் தென்னவர் கோமான்
தயங்கிணர்க் கோதை தன்துயர் பொறான்
மயங்கினன் கொல் என மலரடி வருடித்
[3] தலைத்தாள் நெடுமொழி தன்செவி கேளாள்,

---

1. மன் - கணவன்.

2. திருவீழ் மார்பின் தென்னவன் - திருமகள் விரும்பும் மார்பினை யுடைய பாண்டியன்.

3. தலைத்தாள் நெடுமொழி - கண்ணகி சொல்லிய வீரமொழி ; பாண்டியன் தேவி உடனே உயிர்விட்டதனால், கண்ணகியின் வீரமொழியை முடியக் கேட்டிலள் என்றற்கு, " தன் செவி கேளாள் " என்றார்.

கலக்கம் கொள்ளாள், கடுந்துயர் பொருள்,
மன்னவன் செல்வுழிச் செல்கயான் எனத்
தன் உயிர் கொண்டு அவனுயிர் தேடினள்போல்
பெருங்கோப் பெண்டும் ஒருங்குடன் மாய்ந்தனள் ;

அவனது கொடுங்கோலின் தன்மை இத்தன்மைத்து எனத் தலைமை வேந்தனாகிய நின்பால் முறையிடுவாள்போல, அப் பத்தினி நங்கை நின் நாட்டிற்குப் போந்து, வானக வாழ்க்கை பெற்றாள் ; நின் வலம்படு கொற்றம் வழிவழிச் சிறக்க" என மொழிந்து வாழ்த்தினர்.

இதைக் கேட்ட செங்குட்டுவன், பாண்டி வேந்தன் உயிர்விட்டது குறித்து மனம் வருந்திப் பின் தெளிந்து,

எம்மோர் அன்ன வேந்தற்கு உற்ற
[1] செம்மையின் இகந்தசொல் செவிப்புலம் படாமுன்
[2] உயிர்பதிப் பெயர்த்தமை உறுக ஈங்குஎன
வல்வினை வளைத்த கோலை, மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது ;
மழைவளம் கரப்பின் வான்பேர் அச்சம் ;
[3] பிழை உயிர் எய்தின் பெரும்பேர் அச்சம்
[5] குடிபுர வுண்டும் கொடுங்கோல் அஞ்சி
[4] மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பமல்லது [6]தொழுதகவு இல் எனத்

தனக்குச் செய்திகளை யுரைத்த தண்டமிழ் ஆசானுக்கு உரைத்தான். இப் பேச்சுக்களைக் கேட்டு வியப்புற்றிருந்த தன் தேவியை நோக்கி, " தன் கணவன் உயிர் விடவே அவன் உயிரைத் தொடர்ந்து உயிர் துறந்த பாண்டிமா

---

1. செம்மையின் இகந்த சொல் - செங்கோன்மை தவறினான் என்ற சொல். செவிப்புலம் படாமுன்-ஏனை வேந்தர்களின் செவிக்கு எட்டு முன்பே.

2. உயிர்பதிப் பெயர்த்தமை - உடம்பினின்றும் உயிர் நீங்கினமை.

3. பிழை உயிர் எய்தின் - உயிர்கள் யாதானுமொன்றால் வருத்தம் எய்தின்.

4. குடிபுரவுண்டும் - குடிகள் இனிது காக்கப்பட்டவழியும்.

5. மன்பதை - மக்களினம்.

6. தொழுதகவு - யாவரும் பாராட்டத்தக்க சிறப்பு.

தேவியோ, நம் நாடு போந்து வானநா டடைந்த கண்ணகி யாரோ; இவருள், "நீ வியக்கும் நலமுடையோர் யாவர்?" என உசாவினன். அவனுக்கு வேண்மாள் மிக்க மகிழ்ச்சியுடன் விடை கூறலுற்று,

> காதலன் துன்பம் காணாது கழிந்த
> [1] மாதரோ பெருந்திரு உறுக வானகத்து ;
> அத்திறம் நிற்க,நம் அகல்நாடு அடைந்தஇப்
> பத்தினிக் கடவுளைப் [2]பரசல் வேண்டும்

என்றனள். அரசற்கும் அதுவே கருத்தாதலால், அவன் அமைச்சரை நோக்கினன். அக்குறிப் பறிந்த அமைச்சர்,

> [3] ஒற்கா மரபின் பொதியி லன்றியும்,
> வில்தலைக் கொண்ட வியன்பேர் இமயத்துக்
> கல்கால் கொள்ளினும் கடவு ளாகும் ;
> கங்கைப் பேர்யாற்றினும், காவிரிப் புனலினும்
> தங்கிய [4]நீர்ப்படை தகவோ உடைத்து எனக்(கூறினர்.)

உடனே செங்குட்டுவன் முற்பட்டுக் கூறத் தொடங்கி,

> பொதியிற் குன்றத்துக் கற்கால் கொண்டு
> முதுநீர்க் [5]காவிரி முன்துறைப் படுத்தல்
> [6] மறத்தகை நெடுவாள் எம் குடிப் பிறந்தோர்க்குச்
> சிறப்பொடு வரூஉம் செய்கையோ அன்று ;

இனி, அவ்விமய மலையாசன் நம் மாபெரும் பத்தினியின் படிமம் சமைத்தற்கு வேண்டும் கல்லைத் தாரானாயின், நிலையாமைப் பொருட்டாகிய காஞ்சியும், மகட்பாற்காஞ்சி a, பெருங்காஞ்சி b, என்பனவும், குடைநிலைவஞ்சி c, கொற்ற

---

1. மாதரோ பெருந்திரு உறுக - அவன் தேவி வானுலகில் சிறப்பெய்துக ;
2. பரசல் வேண்டும் - கொண்டாட வேண்டும்.
3. ஒற்கா மரபு - குன்றாத சிறப்பு முறை.
4. நீர்ப்படை - நீராட்டுதல்.
5. காவிரிமுன் துறை - காவிரியாற்றின் நீர்த் துறையில்.
6. மறத்தகை - வீரத்தால் தகுதி மிகவுடைய.

குறிப்பு : a. பெண் வேண்டிப் போர் உடற்றல்.
b. எதிர்த்துப் போருடற்றல்.
c. குடைநாட் கொள்வல்.

வஞ்சி[d], மாராயவஞ்சி[e], பெருவஞ்சி[f], பெருஞ்சோற்று வஞ்சி[g], கொற்றவள்ளை[h] என்பனவும்,

[1] வட்கர் போகிய வான்பனந் தோட்டுடன்
[2] பூட்கைச் சேனை பொலியச் சூட்டிப்
[3] பூவா வஞ்சிப் பொன்னகர்ப் புறத்துஎன்
வாய்வாள் மலைந்த வஞ்சி சூடுதும்

என்று மொழிந்தான்.

இதன்பின் வில்லவன்கோதை என்னும் அமைச்சன், "பல்யாண்டு வாழ்க நின் கொற்றம்" எனத் தொடங்கி, கொங்கு நாட்டில் சோழ பாண்டியரொடு பொருதுபெற்ற வெற்றியும், கொங்கணர், கலிங்கர், கருநாடர், பங்களர், கங்கர், கட்டியர் முதலிய வட ஆரிய மன்னர் எதிர்ந்த செருக்களத்தில், குட்டுவன் தன் யானைப் படையைச் செலுத்தி வாகை சூடிய திறமும் எடுத்துக் கூறினன். அதன்மேலும் அமையாது,

கங்கைப் பேர்யாற்றுக் கடும்புனல் நீத்தம்
[4] எம்கோ மகளை ஆட்டிய அந்நாள்
ஆரிய மன்னர் ஈரைஞ் ஞூற்றுவர்க்கு
[5] ஒருநீ ஆகிய செருவெம் கோலம்
கண்விழித்துக் கண்டது கடுங்கண் கூற்றம்;

---

d. அரசனது வெற்றி மிகுதி.
e. அரசனால் சிறப்பு எய்தும் நிலை.
f. பகைவர் நாட்டைக் கொளுத்துதல்.
g. வீரர்க்குப் பெருஞ்சோறளித்தல்.
h. அரசன் வெற்றிச் சிறப்புக் கூறிப் பகைவர் நாடு அழிந்தது குறித்து இரங்குதல்.

1. வட்கர் போகிய - இடையில முரிதல் இல்லாத.
2. பூட்கை - மேற்கோள்; (துணிவுமாம்.) இது புட்கை என்பதன் விகாரம் என்பர் அரும்பத வுரைகாரர்.
3. பூவா வஞ்சி - வஞ்சிமாநகர்.
4. எம் கோமகள் - செங்குட்டுவன் தாய். அவளையும் செங்குட்டுவன் கொண்டுபோய் நீராட்டினன் என்பர்.
5. ஒரு நீ ஆகிய செருவெங் கோலம் - நீ ஒருவனாகவே செய்த போர்த் திறம்.

[1] இமிழ்கடல் வேலியைத் தமிழ்நா டாக்கிய
இதுநீ கருதினை யாயின், ஏற்பவர்
[2] முதுநீர் உலகில் முழுவதும் இல்லை ;
இமயமால் வரைக்கு எங்கோன் செல்வது
கடவுள் எழுத ஓர் கற்கே ;

ஆதலால், வடநாட்டு வாழும் மன்னர்கட்கு வில்லும் மீனும் புலியும் எழுதிய தமிழ் இலச்சினையிட்ட ஓலை வரைந்து விடுதல் ஒன்றே அமையும் ; அது செய்க என்று உரைத்தான்.

அவனுக்குப்பின் அழும்பில் வேள் என்பவன், எழுந்து வணங்கி நின்று,

[3] நாவலந் தண்பொழில் நண்ணார் ஒற்று,நம்
காவல் வஞ்சிக் [4]கடைமுகம் பிரியா ;
[5] வம்பணி யானை வேந்தர் ஒற்றே
தம்செவிப் படுக்கும் தகைமைய அன்றோ ?

ஆதலால், நம் செலவினை நம் வஞ்சிமா நகர்க்கண் பறை யறைவித்துத் தெரிவித்தல் ஒன்றே சாலும் என்றான். அரச னும் அதனை யுடன்பட்டு சேர்ந்து, பேரியாற்றங்கரையின் நீங்கி வஞ்சிநகர்க்குத் திரும்பிச் சென்று, மேலே தான் முடிவு செய்தவாறே பறை அறைவித்தான்.

வாழ்க எங்கோ மன்னவர் பெருந்தகை
ஊழிதோறு ஊழி உலகம் காக்கென ;
வில்தலைக் கொண்ட வியன்பேர் இமயத்துஓர்
கற்கொண்டு பெயரும் எம்காவலன் ; ஆதலின்,
வடதிசை மருங்கின் மன்னர் எல்லாம்

---

1. இமிழ்கடல வேலி - ஒலிக்கின்ற கடலை எல்லையாகவுடைய மண்ணுலகு ஆக்கிய இது - ஆக்குதற்குத் துணியும் இது.

2. முதுநீர் - கடல்.

3. நாவலந் தண்பொழில் - இமயத்துக்கும் குமரிக்கும் இடைக் கிடந்த நாடு.

4. கடைமுகம் பிரியா - நகரின் கடைப்புறத்தை விட்டு நீங்காது இருக்கின்றன.

5. வம்பணி யானை - கச்சையணிந்த யானை.

[1] இடுதிறை கொடுவந்து எதிரீராயின்,
[2] கடற்கடம்பு எறிந்த கடும்போர் வார்த்தையும்,
விடர்ச்சிலை பொறித்த வியன்பெரு வார்த்தையும்
கேட்டு வாழுமின் ; கேளீராயின்,
[3] தோள்துணை துறக்கும் துறவொடு வாழுமின் ;
தாழ்கழல் மன்னன் தன் [4] திருமேனி
வாழ்க சேனுமுகம் என வாழ்த்தி,

யானை எருத்தத்திருந்து, நகர் முழுதும் பறை அறைவிக்கப் பெற்றது.

---

1. இடுதிறை - செலுத்துதற்குரிய திறை.
எதிரீராயின் - எதிரேற்றுக் காணீராயின்,

2. கடற்கடம்பு எறிந்தது - நெடுஞ்சேரலாதன் கடம்பர்களை வென்றது. (காதை. 25. காண்க)

3. தோள்துணை - மகளிர்.

4. திருமேனியாகிய சேனுமுகம் வாழ்க. சேனுமுகம் அரசனுக்குச் சிறந்தமையின், 'திருமேனி' என்றார்.

# உசு. கால்கோட் காதை

செங்குட்டுவன் கண்ணகிக்குப் படிமம் சமைப்பதற் காகக் கல் கொணர்வது குறித்து வடநாட்டிற்குச் செல்லக் கருதிய செய்தியை வஞ்சி நகர மக்கட்குப் பறையறைவித்துத் தன் அரசவையில் இருப்ப, ஆசான் பெருங்கணி, அமைச் சர், தானைத் தலைவர் முதலாயினோர் அவற்கு, வடநாட்டுச் செலவின்கண் செய்ய வேண்டிய முறைகள் சிலவற்றை எடுத்து மொழிந்தனர். அவற்றைக் கேட்ட அவனுக்கு முன்பு ஒருகால், இமயவரை யிடத்திருந்து சில முனிவர் வந்து வடநாட்டில் நிகழ்ந்ததாகக் கூறிய நிகழ்ச்சி யொன்று அவன் நினைவிற்கு வந்தது. அதனால், அவன்,

இமையத் தாபதர் எமக்கீங்கு உணர்த்திய
[1] அமையா வாழ்க்கை அரசர் வாய்மொழி
[2] நம்பால் ஒழிகுவதாயின், ஆங்கு, அஃது
எம்போல் வேந்தர்க்கு இகழ்ச்சியும் தரூஉம்
வடதிசை மருங்கின் மன்னர்தம் முடித்தலைக்
கடவுள் எழுத ஓர் கற்கொண் டல்லது
வறிது மீளும் என் வாய் வாளாகின்,
செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப்
பகையரசு நடுக்காது [4]பயங்கெழு வைப்பின்
[5] குடிநடுக்குறூஉம் கோலேன் ஆகஎனத்

---

1. அமையா வாழ்க்கை - நிரம்பாத உயிர் வாழ்க்கை ; பயனில்லாத வாழ்க்கை.

2. நம்பால் ஒழிகுவதாயின் - நம்மிடத்தே கிடந்து விடுமாயின். எம் போல் வேந்தர் - சோழ பாண்டியர்.

3. என் வாய்வாள் வறிது மீளுமாயின் - எனது தப்பாத வாள் வறிதே திரும்புமாயின் ; கற்கொள்ளாது வறிது மீளுவேனாயின்.

4. பயம் கெழு வைப்பின் - நல்ல பயன் தரும் நிலவுலகில், உயிர்க்கு உறுதி பயக்கும் நல்வினை செய்தற்குரிய இடமாகலின், இவ்வுலகை, "பயங்கெழு வைப்பு" என்பர்.

5. குடி நடுக்குறூஉம் ; குடிகளை நடுங்குவிக்கும். (கொடுங்கோலன் ஆகுக.)

தன் வெகுட்சி தோன்றக் கண் சிவந்து கூறினான். உடனே ஆசான் பெருங்கணி எழுந்து, "பெரும, அவ் வடவாரிய மன்னர் சோழ பாண்டியரை யல்லது நின்னை இகழ்ந்து கூறினாரல்லர்; நீ இவ்வாறு வஞ்சினங் கூறற்கு, நின்னை எதிர்க்கும் மன்னரும் உளரோ? ஆகலால், நின் சினந்தணிக" என்று கூறினன். காலக்கணக்கர், செல்லுதற்குரிய காலத்தை யறிந்து, "அரசே, நின் திருமலர்த் தாமரைச் சேவடிக்கண் எல்லா வரசரும் பணிதற்கேற்ற நாழிகை இதுவே; ஆகலின், இதுபோதே போர்க்கு எழுவா யாக" என்று மொழிந்தான். அரசனும் அதற்குடன்பட்டு அக்காலம் தவறு வண்ணம் முன்னதாக, வாளும் குடையும் நாட்கொள்ளுமாறு பணித்தான். பொருநர் ஆர்த்தனர்; முரசங்கள் முழங்கின; கொடிகள் மிகப் பல நிரை நிரையாக எடுக்கப்பெற்றன; பல்வகைத் தானைகளும் கடல்போல் பரந்து எழுந்தன.

ஐம்பெருங் குழுவும் எண்பே ராயமும்
வெம் பரியானை வேந்தற் கோங்கிய
[1] கரும வினைஞரும் [2]கணக்கியல் வினைஞரும்
[3] தரும வினைஞரும் [4]தந்திர வினைஞரும்

பட்டத் தியானையின் எருத்தின்மேல் வாளும் குடையும் ஏற்றி, பல்வகைச் சிறப்பும் விளங்கப் புறமதில்வழியே புறப்பாடு செய்தனர். பின்னர் அரசன் பெரும்படைத் தலைவர்க்குப் பெருஞ்சோற்று விருந்தளித்து, காலை முரசம் கடை வாயிலில் முழங்கும், செய்வன செய்துகொண்டு, பிறை முடித்த இறைவன் கோயிற்குச் சென்று அவன் திருவடிக்கண் இறைஞ்சி வலங்கொண்டு, கடக்களி யானையின் எருத்தின்மேல் இவர்ந்து செல்லத் தொடங்கினான். வழியில்,

1. கரும வினைஞர் - புரோகிதர்.
2. கணக்கியல் வினைஞர் - கணிதநூற் புலவர்.
3. தரும வினைஞர் - அறப் பணியாளர்.
4. தந்திர வினைஞர் - தானைத் தலைவர் முதலாயினர்.

[1] ஆடக மாடத் தறிதுயில் அமர்ந்தோன்
[2] சேடங் கொண்டு சிலர்நின்று ஏத்த,
தெண்ணீர்க் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்,
ஆங்கது வாங்கி அணிமணிப் புயத்துத்
தாங்கின னாகித் தகைமையின் செல்வுழி,

நாடக மடந்தையர் நலங்கொளப் பரவினர்; [3]மாகத ரும் [4]வைதாளிகரும், [5]சூதரும் கூடிச் சூழ்ந்து ஏத்தினர்; யானை வீரரும் குதிரை வீரரும் வாள் மறவரும் செங்குட்டு வனது நாள்வலம் புகழ்ந்தனர். இவ் வேத்தொலியின் இடையே சென்ற சேரன் செங்குட்டுவன் கடல்போல் பரந்து வரும் தானையுடன் நீலகிரி என்னும் மலையடி யடைந்து, ஆங்கே சமைக்கப்பெற்றிருந்த பாடி யிருக்கையில் தங்கி னான்.

அக்காலே, அவனது தானையின் பேரோசை கேட்ட விசும்பிலியங்கும் முனிவர் சிலர், நிலத்திடை யிழிந்து வந்து மன்னவன் முன் நின்றனர். அவர்களைக் கண்டதும் சேர மான் பொருக்கென எழுந்து அவர்கள் திருவடியில் வணக் கம் செய்ய, அவர்கள் மகிழ்ந்து,

செஞ்சடை வானவன் அருளினில் விளங்க
வஞ்சித் தோன்றிய வானவ, கேளாய்
[6] மலயத்து ஏகுதும்; வான்பேர் [7]இமய
நிலயத்து ஏகுதல் நின்கருத்து ஆகலின்
அருமறை அந்தணர் ஆங்குளர் வாழ்வோர்,
பெருநில மன்ன! காத்தல் நின் கடன்

1. ஆடக மாடம் : பொற்கோயில்.
2. சேடம் : படைப்புப் பொருளாய துழாய் முதலியன. இனி, சட கோபம் எனப்படுவதுமாம்.
3. மாகதர் - இருந்தேத்துவோர்.
4. வைதாளிகர் - பலவகைத் தாளத்தில் ஆடுவோர்.
5. சூதர் - நின்றேத்துவோர்.
6. மலயம் - பொதியில் மலை.
7. இமயநிலயம் - இமயவரையின் அடி நிலப்பகுதி.

என்று உரைத்து, அவனை வாழ்த்திவிட்டுச் சென்றனர். பின்பு, கொங்கணக் கூத்தரும் கருநாடரும் பிறரும் வந்து, "மறவாள் வேந்தே, ஊழி வாழி" எனப் பரவிப் பரிசு பெற்றனர். ஏத்தாளர் அவன் புகழை யேத்தினர். அதுபோது, நாடக மகளிரும், குயிலுவரும், வேழம்பரும், பிறரும் அளவிலராய்ப் போதர, ஐஞ்ஞூறு யானையும், பதினாயிரம் குதிரையும், இருபதினாயிரம் தேரும் கொண்டு, சஞ்சயன் என்னுந் தூதுவனைத் தலைவனாகக் கொண்ட கஞ்சுக முதல்வர் ஆயிரவர் வந்து பாடியிருக்கையின் வாயிலை யடைந்தனர். வாயிலாளர் அவர் வரவைச் சேரனுக்குத் தெரிவித்து, அவன் அருள் பெற்று அவருட் சஞ்சயனை அரசன்முன் வரவிடுத்தனர். உள்ளே புகுந்த சஞ்சயன், அரசனை வணங்கி, தன்னொடு போந்தாரையும், போந்த படையையும் காட்டி, "அரசே, யாம் வடநாட்டு நூற்றுவர் கன்னர் வரவிட்ட தூதரேம். அவர்கள்,

வடதிசை மருங்கின் [1]வானவன் பெயர்வது
கடவுள் எழுத ஓர் கற்கே, ஆயின்,
ஓங்கிய இமயத்துக் [2]கற்கால் கொண்டு
[3]வீங்குநீர்க் கங்கை நீர்ப்படை செய்துஆங்கு
யாந்தரும் [4]ஆற்றலம் என்றனர்

என்று கூறினர். அதுகேட்டு உவகை பூத்த செங்குட்டுவன்,

"பாலகுமரன் மக்கள் மற்றவர்,
காவா நாவிற் கனகனும் விசயனும்
விருந்தின் மன்னர் தம்மொடும் கூடி
[5]அருந்தமிழ் ஆற்றல் அறிந்திலர் ஆங்குஎனக்

---

1. வானவன் - சேரன் செங்குட்டுவன்.
2. கற்கால் கொண்டு - கல் பெயர்த்துக் கொண்டு.
3. வீங்கு நீர் - மிக்க நீர்.
4. ஆற்றலம் - ஆற்றலை யுடையேம்.
5. அருந்தமிழ் ஆற்றல் - அரிய தமிழ் நாட்டவரது ஆற்றலை.
   அறிந்திலர் - அறியாது சிலர் பிதற்றினர்.

[1] கூற்றக் கொண்டிச் சேனை செல்வது,
நூற்றுவர் கன்னர்க்குச் சாற்றி யாங்குக்
கங்கைப் பேர்யாறு கடத்தற்கு ஆவன
[2] வங்கப் பெருநிரை செய்க தாம்

எனச் சொல்லிவிட, சஞ்சயன் பணிந்து விடைபெற்றேகினன். பின்பு, தென்னர் விட்ட திறையாகிய சந்தனமும் முத்தும் கொண்டு முன் வைப்ப, அத்தென்னவர்க்கு, முடங்கலெழுதி வந்தார்க்கு வழங்கினன்; அம் முடங்கலைப் பெற்று அவர் சென்றபின், சேரமான் தன் பாடியிருக்கை நீங்கி, கன்னர் காக்கும் கங்கைப் பேர் யாறு அடைந்து, அவரால் பெற்ற வங்கத்தின் வழியாக அவ்யாற்றைக் கடந்து, வடமருங்கு எய்தினன். அங்கே, கன்னர் பலரும் எதிர்கொண்டு சிறப்புச் செய்தனர். பின்பு, அவர் பக்கல் நீங்கி, வடநாடு அடைந்து, வடவாரியப் பகைவேந்தர் புலத்தே பாசறை சமைத்துத் தன் தானையுடன் செங்குட்டுவன் தங்கியிருந்தான். இதனை யறிந்த வடவாரியப் பகைமன்னரான கனகவிசயர் என்பார், உத்தரன், விசித்திரன், உருத்திரன், பைரவன், சித்திரன், சிங்கன், தனுத்தரன், சிவேதன் என்ற வேறு பல ஆரிய வேந்தரின் துணை கொண்டு, பெரும் படையுடன் போந்து போர் எதிர்ந்தனர்.

இரைதேர் வேட்டத்து எழுந்த [3]அரிமா
[4] கரிமாப் பெருநிரை கண்டு உளம்சிறந்து
பாய்ந்த பண்பின், பல்வேல் மன்னர்
[5] காஞ்சித் தானையொடு காவலன் [6]மலைப்ப,

போர்ப்பறை எங்கும் ஒலித்தது; மயிர்க்கண் முரசம் மாதிரத் திசைத்தது.

---

1. கூற்றக் கொண்டிச் சேனை - கூற்றம்போல உயிர்க் கொள்ளை கொள்ளும் சேனை,
2. வங்கப் பெருநிரை - கப்பல்களின் பெரிய நிரை (வரிசை)
3. அரிமா - சிங்கம்.
4. கரிமா - யானை, பாய்ந்த பண்பின் - பாய்ந்த செய்கைபோல,
5. காஞ்சித் தானை - எதிர் ஊன்றிய தானை.
6. மலைப்ப - போர் செய்ய.

சிலைத்தோள் ஆடவர் செருவேல் தடக்கையர்
[1] கறைத்தோல் மறவர் கடுந்தேர் ஊருநர்
வெண்கோட்டு யானையர் விரைபரிக் குதிரையர்

இருமருங்கும் பெரும்போர் உடற்றினர். [2] தாரும் தாரும் தம்முள் பொருதன; தோளும் தோளும் துணிந்து வேறாயின. எங்கும் வேலும் வாளும் துணிபட்டுக் குவிந்தன. குறையுடற் பிணங்கள் மலைபோல் பிறங்கின; குருதி வெள்ளம் பெருக்கெடுத் தோடிற்று.

அடுந்தேர்த் தானை ஆரிய அரசர்
[3] கடும்படை மாக்களைக் கொன்றுகளம் குவித்து
நெடுந்தேர்க் கொடுஞ்சியும் கடுங்களிற் றெருத்தமும்
விடும்பரிக் குதிரையின் [4]வெரிநும் பாழ்பட
[5] எருமைக் கடும்பரி யூர்வோன் [6]உயிர்த்தொகை
ஒருபகல் எல்லையில் உண்ணும் என்பது
ஆரிய வரசர் அமர்க்களத்து அறிய

[7]நூழிலாட்டி வெற்றி மேம்பட்டுச் செங்குட்டுவன் செருச் செய்வது கண்ட ஆரிய வேந்தரான கனக விசயர்கள், போருக்கு ஆற்றாது அஞ்சி ஓடத் தலைப்பட்டனர். அவர்தம் படையினருள், பலர்,

சடையினர், [8]உடையினர், சாம்பற் பூச்சினர்,
[9] பீடிகைப் பீலிப் பெரு நோன்பாளர்,

---

1. கறைத்தோல் மறவர் - கருங்கடகு ஏந்திய வீரர். (கடகு - Shield)
2. தார் - தூசிப்படை. (Vanguard of the army)
3. கடும்படை மாக்கள் - ஆரிய வரசரின் கடிய படையேந்திய வீரர்கள்.
4. வெரிந் - முதுகு.
5. எருமைக் கடும்பரி ஊர்வோன் - எருமை யூர்தியையுடைய கூற்றுவன்.
6. உயிர்த்தொகை - உயிர்களின் தொகுதி.
7. நூழிலாட்டி - கொன்று குவித்து.
8. உடையினர் - காஷாய உடையினர்.
9. பிடிகைப் பீலிப் பெரு நோன்பாளர் - பிடிகையிடத்துப் பீலியேந்தித் திரியும் பெரிய நோன்பிகளாகிய புத்த துறவிகள்.

[1] பாடு பாணியர், [2]பல்லியத் தோளினர்,
ஆடு கூத்த ராகி எங்கணும்
ஏந்துவாள் ஒழியத் தாம்[3]துறை போகிய

பிச்சைக் கோலம் பூண்டு வீற்றுவீற்றாகச் சிதறிப் போயினர். ஏனையோர் போரிற் பட்டழிந்தனர். பின்பு செங்குட்டுவன், தன் வீரர்பால், முன்பு முனிவர்கள் செய்து கொண்ட முறைக்கேற்ப, வடநாட்டு மறையவர்களைக் காத்தோம்புமாறு கட்டளையிட்டு, வில்லவன்கோதை யென்னும் அமைச்சனுடன் பல்வகைப் படைகளையும் விடுத்து, "பொற்கோட்டிமயத்துப் பொருவறு பத்தினிக்குக்" கற் செய்தலைக் கால் கொண்டான்.

1. பாடு பாணியர் - பாடுதற்கெடுத்த தாளமுடையர்.
2. பல் இயம் - பலவாகிய வாச்சியங்கள்.
3. துறை போகிய - வல்லமை பெற்றுள்ள.

## உள. நீர்ப்படைக் காதை

கண்ணகியாகிய கற்புக்கடவுட்குக் கற்கோடல் வேண்டி, வடவிமயம் போந்த தமிழ் வேந்தனுடன் ஆரிய மன்னரான கனக விசயர்கள் செய்த போர் பதினெட்டு நாழிகையில் முடிந்தது. அதனால், இமையவர்க்கும் அசுரர்க்கும் நடந்த போர் பதினெட் டியாண்டும், இராமனுக்கும் இராவணனுக் கும் நடந்தது பதினெட்டுத் திங்களும், பாரதப் போர் பதி னெட்டு நாளும் நடந்தது போல, கனக விசயர் போர் பதி னெட்டு நாழிகையில் முடிந்தது என உலகர் கூறலுற்றனர். தோல்வியுற்ற கனக விசயர் முடிமீது கண்ணகிக் கடவுட் பொருட்டு எடுத்த கல்லை யேற்றிக் கங்கைப் பேர் யாற்றுக்கு நீர்ப்படை செய்வான் வரலாயினன்.

செறிகழல் வேந்தன் தென்தமி ழாற்றல்
அறியாது மலைந்த ஆரிய மன்னரை
வருபெருந் தானை [1]மறக்கள மருங்கின்
[2]ஒருபகல் எல்லை உயிர்த்தொகை யுண்ட
செங்குட் டுவன்தன் சினவேல் தானையொடு
கங்கைப் பேர்யாற்றுக் கரையகம் புகுந்து

வடகரையில் தங்கி, அக் கல்லை நூலோர் கூறிய நெறிப் படி நீராட்டுமாறு பணித்தான். அவ்வாறே, கல்லும் செவ்வே நீராட்டப்பட்டது. பின்னர், நூற்றுவர் கன்னர் அமைத்த நாவாய்களில் செங்குட்டுவன் தன் சுற்றமும் தானையுமாகக் கடந்து சென்று, கங்கையின் தென்கரையை அடைந்தான். அங்கேயிருந்த பரந்த வெளியில் அவனும் அவன் தானையும் தங்குதற்காக,

மன்பெருங் கோயிலும் மணிமண் டபங்களும்
பொன்புனை யரங்கமும் புனைபூம் பந்தரும்

---

1. மறக்களம் - போர்க்களம்.
2. ஒரு பகல் எல்லை - ஒருநாளைப் பொழுதிற்குள்.

[1] உரிமைப் பள்ளியும் விரிபூஞ் சோலையும்
[2] திருமலர்ப் பொய்கையும் [3]வரிகாண் அரங்கமும்
பேரிசை மன்னர்க் கேற்பவை பிறவும்

ஆரிய மன்னரால் அழகுற அமைக்கப்பெற் றிருந்தன. அப் பாடியின்கண் இனிதிருந்த வேந்தன், தான் செய்த போரில் உயிர் கொடுத்துப் புகழ்பெற்ற தன் தானை வீரர் கட்குச் சிறப்புச் செய்து, உயிர் துறவாதே வெற்றி கொண்டு நின்ற வீரர்கட்கு, வெற்றிக் குறியாகப் பொன்னாற் செய்த வாகைப் பூக்களைத் தந்து, தான் தன் பிறந்த நாள் விழாவிற் செய்யும் கொடையினும் சாலச் சிறந்த கொடையினை வழங் கிப் புலவர் பாடும் புகழ் படைத்து விளங்கி யிருந்தான். அப் போது மாடலன் என்னும் மறையோன் அவன்பால் வந்து, வாழ்த்தி நின்று,

வாழ்க எம்கோ, மாதவி மடந்தை
[4] கானற் பாணி கனக விசயர்தம்
[5] முடித்தலை நெரித்தது; முதுநீர் ஞாலம்
[6] அடிப்படுத் தாண்ட அரசே வாழ்க

என்று மொழிந்தான். இது கேட்ட சேரர் பெருமான் அவன் கருத்தை அறியானாய்,

பகைப்புலத் தரசர் பலர்அறி யாத
[7] நகைத்திறம் கூறினை; நான்மறை யாளா,
யாதுநீ கூறிய உரைப்பொருள் ?

என்று வினவினன். மாடல மறையோன், அதனைக் கூறலுற்று, கண்ணகி கோவலனுடன் மதுரைக்குப் போந்த

---

1. உரிமைப் பள்ளி - உரிமையோர் இருக்கும் இடம்.
2. திருமலர்ப் பொய்கை - தாமரைப் பூக்கள் நிரம்பவுள்ள பொய்கை.
3. வரிகாண் அரங்கம் - கூத்துக் காணும் அரங்கு.
4. கானற் பாணி - கானல்வரிப் பாட்டுக்கள்.
5. முடித்தலை நெரித்தது - முடிதாங்கிய தலையை நெரித்தது.
6. அடிப்படுத்து - தன் ஆட்சியின் கீழ் நிற்ப.
7. நகைத் திறம் - நகத்தக்கது ஒன்று.

தும், கோவலன் கொலையுண்டதும், கண்ணகி வழக்குரைத்து நகரைத் தீக்கிரையாக்கியதும், பின் சேரநாடு போந்து வேங்கை நீழலில் விண்ணவர் தோன்றத் தோன்றிய கோவலனுடன் விண்ணாடு புக்கதும் பிறவும் கூறி,

[1] மாமுனி பொதியில் மலைவலம் கொண்டு
குமரியம் பெருந்துறை யாடி மீள்வேன்
வாய்வாள் தென்னவன் மதுரையிற் சென்றேன் ;
[2] வலம்படு தானை மன்னவன் தன்னைச்
சிலம்பின் வென்றனள் சேயிழை என்றலும்,
[3] தாதெரு மன்றத்து மாதரி எழுந்து
கோவலன் தீதிலன், கோமகன் பிழைத்தான்,
அடைக்கலம் இழந்தேன், இடைக்குல மாக்காள்,
குடையும் கோலும் பிழைத்த வோஎன

இடையிருளில் எரிமூட்டி அதனகன் வீழ்ந்து இறந்தாள். இச்செய்திகளைக் கேள்வியுற்ற கவுந்தியடிகள், பாண்டிய வேந்தன்பால் மிக்க சினங் கொண்டாள். ஆனால், அவன் அவளது சாபம் பெறுதபடி உயிர் இழந்துவிட்டதனால், இக் கோவலன் முதலாயினார்க்கு வரக்கூடிய இத் தீவினைப் பயன் என் வாயிலாக வந்தது என்றெண்ணி, உண்ணா நோன்பு மேற்கொண்டு உயிர் துறந்தனள். பின் யான் என் ஊர்க்குச் சென்று, அங்கே கோவலன் கண்ணகி என்ற இருவரது பெற்றோரையும் கண்டேன்.

மைந்தற் குற்றதும் மடந்தைக் குற்றதும்
செங்கோல் வேந்தற் குற்றதும் கேட்டுக்
கோவலன் தாதை கொடுந்துய ரெய்தி
[4] மாபெருந் தானமா வான்பொருள் ஈத்து ஆங்கு
[5] இந்திர விகாரம் ஏழுடன்புக்கு ஆங்கு

---

1. மாமுனி - அகத்தியன்.
2. வலம்படு தானை - வெற்றியுடைய சேனை.
3. தாது எரு மன்றம் - புழுதி படிந்த பொதுவிடம்.
4. மாபெருந் தானமா வான்பொருள் ஈத்து - மிக்க பெரிய தானமாக உயர் பொருள்கள் பல வறியோர்க்கு ஈந்து.
5. இந்திர விகாரம் - இந்திரனால் ஏற்படுத்தப்பட்ட அரங்கு.

[1] அந்தர சாரிகள் [2]ஆறைம் பதின்மர்
பிறந்த யாக்கைப் பிறப்பற முயன்று
துறந்தோர் தம்முன் [3]துறவி எய்தவும்,
துறந்தோன் மனைவி மகன்துயர் பொறாஅள்
[4] இறந்த துயர் எய்தி இரங்கி

இன்னுயிர் விட்டாள். கண்ணகியின் தந்தை ஆசீவகர் பள்ளியடைந்து அவர் கொளுத்திய அறவுரை கேட்டு அருந் தவம் பூண்டு நிற்ப, அவன் பிரிவாற்றாத அவன் மனைக்கிழத் தியும் உயிர் துறந்தாள். மாதவி மடந்தை, கோவலன் உற்ற கொடுந்துயர் கேட்டுப் பொறாளாய்த் தன் நற்றாயாகிய சித்தி ராபதியை நோக்கி, "யான் நற்றிறம் படரத் துணிந்தேன்; மணிமேகலையை அருந்தவம் படுப்பதல்லது, கணிகையர் கோலம் காணவிடுவது கூடாது" என்று உரைத்துத் தன் கோதைத் தாமம் களைந்து புத்தப் பள்ளி யடைந்து, அவர் வழங்கும் அறநெறி மேற்கொண்டனள். இவ்வாறு என் வாய்ச் சொல்லால் பலர் இறந்தமையால் இத் தீமையைக் கழுவுதல் வேண்டிக் கங்கையாடப் போந்தேன்" என்று அந்த மாடலன் கூறி முடித்தான்.

உடனே செங்குட்டுவன் அம் மாடலனை நோக்கி, "பாண்டி நாட்டு வேந்தன் இறந்தபின், அந்நாடு உற்ற திறம் என்னை?" என்று கேட்க, மாடலன், [5]"போந்தைக் கண்ணிப் பொறைய, கேட்டருள்" எனக் கூறலுற்று,

[6]கொற்கையில் இருந்த [7]வெற்றிவேற் செழியன்
பொன்தொழிற் கொல்லர் ஈரைஞ் ஞூற்றுவர்

1. அந்தரசாரிகள் - சாரணர்கள்.
2. ஆறைம்பதின்மர் பிறந்த யாக்கைப் பிறப்பற முயன்று துறந் தோர் - துறவிகள் முந்நூற்றுவர்; இவர்கள் தாம் முன்பு பிறந்து வருகிற யாக்கையது தொடர்பு அறுமாறு முயன்று துறவு பூண்டோர்.
3. துறவி - துறவறம்.
4. இறந்த துயர் - அளவுகடந்த துன்பம்.
5. போந்தை - பனந்தோடு.
6. கொற்கை - பாண்டி நாட்டுப் பட்டினம்.
7. வெற்றிவேற் செழியன் - பாண்டியன் ஒருவன் பெயர்.

ஒருமுலை குறைத்த திருமா பத்தினிக்கு
[1] ஒருபகல் எல்லை உயிர்ப்பலி யூட்டி,
[2] உரைசெல வெறுத்த மதுரை மூதூர்
அரைசுகெடுத் தலம்வரும் அல்லற் காலைத்
தென்புல மருங்கின் தீதுதீர் சிறப்பின்
மன்பதை காக்கும் [3]முறைமுதல் கட்டிலின்
நிரைமணிப் புரவி ஓரேழ் பூண்ட
[4] ஒருதனி யாழிக் கடவுள் தேர்மிசைக்
[5] காலைச் செங்கதிர்க் கடவுள் ஏறினன்என
மாலைத் [6]திங்கள் வழியோன் ஏறினன்
ஊழிதோ றூழி உலகம் காத்து
வாழ்க எங்கோ வாழிய பெரிது

என்று கூறி முடித்தான். அற்றைப் போதும் கழிந்தது. மண்ணுலக முழுதும் இருள் பரவிற்று. சிறிது போதில் செக்கர்வானத்தில் வெண்பிறை தோன்றியது. அதனை அரசர் பெருமான் கூர்ந்து நோக்கக் கண்ட காலக் கணக்கர், “யாம் வஞ்சிநகர் நீங்கியது இப்போதைக்கு என்னுன்கு திங்கள் ஆகின்றது” என்றனர். என்று சொல்லைக் கேட்டவன், அக் கங்கைக் கரையில் அமைக்கப்பெற் றிருந்த பாடியில்,

[7] வித்தகர் கைவினை விளங்கிய கொள்கைச்
[8] சித்திர விதானத்துச் செம்பொற் பீடிகைக்
கோயில் இருக்கை

---

1. ஒரு பகல் எல்லை - ஒரு நாளிலே.
2. உரைசெல வெறுத்த மதுரை - புகழ் எங்கும் பரக்கும்படி மிக்க மதுரை.
3. முறை முதல் கட்டில் - முறையே வருகின்ற அரசு கட்டில்.
4. ஒரு தனி ஆழிக் கடவுள் தேர் - ஒற்றைச் சக்கரத்தையுடைய தெய்வத்தன்மை பொருந்திய தேர்.
5. செங்கதிர்க் கடவுள் - ஞாயிறு.
6. திங்கள் வழியோன் - பாண்டியன்.
7. வித்தகர் - புலவர்.
8. சித்திர விதானம் - ஓவியம் வரையப்பட்ட விதானம்.

அடைந்து, ஏவலரை விடுத்து அம் மாடலனை வருமாறு அழைத்தான். அவனும் அவன்முன் வந்து நின்றான். செங்குட்டுவன், அம் மறையவனை நோக்கி, "சோணாட்டில் [1]என் மைத்துன வளவனைப் பகைத்த இளங்கோ வேந்தர் ஒன்பதின்மரும் இறந்த பின்னர், அவன் நாட்டு அரசியல் எத்திறம் உளது?" என்று வினவினன். மாடலனும் பெரு மகிழ்வு கொண்டு, "எங்கோ வேந்தே வாழ்க" எனத் தொடங்கி,

> [2] வெயில் விளங்கு மணிப்பூண் விண்ணவர் வியப்ப
> எயில்மூன் றெறிந்த இகல்வேற் [3]கொற்றமும்
> குறுநடைப் [4]புறவின் நெடுந்துயர் தீர
> எறிதரு பருந்தின் [5]இடும்பை நீங்க
> அரிந்துடம்பு [6]இட்டோன் அறம்தரு கோலும்
> திரிந்து வேறாகும் காலமும் உண்டோ?
> தீதோ இல்லை, [7]செல்லற் காலையும்
> காவிரி புரக்கும் நாடுகிழ வோற்கு

என்று சொன்னான். செங்குட்டுவனுக்கு அச்சொல் தெவிட்டாத அமிழ்துபோல் இன்பம் செய்தது. அதனால், அவன் மாடலனுக்குத் தன் நிறையளவு ஐம்பது துலாபாரம் பொன்னைப் பரிசாக நல்கினான்; தனக்குத் துணையாய் இருந்த நூற்றுவர் கன்னரையும் தம் நாடு செல்லுமாறு விடுத்தான். தனக்குத் தோற்று அஞ்சித் தாபதக் கோலம் பூண்டு திரிந்த ஆரிய வரச குமரர்களையும்,

---

1. செங்குட்டுவன் மைத்துனன் கிள்ளிவளவன். அவனை அச் சோழர் குடிக்கு உரியவரான ஒன்பதின்மர் அடிக்கடி போர் உடற்றி அலைத்து வந்தனர். அதனால் அவன் அலைப்புண்டு வருந்துகையில் செங்குட்டுவன் அவனுக்குத் துணையாகச் சென்று அவ்வொன்பதின்மரையும் நேரிவாயில் என்னுமிடத்து வென்று வாகை சூடினான்.

2. வெயில் - ஒளி.

3. கொற்றம் - தூங்கு எயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் பெற்ற வெற்றி.

4. புறவு - புறா.

5. இடும்பை - பசித்துயர்.

6. இட்டோன் - இட்டவனாகிய சிபி மன்னன்.

7. செல்லற் காலை - இன்னாமைக் காலம்.

[1] எஞ்சா மன்னர் [2] இறைமொழி மறுக்கும்
கஞ்சுக முதல்வர் ஈரைஞ் ஞூற்றுவர்
[3] அரியிற் போந்தை அருந்தமிழ் மாற்றல்
தெரியாது மலைந்த கனக விசயரை(யும்)
இருபெரு வேந்தர்க்குக் காட்டிட ஏவித்

தான் தன் இளைப்பு நீங்கச் சென்று பள்ளி கொள்வானாயி னன்.

கனக விசயரோடு தன் தானைப் பகுதி முன்பே புறப் பட்டுச் செல்லச் செங்குட்டுவன் பின்பே புறப்பட்டுத் தன் வஞ்சிமா நகர் நோக்கித் திரும்ப வரலாயினன்.

இவ்வாறு அவன் வடநாடு சென்று நீட்டித்த பிரிவை யுடையனாகவே, அப் பிரிவு அவன் தேவி இருங்கோ வேண் மாளுக்கு மிக்க துயரத்தைச் செய்வதாயிற்று. அவளும் பிரிவாற்றாது மெலிந்து, நல்ல உறக்கம் பெறாது வருந்திக் கிடப்ப, அவன் வடநாட்டில் பெற்ற வெற்றிச் செய்தியை முன்பாகப் போந்த தூதுவரால் அவளது ஆயச் செவிலியர் அறிந்து, "தோள் துணை துறந்த துயரீங்கு ஒழிக" என வாழ்த்திக் கூறி ஆற்றுவித்தனர். ஆனால், அவளோ,

குறத்தியர் பாடிய குறிஞ்சிப் பாணியும்,
[4] தொடுப்பேர் உழவர் ஓதைப் பாணியும்
கோவலர் ஊதும் குழலின் பாணியும்
வெண்டிரை பொருத வேலை [5] வாலுகத்துக்
[6] குண்டுநீ ரடைகரைக் [7] குவையிரும் புன்னை
வலம்புரி யீன்ற நலம்புரி முத்தம்

---

1. எஞ்சா மன்னர் - வீரத் தீ அவியாத வேந்தர்.
2. இறைமொழி மறுக்கும் கஞ்சுக முதல்வர் - மேலான சொற்களைப் பொருது மறுத்து உரைக்கும தூதர்.
3. அரியில் போந்தை - இனி அரிவது இல்லாத பனந்தோடு; மெல்லிதாய் அழகுற அரிந்து செவ்விதாக்கப்பட்ட பனந்தோடு.
4. தொடுப்பேர் உழவர் - விதைத்தற்கு உழும் ஏருழவர்.
5. வாலுகம் - வெண்மணல்.
6. குண்டுநீர் - ஆழமான நீர்.
7. குவை இரும் புன்னை - குவிந்த பெரிய புன்னை நீழலில்.

[1] கழங்காடு மகளிர் ஓதை யாயத்து
வழங்கு தொடி முன்கை மலரவேந்தி
வானவன் வந்தான் வளர்இள வனமுலை
தோள்நலம் [2]உணீஇய தும்பை போந்தையொடு
வஞ்சி பாடுதும் மடவீர் யாம்எனும்
அஞ்சொற் கிளவியர் [3]அம்தீம் பாணியும்

செவியுறக் கேட்டுப் பிரிவுத் துயர் வருத்தக் கண்ணுறங்காதே கிடந்தனள். சிறிது போதில், செங்குட்டுவன், வலம்புரி முழங்க,

மாலைவெண் குடைக்கீழ் [4]வாகைச் சென்னியன்
[5]வேக யானையின் மீமிசைப் பொலிந்து
[6]குஞ்சர வொழுகையில் கோநகர் எதிர்கொள்ள
வஞ்சியுட் புகுந்தனன்.

---

1. கழங்காடு மகளிர் தொடி முன்கை மலர முத்தம் ஏந்தி வானவன் வந்தான் . . . பாடுதும் யாம் எனும் கிளவியர் என இயையும்.
2. உணீஇய - உண்ணும்படி.
3. அம்தீம் பாணி - அழகிய இனிய பாட்டு.
4. வாகைச் சென்னியன் - வெற்றி மாலை சூடிய முடியுடையன்.
5. வேக யானை - சினமுடைய யானை.
6. குஞ்சர ஒழுகை - யானை பூட்டிய தேர் ; வண்டியுமாம்.

## உஅ. நடுகற் காதை

நெடுநகர் மக்கள் பேரார்வம் பொங்க, நெடுநாட் பிரிந்திருந்து போதரும் தங்கள் வேந்தர் பெருமானான செங்குட்டுவன், தமிழரது ஆற்றலறியாது எதிர்த்துத் தோல்வியெய்திச் சிறைப்பட்ட கனக விசயரென்ற ஆரிய மன்னரைக் கைப்பற்றிக் கொண்டு வருவதை யறிந்து மிக்க சிறப்புடன் வரவேற்றனர். வஞ்சிநகர் எங்கும் மகிழ்ச்சியாரவாரம் மலிந்திருந்தது. இவ்வாறு நாட்கள் சில செல்ல வேனிற்காலத்து இன்ப மாலைப் போது வந்தது.

> ஒண்டொடித் தடக்கையின் ஒண்மலர்ப் பலிதூஉய்
> வெண்திரி விளக்கம் ஏந்திய மகளிர்
> உலக மன்னவன் வாழ்கஎன்று ஏத்திப்
> பலர்தொழ வந்த [1]மலரவிழ் மாலைப்
> [2]போந்தைக் கண்ணிப் [3]பொலம்பூந் தெரியல்
> வேந்து வினைமுடித்த [4]ஏந்துவாள் வலத்தர்
> யானை வெண்கோடு அழுத்திய மார்பும்,
> நீள்வேல் கிழித்த நெடும்புண் ஆகமும்,
> எய்கணை கிழித்த [5]பகட்டெழில் ஆகமும்
> [6]வைவாள் கிழித்த மணிப்பூண் மார்பமும்

அவர்தம் காதலன்பு மிக்க கற்புடை மனைவியரின் இன்ப வழிபாட்டால் இனிதே நலம் சிறந்தன. இவ்வாறு சிறந்த ஆடவரும் மகளிரும் இன்பம் மிகச் சிறக்குமாறு வந்த மாலைப் போது,

---

1. மலர் அவிழ் மாலை - முல்லை முதலிய பூக்கள் மலரும் மாலை.
2. போந்தை - பனந்தோடு.
3. பொலம் பூந் தெரியல் - பொன்னாற்செய்த பூமாலை.
4. ஏந்துவாள் வலத்தர் - கையிலேந்திய வாளால் பெற்ற வெற்றியுடையர்.
5. பகட்டெழில் ஆகம் - பெரிய அழகிய மார்பு.
6. வைவாள் - கூரிய வாள்.

[1] முடிபுறம் உரிஞ்சும் கழற்கால் குட்டுவன்
குடிபுறந் தருங்கால் [2]திருமுகம் போல
உலகுதொழத் தோன்றிய [3]மலர்கதிர் மதியம்
பலர்புகழ் மூதூர்க்குக் காட்டி நீங்க,

இரவுப் போதில் யாவரும் தண் மதியினது வெண்ணிலவின் இன்பக் காட்சியினைத் துய்ப்பக் கருதி, நிலா முன்றில், [4]சேக்கைப்பள்ளி, [5]மண்ணீட்டரங்கம், மலர்ப்பூம்பந்தர் முதலிய இடங்களை அடைந்து மகிழ்ந்தனர்.

[6] படுதிரை சூழ்ந்த பயங்கெழு மாநிலத்து
இடைநின் றோங்கிய [7]நெடுநிலை மேருவின்
கொடிமதில் மூதூர் நடுநின் றோங்கிய
[8] தமனிய மாளிகைப் புனைமணி அரங்கில்

இருங்கோவேண்மாள் ஆகிய கோப்பெருந்தேவி, தானும் வெண்மதியின் வண்ணம் காண விழைந்து வந்தாள். அது போது விளக்கேந்தி வந்த மகளிர், பல்லாண்டிசைத்தனர். ஒருசார், முழவு முழங்கிற்று; யாழ் இசைத்தது; பாடுநர் பண்கனிந்த பாடல் பாடினர். ஒரு சார் கூனரும் குறளரும் மான்மதச்சாந்தும் வெண்சாந்தும் கொணர்ந்தனர்; பேடியர் வண்ணமும் சுண்ணமும் மலர்ப் பிணையலும் சுமந்து வந்தனர். இன்ன சிறப்போடு வரும் தேவியுடன், செங்குட்டுவனும், அப் புனைமணி யரங்கிற்குப் போந்து, ஆங்கே இருந்த பொற்கால் அமளி பொலிய வீற்றிருந்தான். அவன்

---

1. முடிபுறம் உரிஞ்சும் கழல்கால் - வீழ்ந்து வணங்கும் மன்னரது முடி புறத்தேபடுமாறு விளங்கும் கழலணிந்த கால்,

2. திருமுகம் - அருள் ஒளி வீசும் முகம்.

3. மலர்கதிர் மதியம் - விரிந்த கதிர்களையுடைய திங்கள்.

4. சேக்கைப் பள்ளி - பூவணை யிருந்த இடம்.

5. மண்ணீட்டரங்கம் - சுதையால் அழகு திகழ அமைத்த அரங்குகள்.

6. படுதிரை - ஒலிக்கின்ற கடல்.

7. நெடுநிலை மேருவின் - நெடிதுயர்ந்த மேருமலைபோல; உலகிற்கு நடுவே மேரு நின்றதுபோல, நகர்க்கு நடுவே அரசன் பெருங்கோயில் நின்றது என்க.

8. தமனிய மாளிகை - பொன் மாளிகை.

திருமுன், சாக்கையர் என்னும் கூத்தர் மரபிற்குத் தலைவனை சாக்கையன் ஒருவன் வந்து,

[1] திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்
[2] பரிதரு செங்கையில் படுபறை யார்ப்பவும்
செங்கண் ஆயிரம் திருக்குறிப் பருளவும்,
செஞ்சடை சென்று [3] திசைமுகம் அலம்பவும்
[4] பாடகம் பதையாது [5] சூடகம் துளங்காது
மேகலை யொலியாது மென்முலை யசையாது
வார்குழை யாடாது மணிக்குழல் அவிழாது
உமையவள் ஒரு திறனாக ஓங்கிய
இமையவன் ஆடிய [6] கொட்டிச் சேதம்

என்னும் கொடுகொட்டிக் கூத்தினை யாடி அரங்கில் உள்ளாரைப் பெரிதும் மகிழ்வித்தான். பின்பு அரசன் அவன் வேண்டும் பரிசில் நல்க, பெற்ற அவன் அரசனை வாழ்த்திவிட்டேகினன். யாவரும் தத்தம் இருக்கைபேக விடை நல்கிய வேந்தர் பெருமான், தானும் உவளகம் புகுந்து இனிய உறக்கம் கொண்டான்.

மறுநாள் செங்குட்டுவன் திருவோலக்க மண்டபத்தை யடைந்து அரசு வீற்றிருந்தான். அப்போது நீலன் முதலிய கஞ்சுக வீரர்கள் மாடலன் என்னும் மறையவனுடன் வந்தனர். மாடலன் அரசனை வாழ்த்தி, "அரசே, யாங்கள், நாம் கைப்பற்றிக் கொணர்ந்த ஆரிய மன்னரை எம்முடன் கொண்டு சென்று, சோழ நாட்டு வேந்தன் திருமுன் நிறுத்தி, நிகழ்ந்தது கூறினேம். அதற்கு அச்சோழர் பெருமான்,

[7] நீளமர் அழுவத்து நெடும்பே ராண்மையொடு

---

1. திருநிலைச் சேவடி - கண்டார் விரும்பும் பேரழகு நிலைபெறுதலுடைய சேவடி ; திரு. சிவபோகமுமாம்.

2. பரிதரு செங்கையில் படுபறை - செங்கையில் பரிதரு படுபறை - செங்கையில் தாங்குகின்ற ஒலிக்கின்ற துடி.

3. திசைமுகம் அலம்ப - திசைதோறும் சுழன்று ஆட.

4. பாடகம் - காலணி.

5. சூடகம் - கையில் அணியும் வளைவகை.

6. கொட்டிச் சேதம் - கொடுகொட்டிக் கூத்து.

7. நீளமர் அழுவம் - நெடிய போர்க்களம்.

வாளும் குடையும் மறக்களத் தொழித்துக்
[1] கொல்லாக் கோலத்து உயிர் உய்ந்தோரை
வெல்போர்க் கோடல் வெற்றம் அன்று

எனத் தன் தானைத் தலைவற்குக் கூறி யொழிந்தான்" என்று மொழிந்தான். பின்பு, தான் பாண்டிநாட்டு மதுரையடைந்து, அந்நாட்டு மன்னற்கு ஆரிய மன்னரைக் காட்டி நின்ற செய்தியைக் கூறத் தொடங்கி, "நம் செயல் நிலை யறிந்த அத் தென்னவர் பெருமான்,

ஆரிய மன்னர் அமர்க்களத் தெடுத்த
[2] சீரியல் வெண்குடைக் காம்புநனி சிறந்த
[3] சயந்தன் வடிவின் தலைக்கோ லாங்குக்
[4] கயந்தலை யானையின் [5]கவிகையிற் காட்டி
இமையச் சிமயத் [6]திருங்குயி லாலுவத்து

---

1. கொல்லாக் கோலம் - தவக்கோலம். தவக்கோலம் பூண்டாரைக் கொல்லல் கூடாதாகலின், அது கொண்டாரைக் "கொல்லாக் கோலத்து உயிர் உய்ந்தோர்" என்றார். "தாபத வேடத்து உயிருய்ந்து பிழைத்த மாபெருந்தானை மன்ன குமரர்" என்று மேலும் கூறினர். (சிலப். 27 : 179-80)

2. சீரியல் வெண்குடைக் காம்பு - அழகிய இயல்பினையுடைய வெண் கொற்றக் குடையின் காம்பு.

3. சயந்தன் வடிவின் தலைக்கோல் - குடைக்காம்பை அரசன் கோயிலில் காப்பு அமைத்து இருந்தி, இந்திரன் மகனை சயந்தனைக் குறித்து நீராட்டி ஊர்வலம் செய்வித்து நாடக மகளிர்க்கு நாடக வரங்கின்முன் நிறுத்தும் தலைக்கோல்.

4. கயந்தலை யானை - பெரிய தலையையுடைய யானை. இது பட்டத்தியானை.

5. கவிகையில் காட்டி - அவ் யானையின் தாழ்ந்த கையிலே கொடுத்து ஊர்வலம் செய்வித்து. இவ்வியல்புகள் அரங்கேற்று காதையில் கூறப்படுவன. (சிலப். அரங். 114-28.)

6. இருங்குயிலாலுவத்து - பெரிய குயிலாலுவம் என்னும் இடம்; நீலகேசி மொக்கலவாதச் சருக்கத்துக் "கதியின வகையவானும்" (425) என்னும் செய்யுளுரையில், "துடித விமானத்தினின்றும் போந்து, குயிலாலபுரத்துத் தோன்றி, உலும்பினி வனத்துப் பிறந்து, கபிலபுரத்துப் புத்தத்வம் பெற்றுத் தர்மோபதேசம் பண்ணி, மஹா போதிப் பிரதேசத்துப் பொன்றக் கெடுதல் புத்தனுக்கு நியதி" என்றொரு சொற்றொடர் காணப்படுகிறது.

உமையொரு பாகத் தொருவனை வணங்கி
அமர்க்களம் அரசன தாகத் துறந்து
[1] தவப்பெருங் கோலம் கொண்டோர் தம்மேல்
[2] கொதியழல் சீற்றம் கொண்டோன் கொற்றம்
புதுவது என்றனன்"

என்று கூறினன். இச்சொற்கள் செங்குட்டுவன் செவியிற் புகுதலும், அவனது கண்கள் சிவந்தன; பற்கள் கடிப்புண்டன; புருவம் நெரிப்புண்டன; வந்தது வெகுளி; நகையும் பிறந்தது. போர்க்கு எழுவான் தொடங்கினன். அக் கருத்தை யறிந்த மாடலன் பொருக்கென எழுந்து பின்வருமாறு சொல்லத் தொடங்கினன்.

[3] கறிவளர் சிலம்பில் துஞ்சும் யானையின்
[4] சிறுகுரல் நெய்தல் வியலூர் எறிந்தபின்,
[5] ஆர்புனை தெரியல் ஒன்பது மன்னரை
நேரி வாயில் நிலைச்செரு வென்று,
நெடுந்தேர்த் தானையோடு இடும்பிற் புறத்து [6] இறுத்துக்
கொடும்போர் கடந்து, நெடுங்கட லோட்டி,
[7] உடன்று மேல்வந்த ஆரிய மன்னரைக்
கடும்புனற் கங்கைப் பேர்யாற்று வென்றோய்!
நெடுந்தார் வேய்ந்த பெரும்படை வேந்தே!
[8] புரையோர் தம்மொடு பொருந்த வுணர்ந்த
அரசர் ஏறே! அமைகநின் சீற்றம்;
மண்ணாள் வேந்தே! நின்வாழ் நாட்கள்
[9] தண்ணான் பொருநை மணலினும் சிறக்க

1. தவப் பெருங் கோலம் - மேலே கூறிய கொல்லாக் கோலம்.
2. கொதியழல் சீற்றம் - கொதிக்கும் அழல்போலும் சினம்.
3. கறி - மிளகுக் கொடி.
4. சிறுகுரல் நெய்தல் - சிறு பூங்கொத்துக்களையுடைய நெய்தல், யானையினையும் நெய்தலையுமுடைய வியலூர் என்க.
5. ஆர்புனை தெரியல் - ஆத்திப் பூவால் தொடுத்த மாலை.
6. இறுத்து - தங்கி. (முற்றுகையிட்டு)
7. உடன்று - மாறுபட்டு வெகுண்டு.
8. புரையோர் - நூல்களைக் கற்றுயர்ந்த பெரியோர்.
9. தண் ஆன்பொருநை - குளிர்ந்த பொருநையாறு; இது சேரநாட்டில் உள்ளதொரு யாறு என்பர்.

அகழ்கடல் ஞாலம் ஆள்வோய்! வாழி;
இகழாது என்சொல் கேட்டல் வேண்டும்;
வையம் காவல் பூண்டநின் நல்யாண்டு
ஐயைந் திரட்டி சென்றதன் பின்னும்
அறக்கள வேள்வி செய்யாது, யாங்கணும்
மறக்கள வேள்வி செய்வோய் ஆயினை;

நின் முன்னோருள்ளும் கடற்கடம்பெறிந்த காவலன் எனவும், இமயத்தில் சிலைபொறித்த விறலோன் எனவும், கூற்று வரை நிறுத்த கொற்றவன் எனவும், யவனர் நாடாண்ட இரும்பொறை எனவும், [1]அகப்பா எறிந்த அருந்திறல் எனவும், இருகடலாடிய சேரல் இரும்பொறையெனவும், மதுக் கொள் வேள்வி வேட்ட சேரமான் எனவும் புகழ் மேம்பட்டோர் பலருண்டு. அவருள் ஒருவரும் இன்றுகாறும் இருந்ததில்லை; யாவரும் மாய்ந்தனர். இதனால், யாக்கை நிலையாது என்பதை நீ இனிதறிந்தாய்; தமிழரை யிகழ்ந்த ஆரிய மன்னரது வீழ்ச்சியால் செல்வம் நில்லாதென்பது தெளிந்தாய்; நின் யாக்கையும் நரைத்து முதிர்ந்தமையின், இளமையும் நிலையாதென்பது இனிது உணர்ந்தாய்.

விண்ணோர் உருவின் எய்திய நல்லுயிர்
மண்ணோர் உருவின் [2]மறிக்கினும் மறிக்கும்;
மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்
மிக்கோய்! விலங்கின் எய்தினும் எய்தும்;
விலங்கின் யாக்கை விலங்கிய இன்னுயிர்
கலங்கஞர் நரகரைக் காணினும் காணும்;
ஆடுங் கூத்தர்போல், ஆருயிர், ஒருவழிக்
[3]கூடிய கோலத்து ஒருங்குநின் றியலாது,
செய்வினை வழித்தாய் உயிர்செலும் என்பது
[4]பொய்யில் காட்சியோர் பொருளுரை; ஆதலின் . . . .
அருமறை மருங்கின் அரசர்க் கோங்கிய
பெருநல் வேள்வி நீசெயல் வேண்டும்;

---

1. அகப்பா - மதில்.
2. மறிக்கினும் மறிக்கும் - மீளினும் மீளும்.
3. கூடிய கோலத்து - கூடிய பிறப்பில்.
4. பொய்இல் காட்சியோர் - மெய்யுணர்ந்த பெரியோர்.

நாளைச் செய்குவம் அறமெனின், இன்றே
[1] கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும் ;
இதுவென வரைந்து வாழுநாள் உணர்ந்தோர்
முழுநீர் உலகில் முழுவதும் இல்லை ;
[2] வேள்விக் கிழத்தி இவளொடும் கூடித்
தாழ்கழல் மன்னர் நின்னடி போற்ற
நீடு வாழியரோ, நெடுந்தகை ! என்று

மாடலன் கூறினன். கேட்டதும் செங்குட்டுவன் சிறிதும் நீட்டியாது வில்லவன் கோதையை ஏவி, வேள்வி வேட்டற்கு வேண்டுவனவற்றை விரையச் செய்வித்து, அம் மாடலன் கூறிய முறைமைப்படி வேள்வியும் செய்து முடிக்கத் தொடங்கி, ஆரிய வரசரைச் சிறை நீக்கி, வேள்வி முடியுந் துணையும் தனது வேளாவிக்கோ மாளிகையில் இருந்து, முடிந்தபின் தத்தம் நாடு செல்லுமாறு பணித்தான். பின்பு அழும்பில்வேள் என்னும் அமைச்சனுடன் ஆயக்கணக்கர் சிலரை ஏவி, நாட்டில் சிறைப்பட்டுக் கிடந்தோரைச் சிறை வீடு செய்தும், திறை செலுத்தாது நின்று அத் திறையின் தொகை மிகுந்து சுமந்து நின்ற சிற்றரசர்கட்குக் [3]கறை வீடு செய்தும் வருமாறு பணித்து, முடிவில் வேள்வியும் செய்து முடித்தான்.

[4] அருந்திறல் அரசர் முறைசெயின் அல்லது
[5] பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாதெனப்
பண்டையோர் உரைத்த [6]தண்டமிழ் நல்லுரை

1. கேள்வி நல்லுயிர் - அறவோர் கூறும் அறங்களைக் கேட்டு நன்மையடைதற்குரிய உயிர்.

2. வேள்விக் கிழத்தி - வேள்வி செய்பவனுக்கு மனைவி ; ஈண்டு இருங்கோவேண்மானைக் குறித்தது. இனி, இல்லிருந்து செய்யும் அறமும் வேள்வியாதலின், அதற்குரிய மனைவியை வேள்விக் கிழத்தி என்றார், எனினுமாம்.

3. கறைவீடு செய்து - கடமையைத் தள்ளிவிட்டு.

4. அருந்திறல் அரசர் - பகைவரால் வெல்லற்கரிய திறல் வாய்ந்த அரசர்.

5. பெரும் பெயர்ப் பெண்டிர் - கற்பால் பெரிய புகழையுடைய பெண்டிர்.

6. தண்டமிழ் நல்லுரை - தண் தமிழ் நாட்டுச் சான்றோர் தெளிந்துரைத்த அழியாத மெய்யுரை.

பார்தொழு தேத்தும் பத்தினி யாதலின்
ஆர்புனை சென்னி [1]அரசற்கு அளித்து,
செங்கோல் வளைய உயிர்வா ழாமை
[2]தென்புலங் காவல் [3]மன்னவற் களித்து,
[4]வஞ்சினம் வாய்த்தபின் அல்லது யாவதும்
வெஞ்சினம் விளியார் வேந்தர் என்பதை
வடதிசை மருங்கின் மன்னவர் அறியக்
குடதிசை வாழும் [5]கொற்றவற் களித்து,
மதுரை மூதூர் மாநகர் கேடுறக்
கொதியழற் சீற்றம் கொங்கையின் விளைத்து,
நன்னு டணைந்து நளிர்சினை வேங்கைப்
பொன்னணி புதுநிழல் பொருந்திய

நங்கையாகிய கண்ணகிப் படிமத்தைப் பரவுதல் வேண்டிச் செங்குட்டுவன், சிறப்புடைய கம்மியர் பலருடன், சிறப்பு நூற் புலவர் சூழச் சென்று பத்தினிக் கோட்டத்தை யடைந்து, அங்கே கைத்தொழில் நலம் சிறப்பச் செய்தமைத் திருந்த கண்ணகிப் படிமத்துக்குச் சீரிய இழைகளும் நன் கலன்களும் பூட்டி,

[6]பூப்பலி செய்து [7]காப்புக் கடைநிறுத்தி
வேள்வியும் விழாவும் நாடொறும் வகுத்துக்
[8]கடவுள் மங்கலம் செய்கஎன ஏவினன்.

---

1. அரசற்கு அளித்தது - அரசர் முறை செயினல்லது பெண்டிர்க் குக் கற்புச் சிறவாதென்ற உண்மையைச் சோழ மன்னனால் விளங்கச் செய் தது.

2. தென்புலம் - தென் தமிழ் நாடு.

3. மன்னவற்கு அளித்தது - மன்னுள் வேந்தர்க்குச் செங்கோல் வளையாமையே உயிராம் என்ற உண்மையைப் பாண்டி மன்னனால் விளங் கச் செய்தது.

4. வஞ்சினம் - சூளுறவு.

5. கொற்றவற்கு அளித்தது - தாம் செய்த வஞ்சினம் முடித்தல் லது வேந்தர் தம் சினம் தணியார் என்ற உண்மையைச் சேர மன்னனால் விளங்கச் செய்தது.

6. பூப்பலி செய்து - பூ இட்டுப் பரவி.

7. காப்புக்கடை நிறுத்தி - மதிலும் வாயிலும் அமைத்து.

8. கடவுள் மங்கலம் - கடவுட்குரிய மங்கல விழா ; கடவுட்டன்மை யெய்துவித்தல் என்றலும் உண்டு.

## உக. வாழ்த்துக் காதை

### உரைப்பாட்டு மடை

குமரியொடு வடவிமயத்து ஒரு மொழி வைத்து உலகாண்ட சேரலாதற்குத் திகழொளி ஞாயிற்றுச் சோழன் மகள் ஈன்ற மைந்தன், கொங்கர் செங்களம் வேட்டுக் கங்கைப் பேர் யாற்றுக் கரை போகிய செங்குட்டுவன், (கண்ணகிப் படிமத்துக்குக்) கடவுள் மங்கலம் செய்த பின்னாள், (மாடலன் கூறியவற்றால்) . . . . பெருந் துன்பம் எய்திக் காவற் பெண்டும் அடித் தோழியும், கடவுட் சாத்தனுடன் உறைந்த தேவந்தியும் உடன்கூடிச் 'சேயிழையைக் காண்டும்' என்று மதுரைமாநகர் புகுந்து . . . . அடைக்கலம் இழந்து உயிரிழந்த இடைக்குல மகளிடம் எய்தி, ஐயை (என்னும்) அவள் மகளோடும் வையை ஒருவழிக் கொண்டு மாமலைமிசையேறிக் கோமகள் தன் கோயில் புக்கு, நங்கைக்குச் சிறப்பயர்ந்த செங்குட்டுவற்குத் திறம் உரைப்பர்மன்.

### தேவந்தி சொல்

முடிமன்னர் மூவரும் காத்தோம்பும் தெய்வ
வடபே ரிமய மலையிற் பிறந்து
[1] கடுவரல் கங்கைப் புனலாடிப் போந்த
தொடிவளைத் தோளிக்குத் தோழிநான், கண்டீர் ;
[2] சோணாட்டார் பாவைக்குத் தோழிநான், கண்டீர்.

### காவற்பெண்டு சொல்

[3] மடம்படு சாயலாள் மாதவி தன்னைக்
[4] கடம்படாள் காதல் கணவன்கைப் பற்றிக்

---

1. கடுவரல் - விரைந்த நீர் வருகையுடைய.
2. சோணாட்டார் பாவை - சோழநாட்டிற் பிறந்த பாவையாகிய கண்ணகி.
3. மடம்படு சாயலாள்-அழகு பொருந்திய சாயலையுடைய கண்ணகி.
4. கடம்படாள் - சினந்து வெகுளாள்.

[1] குடம்புகாக் கூவல் கொடுங்கானம் போந்த
தடம்பெருங் கண்ணிக்குத் தாயர்நான், கண்டீர்;
தண்புகார்ப் பாவைக்குத் தாயர்நான், கண்டீர்.

## அடித்தோழி சொல்

[2] தற்பயந்தாட் கில்லைத் தன்னைப் புறங்காத்த
எற்பயந் தாட்கும் எனக்கும்ஓர் சொல்இல்லை;
[3] கற்புக் கடம்பூண்டு காதலன் பின்போந்த
பொன்தொடி நங்கைக்குத் தோழிநான், கண்டீர்;
பூம்புகார்ப் பாவைக்குத் தோழிநான், கண்டீர்.

## தேவந்தி அரற்று

செய்தவம் இல்லாதேன் தீக்கனாக் கேட்டநாள்
[4] எய்த உணரா திருந்தேன்;மற்று என்செய்தேன்!
மொய்குழல் மங்கை முலைப்பூசல் கேட்டநாள்,
[5] அவ்வை உயிர்வீவும் கேட்டாயோ, தோழீ;
[6] அம்மாமி தன்வீவும் கேட்டாயோ, தோழீ.

## காவற் பெண்டு அரற்று

கோவலன் தன்னைக் [7]குறுமகன் கோள்இழைப்பக்
காவலன் தன்உயிர் நீத்ததுதான் கேட்டுஏங்கிச்
சாவதுதான் வாழ்வென்று தானம் பலசெய்து
மாசாத்துவான் துறவும் கேட்டாயோ, அன்னை;
மாநாய்கன் தன்துறவும் கேட்டாயோ, அன்னை.

## அடித்தோழி அரற்று

காதலன் தன்வீவும் காதலிநீ பட்டதூஉம்
[8] ஏதிலார் தாம்கூறும் ஏச்சுரையும் கேட்டுஏங்கி,

---

1. குடம்புகாக் கூவல் - வறண்ட குளம்.
2. தற்பயந்தாள் - தன்னைப் பயந்த தாய்.
3. கற்புக் கடம்பூண்டு - கற்பைக் கடனாக மேற்கொண்டு.
4. எய்த உணராது - தெளிய அறியாமல்.
5. அவ்வை - அன்னை.
6. அம்மாமி - கணவனைப் பயந்த தாய்.
7. குறுமகன் கோள் இழைப்ப - புல்லிய கொல்லன் கொலை சூழ.
8. ஏதிலார் - அயலார்.

[1] போதியின்கீழ் மாதவர்முன் [2]புண்ணியதானம் புரிந்த
மாதவி தன்துறவும் கேட்டாயோ? தோழீ;
மணிமேகலை துறவும் கேட்டாயோ? தோழீ.

## தேவந்தி ஐயையைக் காட்டி அரற்றியது

[3] ஐயம்தீர் காட்சி அடைக்கலம் காத்தோம்ப
வல்லாதேன், பெற்றேன் மயல்என் றுயிர்நீத்த
அவ்வை மகள் இவள்தான் [4]அம்மணம் பட்டிலா
வையெயிற்று ஐயையைக் கண்டாயோ? தோழீ;
[5] மாமி மடமகளைக் கண்டாயோ? தோழீ.

இவ்வண்ணம் கண்ணகிக் கோட்டத்தில், அவள் திருமுன் நின்று, தேவந்தி முதலாயினர் தம் ஆற்றாமையைச் சொல்லியும் அரற்றியும் துயருறுங் காலத்தில், விண்ணிடத்தே மின்னற்கொடி போலக் கண்ணகியார் கடவுள் வடிவில் செங்குட்டுவன் காணத் தோன்றியருளினர். அது கண்டதும் அவன் மிக்க வியப்புற்றுக் கூறுவான்.

## செங்குட்டுவன் கூற்று

என்னே இஃது! என்னே இஃது!
என்னே இஃது! என்னேகொல்!
[6] பொன்னம் சிலம்பின்
புனை மேகலை வளைக்கை
நல்வயிரப் பொன்தோட்டு
[7]நாவலம் பொன் இழைசேர்

1. போதி - போதி மரம்.
2. புண்ணியதானம் - புண்ணியப் பயன்தரும் அறச்செயல்.
3. ஐயம்தீர் காட்சி - மெய்யுணர்வையுடைய கவுந்தியடிகள்; இஃது அன்மொழித் தொகை.
4. அம் மணம் பட்டிலா - தன் தாயாகிய மாதரி இருந்திருந்தால் செய்து கொள்ளக்கூடிய நிலையில் இருந்த அந்த மணம் செய்து கொள்ளாது கழிந்த.
5. மாமி - மாதரி.
6. பொன்னம் சிலம்பு - பொற் சிலம்பு.
7. நாவலம் பொன் - சாம்பூநதம் என்னும் பொன் வகை.

மின்னுக் கொடிஒன்று
[1]மீவிசும்பில் தோன்றுமால்.

## செங்குட்டுவற்குக் கண்ணகியார் கடவுள் நல்லணி காட்டியது!

தென்னவன் தீதிலன் : தேவர்கோன் றன்கோயில்
நல்விருந் தாயினான் ; நான்அவன் றன்மகள் ;
வென்வேலான் குன்றில் விளையாட்டு [2]யான்அகலேன் :
என்னோடும் தோழிமீர் எல்லீரும் [3]வம்எல்லாம்.

இது நிகழ்கின்ற காலத்தே, இவரைக் கண்டும் வியந்தும் செங்குட்டுவன் கோயில் மகளிர் பலர் கண்ணகியார் கோட்டத்தின் முன் வந்திருந்தனர்; அவர்கள் இனிக் கூறுகின்றனர்.

### வஞ்சி மகளிர் சொல்

[4]வஞ்சியீர் ! [5]வஞ்சி யிடையீர் ! மறவேலான்
[6]பஞ்சடி ஆயத்தீர் ! எல்லீரும் வம்எல்லாம் ;
செங்கோல் வளைய உயிர்வாழார் பாண்டியர் என்று
[7]எம்கோ முறைநா இயம்பஇந் நாடடைந்த
பைந்தொடிப் பாவையைப் பாடுதும் வம்எல்லாம்
பாண்டியன் றன்மகளைப் பாடுதும் வம்எல்லாம்.

### ஆயத்தார் சொல்

[8]வானவன்எங் கோமகள் என்றும் ; [9]வையையார்
கோனவன் தான்பெற்ற கொடிஎன்றாள்—வானவனை

---

1. மீவிசும்பில் - விசும்பின்மேல்,
2. யான் அகலேன் - யான் நீங்கேன்.
3. வம் - வம்மின்,
4. வஞ்சியீர் - வஞ்சிநாட்டு மகளிர்காள்.
5. வஞ்சி இடையீர் - வஞ்சிக்கொடி போலும் இடையினையுடையீர்.
6. பஞ்சடி ஆயத்தீர் - செம்பஞ்சு ஊட்டிய காலையுடைய ஆயமகளிரே.
7. எம் கோ - எங்கள் அரசனாகிய சேரன். முறைநா - முறையையுடைய நா.
8. யாம் எம்கோவாகிய வானவன் மகள் என்றும் ; அவள் தான் வையையார் கோனாகிய அவன் பெற்ற கொடி என்றாள் ; வானவனை நாம் வாழ்த்துவோமாக, தேவமகள் வையையார் கோமானை வாழ்த்துவாள், வானவன் - சேரன்.
9. வையையார் - பாண்டியர்.

வாழ்த்துவோம் நாமாக, வையையார் கோமானை
வாழ்த்துவாள் [1]தேவ மகள்.

## வாழ்த்து

[2]தொல்லை வினையால் துயருழந்தாள் கண்ணின்நீர்
கொல்ல உயிர்கொடுத்த கோவேந்தன் வாழியரோ ;
வாழியரோ வாழி வருபுனல்நீர் வையை
சூழும் மதுரையார் கோமான்தன் தொல்குலமே ;
[3]மலையரையன் பெற்ற மடப்பாவை தன்னை
நிலவரசர் நீள்முடிமேல் ஏற்றினான் வாழியரோ ;
வாழியரோ வாழி வருபுனல்நீர் ஆன்பொருநை
சூழ்தரும் வஞ்சியார் கோமான்றன் தொல்குலமே.
எல்லாநாம்
காவிரி நாடனைப் பாடுதும் பாடுதும்
[4]பூவிரி கூந்தல் புகார்.

## அம்மானை வரி

வீங்குநீர் வேலி உலகாண்டு விண்ணவர்கோன்
ஓங்கரணம் காத்த உரவோன்யார் அம்மானை
ஓங்கரணம் காத்த [5]உரவோன் உயர்விசும்பில்
தூங்கெயில்மூன் றெறிந்த சோழன்காண் அம்மானை
சோழன் புகார்நகரம் பாடேலோர் அம்மானை.

## கந்துக வரி

பின்னு முன்னும் எங்கணும்
[6]பெயர்ந்துவந் தெழுந்துலாய்
மின்னும் மின் இளங்கொடி
வியல் நிலத் திழிந்தெனத்

---

1. தேவ மகள் - கண்ணகி.
2. தொல்லை வினை - பழைய வினை.
3. மலையரையன் பெற்ற பாவை - இமயமலையிடத்துப் பெற்ற கண்ணகிப் படிமம்.
4. பூவிரி கூந்தல் - பூக்களைச் சூடிய விரிந்த கூந்தலை யுடையாய்.
5. உரவோன் - தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன்.
6. பெயர்ந்து உலாய் - பெயர்ந்து உலாவி.

தென்னன் வாழ்க வாழ்க என்று
சென்றுபந் தடித்துமே;
தேவர் ஆர மார்பன் வாழ்க
என்றுபந் தடித்துமே.

## ஊசல் வரி

ஓரைவர் ஈரைம் பதின்மர் [1]உடன்றெழுந்த
போரில் பெருஞ்சோறு போற்றாது தான்அளித்த
சேரன் [2]பொறையன் [3]மலையன் திறம்பாடிக்
[4]கார்செய் குழலாட ஆடாமோ ஊசல்
[5]கடம்பெறிந்த வாபாடி ஆடாமோ ஊசல்.

## வள்ளைப் பாட்டு

தீங்கரும்பு நல்லுலக்கையாகச் செழுமுத்தம்
[6]பூங்காஞ்சி நீழல்[7]அவைப் பார்புகார் மகளிர்;
[8]ஆழிக்கொடித் திண்டேர்ச் செம்பியன் [9]வம்பலர்தார்ப்
[10]பாழித் தடவரைத்தோள் பாடலே பாடல்
பாவைமார் [11]ஆரிக்கும் பாடலே பாடல்.

[12]பாடல்சால் முத்தம் பவழ உலக்கையால்
மாட மதுரை மகளிர் [13]குறுவரே;
[14]வானவர்கோன் ஆரம் வயங்கியதோள் [15]பஞ்சவன்றன்

---

1. உடன்று எழுந்த - மாறுபட்டெழுந்த.
2-3. பொறையன், மலையன் என்பன சேரர்க்குரிய பெயர் வகைகள்.
4. கார் செய் குழல் - கரிய கூந்தல்.
5. கடம்பெறிந்த வார்த்தை-நெடுஞ்சேரலாதன் கடம்பரை வென்று அவர் காவல் மரமாகிய கடம்பு மரத்தைத் தடிந்த செய்தி.
6. பூங்காஞ்சி - பூக்களையுடைய காஞ்சி மரம்.
7. அவைப்பார் - சமைப்பர்.
8. ஆழிக்கொடித் திண் தேர் - கொடிகட்டிய ஆழி பூட்டிய தேர். செம்பியன் - சோழன்.
9. வம்பலர் தார் - புதிய பூக்களால் தொடுத்த மாலை.
10. பாழித் தடவரைத் தோள் - வலிய பெரிய மலை போன்ற தோள்.
11. ஆரிக்கும் - ஆர்த்துப் பாடும்.
12. பாடல்சால் முத்தம் - பெருமை பொருந்திய முத்துக்கள்.
13. குறுவர் - குற்றுவர்.
14. வானவர்கோன் - இந்திரன்.
15. பஞ்சவன் - பாண்டியன்.

மீனக் கொடிபாடும் பாடலே பாடல்
[1]வேப்பந்தார் [2]நெஞ்சுணக்கும் பாடலே பாடல்.

[3]சந்துரல் பெய்து [4]தகைசால் அணிமுத்தம்
வஞ்சிமகளிர் குறுவரே [5]வான்கோட்டால் ;
[6]கடந்தடு தார்ச்சேரன் கடம்பெறிந்த வார்த்தை
படர்ந்த நிலம்போர்த்த பாடலே பாடல் ;
பனந்தோடு உளங்கவரும் பாடலே பாடல்.

ஆங்கு,

நீள்நில மன்னர் நெடுவில் பொறையன்நல்
[7]தாள்தொழார் வாழ்த்தல் தமக்கரிது ; [8]சூழ்ஒளிய
எங்கோ மடந்தையும் ஏத்தினாள் நீடூழி
செங்குட்டுவன் வாழ்க என்று.

---

1. வேப்பந் தார் - வேப்பம்பூவால் தொடுத்த மாலை.
2. நெஞ்சு உணக்கும் - நெஞ்சைப் புலர்விக்கும் ; மகிழ்விக்கும் எனினுமாம்.
3. சந்து - சந்தனம்.
4. தகை - அழகு.
5. வான்கோடு - யானையின் வெண்கோடு.
6. கடந்தடுதார்ச் சேரன் - வஞ்சியாது நின்று போருடற்றும் மாலையணிந்த சேரன்.
7. தாள்தொழார் தமக்கு வாழ்த்தல் அரிது.
8. சூழ் ஒளிய - மிக்க ஒளியினையுடைய.

## ௩௰. வரந்தரு காதை

[1] வடதிசை வணக்கிய வானவர் பெருந்தகை
[2] கடவுட் கோலம் கட்புலம் புக்கபின்
தேவந்தி கையைச் செவ்விதின் நோக்கி
[3] வாய்எடுத் தரற்றிய மணிமே கலையார்?
யாதுஅவள் துறத்தற்கு ஏது? ஈங்கு உரைஎன

விருப்பத்தோடு வினவினன். அவற்கு, அத் தேவந்தி, "அரசே, மணிமேகலை யென்பவள் கோவலனுக்கு மாதவி வயிற்றில் பிறந்த மகளாவாள். அவள் வளர்ந்து காமக் குறிப்பு நிகழும் பருவம் எய்தியபோதும் அக் குறிப்பு இன்றி யிருந்தனள்; அதனால், செல்வர் எவரும் அவளைக் கொள்ளக் கருதிற்றிலர்; கூத்து முதலாயினவும் அவள் பயிலவில்லை. மாதவியின் தாயான சித்திராபதி என்பாள் இதனை மாதவி பால் சொல்லி வருந்த, அம் மாதவி தானும் அதற்கிணங் காது, மணிமேகலையைக் கணிகையர் கோலத்தே விடக் கரு தாது, அவள் கூந்தலைக் களைந்து இந்திர விகாரமடைந்து பௌத்த தருமத்தை மேற்கொள்ளச் செய்தனள். அவளும் பௌத்த தருமம் உரைக்கும் அறவண அடிகளிடம் அற மறிந்து பௌத்த பிக்குணியாயினள்; இச் செய்தியை எனக்கு அவ்வறவண வடிகளே யுரைத்தார்; இவ்வாறு அறம் கொள்ளுதற்குரிய பருவம் இல்லாத காலத்தே, அவள் அது கொண்டு மாறினளே, என்று கருதியே யான் அரற்றி னேன்" எனக் கூறினள். பின்பு அவள் பேரில் பாசண்டச் சாத்தன் என்னும் தெய்வம் ஏறி நின்றது. அவள் கூந்தல் குலைந்தது.

---

1. வடதிசை வணக்கிய - வடவாரிய மன்னரை வணங்கச் செய்த.
2. கடவுட் கோலம் - கடவுள் நல்லணி.
3. வாய்எடுத்து அரற்றிய - வாய்விட்டுக் குரலெடுத்து அழுத.

துடித்தனள் புருவம் ; [1]துவர்இதழ்ச் செவ்வாய்
[2]மடித்தெயி றரும்பினள் ; வருமொழி மயங்கினள் ;
திருமுகம் வியர்த்தனள் ; செங்கண் சிவந்தனள் ;
கைவிட்டு [3]ஓச்சினள் ; கால்பெயர்ந்து எழுந்தனள் ;
பலர் [4]அறி வாராத் தெருட்சியள் ; [5]மருட்சியள் ;
[6]உலறிய நாவினள் ; உயர்மொழி கூறி,

"மாடல, யான் பாசண்டச் சாத்தன் ; கண்ணகிக் கடவுளைப் பரவுதற்கு இங்கே வந்துள்ள மகளிருள் அரட்டன் என்னும் செட்டியின் இரட்டைப் பெண்களும், ஆடக மாடத்தில் உள்ள திருமாலுக்கு வழிபாடுபுரியும் [7]சேடக் குடும்பியின் சிறுமியும் வந்திருக்கின்றனர். அம் மூவர் பேரிலும் உன் [8]கரகத்தில் இருக்கும் நீரைத் தெளிப்பாயாக ; அது நீ மங்கலா தேவி கோயிற்கு வந்து அதன் வாயிலில் நின்றபோது என்னாற் கொடுக்கப்பட்டதன்றோ ? இந்நீர் அம் மங்கல மடந்தையின் கோட்டத்தருகிலுள்ள மலையிடத்தே இருக்கும் சுனைகள் பலவற்றுள் இடையே காணப்படும் சுனைநீர் ; வெண்கடுகும் முருக்கம்பூவும் போன்ற நுண்ணிய கற்களோடு மாவைக் கரைத்தாற்போன்ற தன்மையுடையது ; அதன் கண் மூழ்கியாடுவோர் பண்டைப் பிறப்பின் செய்திகளை யறிவர் ; இந்நீரை அவர்மேல் தெளிப்பின், மழலை மொழி வழங்கும் அம் மகளிர், பண்டைப் பிறப்புணர் வுடையராவர் ; நீயே அதனைச் செய்து, காண்" என்றாள். செங்குட்டுவன் இது கேட்டு வியந்து மாடலனை நோக்க, அவனும், தேவந்திகையின் பண்டை வரலாற்றினைக் கூறி; "பாசண்டச் சாத்தன்;

1. துவர் இதழ் - சிவந்த இதழ்.
2. எயிறு அரும்பினள் - எயிறு தோன்ற நகைத்தனள்.
3. ஓச்சினள் - கையை நீட்டி விரித்தனள்.
4. அறிவாராத் தெருட்சியள் - அறிய வாராத அறிவுத்தெளிவு உடையள்.
5. மருட்சியள் - தன் பெண்மை யறியாது பேசுவதால் மருண்டிருந்தவள்.
6. உலறிய நா - வற்றிய நா.
7. சேடக்குடும்பி - திருவடி பிடிப்பான், சடகோபம் எடுப்பவன் என்றும் கூறுவர்.
8. கரகம் - செம்பு.

[1] மங்கல மடந்தை கோட்டத் தாங்கண்
அங்குறை மறையோ னாகத் தோன்றி,
[2] உறித்தாழ் கரகமும் என்கைத் தந்து
[3] குறிக்கோள் கூறிப் போயினன் வாரான்;
ஆங்கது கொண்டு போந்தேன், ஆதலின்
ஈங்கு [4]இம் மறையோள் தன்மேல் தோன்றி
அந்நீர் தெளிஎன்று [5]அறிந்தோன் கூறினன்;
மன்னர் கோவே! மடந்தையர் தம்மேல்
தெளித்து ஈங்கு அறிகுவம்"

என்று சொல்லித் தெளித்தான். உடனே அச் சிறுமியர் மூவருள், ஒருத்தி பண்டைப் பிறவியில் கண்ணகிக்குத் தாயாகியவ ளாதலால், அந்நிலை யுணர்வே கொண்டு;

புகழ்ந்த காதலன் [6]போற்றா ஒழுக்கின்
இகழ்ந்ததற் கிரங்கும் என்னையும் நோக்காய்;
[7] ஏதில் நன்னாட்டு யாருமில் ஒருதனிக்
காதலன் தன்னொடு கடுந்துய ருழந்தாய்;

யான்பெறு மகளே, என்துணைத் தோழீ,
[8] வான்துயர் நீக்கும் மாதே! வாராய்,

என்று உரைத்தாள். மற்றொருத்தி முன்னைப் பிறவியில் கோவலனுக்குத் தாயாகியவ ளாதலால், அவ்வுணர்வே கொண்டு,

என்னோ டிருந்த [9]இலங்கிழை நங்கை
தன்னோடு [10]இடையிருள் தனித்துய ருழந்து

---

1. மங்கல மடந்தை - மங்கலா தேவி.
2. உறித்தாழ் கரகம் - உறியிடத்தே தாழ்ந்த செம்பு.
3. குறிக்கோள் கூறி - இதைக் குறிப்பாய் வைத்துக்கொள்; இது கொள்ளத் தக்கது என்று சொல்லி.
4. மறையோள் - பார்ப்பனி.
5. அறிந்தோன் - பாசண்டச் சாத்தன்.
6. போற்றா ஒழுக்கின் - பொருந்தா ஒழுக்கத்தால்.
7. ஏதில் நன்னாடு - அயலதாகிய நல்நாடு; பாண்டி நாடு.
8. வான்துயர் - மிக்க துன்பம்.
9. இலங்கு இழை - விளங்குகின்ற இழை.
10. இடையிருள் - நள்ளிருளில்.

போனதற் கிரங்கிப் புலம்புறும் நெஞ்சம் ;
யான்அது பொறேஎன் ; என்மகன், வாராய்,

என்று வருந்தினாள். மூன்றாமவள் பழம்பிறப்பில் மாதரியாதலால், அவளது உணர்வே தலைக்கொண்டு,

வருபுனல் வையை [1]வான்துறைப் பெயர்ந்தேன் ;
[2] உருகெழு மூதூர் [3]ஊர்க்குறு மாக்களின்
வந்தேன், கேட்டேன், மனையிற் காணேன்
எந்தாய், இளையாய், யாங்கு ஒளித்தாயோ ?

என்று சொல்லிப் புலம்பினள். இவ்வாறு இம்மொழி நிரம்பாச் சிறுமியர் முதியோர்போல மொழிந்து அரற்றக் கண்டு வியப்புற்ற குட்டுவன், மீட்டும் மாடலன் முகத்தை நோக்க, அவன், தன் உண்மை யுணர்வால் உற்றதை யுணர்ந்து, “இச் சிறுமியர் மூவரும் முன்னைப் பிறவியில், கோவலன் மனைவியாகிய கண்ணகியார்பால் பேரன்பு கொண்டிருந்தவர் ; ஆயினும், விண்ணுலகு புக்க அவரோடு தாமும் செல்வதற்கேற்ற நல்லறத்தைச் செய்யாமையால், இம்மகளிர் இருவரும் அரட்டன் செட்டிபால் இரட்டைப் பெண்களாய்ப் பிறந்தனர். மாதரி, கோவலன் கண்ணகி என்ற அவர்பால் மிக்க அன்பு கொண்டிருந்ததோடு, திருமால் பொருட்டுக் குரவைக் கூத்தாடிய நல்வினை யுடையவளாய் இருந்ததனால், அத் திருமாலின் திருவடி பிடிப்பான் குடியில் பிறந்தாள். இவர் பிறப்பால்,

நல்திறம புரிந்தோர் [4]பொற்படி எய்தலும்,
[5] அற்புளம் சிறந்தோர் [6]பற்றுவழிச் சேறலும்,
அறப்பயன் விளைதலும், மறப்பயன் விளைதலும்,
பிறந்தவர் இறத்தலும், இறந்தவர் பிறத்தலும்,

---

1. வான்துறைப் பெயர்ந்தேன் - பெரிய நீர்த்துறைக்குச் சென்றேன்.
2. உருகெழு மூதூர் - அழகு பொருந்திய மதுரை.
3. ஊர்க்குறு மாக்கள் - ஊர்ச் சிறுவர்கள்.
4. பொற்படி - பொன்னுலகம்.
5. அற்புளம் - அன்புற்ற உள்ளம்.
6. பற்றுவழிச் சேறல் - நிலத்தே பற்றுள்ளவிடத்தே பிறத்தல்.

புதுவ தன்றே ; [1]தொன்றியல் வாழ்க்கை ;
ஆனேறு ஊர்ந்தோன் அருளில் தோன்றி,
மாநிலம் விளக்கிய மன்னவன் ஆதலின்,
செய்தவப் பயன்களும், சிறந்தோர் படிவமும்,
[2] கையகத் தனபோல் கண்டனை யன்றே ;
ஊழிதோ றூழி உலகம் காத்து
நீடு வாழியரோ, நெடுந்தகை !

என்று சொல்லி முடித்தான். இது கேட்டு மகிழ்ந்த செங் குட்டுவன், கண்ணகிக் கடவுட்கு நாடோறும் பூசனைக்கேற்ற ஏற்பாடுகளையும் விழாவுக்குரியவற்றையும் மேதகச் செய்து, பூவும் புகையும் விரையும் தேவந்திகையைச் செய்யுமாறு பணித்துத் தானும் அக்கோட்டத்தை மும்முறை வலம்வந்து வணங்கி நின்றான். அவன் முன்பு,

அருஞ்சிறை நீங்கிய ஆரிய மன்னரும்,
[3] பெருஞ்சிறைக் கோட்டம் பிரிந்த மன்னரும்,
குடகக் கொங்கரும், மாளுவ வேந்தரும்,
கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும்

கண்ணகியாரை வணங்கிப் பரவி, "இச் சேரமான் செய் யும் நாளணிபோல, யாம் செய்யும் நாளணி வேள்வியினும் எழுந்தருளி வரம்தர வேண்டும்" என வேண்டினர். அப் போழ்தில் வானத்தே ஒரு குரல் எழுந்து, "தந்தேன் வரம்" என்று மொழிந்தது. இக்குரல் கேட்ட மன்னர் கூட்டத்தே பெரு மகிழ்ச்சிப் பேரொலி யெழுந்தது. பின்பு மன்னர் அனைவரும், மாடல மறையோனுடன் கண்ணகியின் திருவடியில் வீழ்ந்து பரவினர். அவருடன் (இந்நூலை யெழுதும் இளங்கோ ஆகிய) யானும் சென்றிருந்தேன். என் எதிரே, தேவந்திகைமேல் கண்ணகித் தெய்வம் தோன்றி,

வஞ்சி மூதூர் மணிமண் டபத்திடை
நுந்தை [4]தாள்நிழல் இருந்தோய், நின்னை

---

1. தொன்றியல் வாழ்க்கை - பழைதாகி இயல்கின்ற வாழ்க்கை.

2. கையகத்தனபோல் - கைமேற் கண்டது போல.

3. பெருஞ்சிறைக் கோட்டம் பிரிந்த மன்னர் - பண்டே வஞ்சியில் சிறைப்பட்ட மன்னர்.

4. தாள்நிழல் - ஆதரவில், உடன் (இருந்தபோதில்)

அரைசு வீற்றிருக்கும் [1]திருப்பொறி உண்டென்று
[2]உரைசெய் தவன்மேல் உருத்து நோக்கி,
[3]கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தேர்த் தானைச்
செங்குட்டுவன்தன் [4]செல்லல் நீங்க
[5]பகல்செல் வாயில் [6]படியோர் தம்முன்
அகலிடப் [7]பாரம் அகல நீக்கிச்
சிந்தை செல்லாச் சேண்நெடுந் தூரத்து
அந்தமில் இன்பத்து அரசாள் வேந்து !என

என் திறம் உரைத்தனள் ; யானும் இந்நூலால் அவள் திறமும் இதுகாறும் உரைத்துப் போந்தேன். யான் கூறிய இத் திறத்தைக் கேட்ட,

[8]திருத்தகு நல்லீர்,
[9]பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின் ;
தெய்வம் தெளிமின் ; தெளிந்தோர்ப் பேணுமின் ;
பொய்யுரை அஞ்சுமின் ; [10]புறஞ்சொல் போற்றுமின் ;
ஊனூண் துறமின் ; உயிர்க்கொலை நீங்குமின் ;
தானம் செய்ம்மின் ; தவம்பல தாங்குமின் ;
செய்ந்நன்றி கொல்லன்மின் ; தீநட்பு இகழ்மின் ;
[11]பொய்கரி போகன்மின் ; பொருண்மொழி நீங்கன்மின்;
அறவோர் அவைக்களம் அகலாது அணுகுமின் ;
[12]பிறவோர் அவைக்களம் பிழைத்துப் பெயர்மின் ;
பிறர்மனை அஞ்சுமின் ; [13]பிழையுயிர் ஓம்புமின் ;

---

1. திருப்பொறி - அரசாளுதற்குரிய குறிகள்.
2. உரை செய்தவன் - சொன்ன நிமித்திகன்,
3. கொங்கு - தேன்.
4. செல்லல் - துன்பம்.
5. பகல் செல் வாயில் - கிழக்கு வாயில்.
6. படியோர் - நிலத்தவர்.
7. பாரம் - அரசபாரம்.
8. திருத்தகு நல்லீர் - நல்வினைப் பேற்றினையுடைய நல்லோர்களே.
9. பரிவு - துன்பம்.
10. புறஞ்சொல் - புறம் கூறும் சொல்.
11. பொய்க்கரி - பொய்ச் சான்று.
12. பிறவோர் - அறவுணர்வில்லாத பிறர்.
13. பிழையுயிர் - மரிக்கிற உயிர்.

[1] அறமனை காமின் ; அல்லவை கடிமின் ;
கள்ளும், களவும், காமமும், பொய்யும்,
[2] வெள்ளைக் கோட்டியும் [3]விரகினில் ஒழிமின் ;
இளமையும், செல்வமும், யாக்கையும் நிலையா ;
[4] உளநாள் வரையாது, [5]ஒல்லுவது ஒழியாது,
செல்லும் தேஎத்துக் குறுதுணை தேடுமின்.



1. அறமனை - மனையறம்
2. வெள்ளைக் கோட்டி - பயனில்லாத சொற்களைச் சொல்லும் கூட்டம்.
3. விரகினில் - ஒழித்தற்குரிய சூழ்ச்சியால்.
4. உளநாள் - உள்ள நாள்.
5. ஒல்லுவது ஒழியாது - சாரக்கடவவான இன்ப துன்பங்கள் சார்வது நீங்காது.

## நூற் கட்டுரை

குமரி வேங்கடம் குணகுட [1]கடலா
[2]மண்திணி மருங்கின் [3]தண்தமிழ் வரைப்பில்
[4]செந்தமிழ் [5]கொடுந்தமிழ் என்று [6]இருபகுதியின்
[7]ஐந்திணை மருங்கின் அறம்பொருள் இன்பம்
மக்கள் தேவர் என இரு சார்க்கும்
ஒத்த [8]மரபின் [9]ஒழுக்கொடு [10]புணர
[11]எழுத்தொடு புணர்ந்த சொல்அகத் தெழுபொருளை
[12]இழுக்கா யாப்பின் அகனும் புறனும்
அவற்று வழிப்படும் [13]செவ்விசிறந் தோங்கிய
[14]பாடலும் [15]எழாலும் [16]பண்ணும் [17]பாணியும்
[18]அரங்கு [19]விலக்கே [20]ஆடல்என்று அனைத்தும்
ஒருங்குடன் தழீஇ [21]உடம்படக் கிடந்த

---

1. கடலா - கடல் எல்லையாக.
2. மண்திணி மருங்கு - மண் திணிந்த நிலவுலகு.
3. தண் - இனிய.
4. செந்தமிழ் - செந்தமிழ் நாடு.
5. கொடுந்தமிழ் - கொடுந்தமிழ் நாடு.
6. இருபகுதியின் - இரு பகுதியினும் அமைந்த வென்க.
7. ஐந்திணை - குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை.
8. மரபின் - தன்மையினையுடைய.
9. ஒழுக்கு - நல்லொழுக்கம்.
10. புணர - பொருந்த.
11. எழுத்தும் அவ்வெழுத்தினலாய சொல்லும் என்றற்கு 'எழுத்தொடு புணர்ந்த சொல்' எனப்பட்டது.
12. இழுக்கா யாப்பு - எழுத்து சொல் பொருள் என்னும் மூன்றிலக்கணத்தினின்றும் வழுவுதலில்லாத செய்யுட்கள்.
13. செவ்வி - அமைதி.
14. பாடல் - பாட்டு.
15. எழால் - யாழ்.
16. பண் - இசை.
17. பாணி - தாளம்.
18. அரங்கு - ஆடரங்கு.
19. விலக்கு - இசை, நாடக நூல்களில் ஆகாவென விலக்கிய விலக்குகள்.
20. ஆடல் - கூத்து.
21. உடம்பட - ஒற்றுமை யெய்த.

[1] வரியும் [2]குரவையும் [3]சேதமும் என்றுஇவை
தெரிவுறு வகையால் செந்தமிழ் [4]இயற்கையில்
[5] ஆடிநன் [6]னிழலில் நீடிருங் குன்றம்
காட்டு வார்போல் கருத்து வெளிப்படுத்து
[7] மணிமேகலை மேல் [8]உரைப்பொருள் முற்றிய
சிலப்பதிகாரம் முற்றும்.

---

1. வரி - வரிப்பாட்டு.
2. குரவை - குரவைக் கூத்து.
3. சேதம் - கூத்து.
4. இயற்கையில் - மரபால்.
5. ஆடி - கண்ணாடி.
6. நிழல் - ஒளி.
7. நான்கு உறுதிப் பொருள்களுள் சிலப்பதிகாரம் அறம் முதலிய மூன்றும் மணிமேகலை வீடுங் கூறுதலின் மணிமேகலைமேல் உரைப்பொருள் முற்றிய சிலப்பதிகாரம் என்றார்.
8. உரைப்பொருள் - உரைத்தற்குரியதாகிய பொருள்.

